அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–१६

## ( श्रीशिवानन्दलहरी )



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா 16

## ( ஸ்ரீ சிவானந்தலஹரீ )

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்.



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஆசார்ய ஸார்வபௌமாளான சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹ பலத்தால் அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதியிலிருந்து வெளியிடப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவில் இது 16-வது மலர். இதில் சிவானந்தலஹரி முழுவதும் வழக்கம்போல் பதவுரை – கருத்துரைகளுடன் வெளி வந்துள்ளது. காவ்ய ரஸத்துடன் கூடி படிப்பவர் மனத்தை பக்தி பரவசமாகச் செய்யும் இந்த ஸ்தோத்திரத்தின் பெயர் 2-வது சுலோகத்தில் ஸ்ரீ பகவத்பாதாளால் குறிக்கப்பட்டுள்ளது.

சென்னை ஸர்வகலாசாலை வேதாந்தப் பேராசிரியர் ஸ்ரீ T M P. மஹாதேவன் அவர்கள் சிவானந்தலஹரிக்கு ஆங்கிலத்தில் ஓர் உரை எழுதியுள்ளார்கள். அது தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு இதில் சேர்க்கப்பட்டு உள்ளது. தமிழில் மொழி பெயர்த்து கிரந்தமாலாவில் பிரசுரிப்பதற்கு அனுமதிகொடுத்த ஸ்ரீ T. M. P. மஹாதேவன் அவர்களுக்கும், தமிழில் மொழி பெயர்த்தும் பதவுரை எழுதிக்கொடுத்தும் உதவிய நெரூர் ஸ்ரீ வெங்கடரமண சாஸ்திரிகள் அவர்களுக்கும், நெரூர் ஸ்ரீ N S. சிவஸுப்ரமண்யய்யர் அவர்களுக்கும் சங்கர ஸேவா ஸமிதியின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். விரிவான முன்னுரையும் சேர்க்கப்பட்டு

ஸ்ரீ தக்ஷிணாம்நாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீ மஹா ஸ்வாமிகள் மதுரைக்கு விஜயம் செய்திருக்கும் பொழுது க்ரோதி மாசி-மீ 18உ (1–3–65) ஸோமவாரம் சிவராத்ரி நன்னாளில் ஸ்ரீ லோக குரு சரணாரவிந்தங்களில் ஸமர்ப்பிக்கப்பட்டு இது வெளியிடப்பட்டுள்ளது.

K. V. சுப்பரத்னம், B. A., B. L.,
(அட்வொகெட் ஈரோடு)
பொதுக்காரியதர்சி,
அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி.

# முகவுரை

சிவானந்தலஹரி, ஆதிசங்கரரால் அருளப்பட்டது என்பது பரம்பரை. அழகிய பாருளும் உருவும் பெற்ற பாமாலை. அதில் 98-வது சுலோகத்தில், ஆசிரியரே இப் பாமாலையின் சிறப்புகளைக் குறிக்கின்றார். அதில் மிகை சிறிதுமில்லை. சிலேடையுடன் கூடிய இப்பாமாலை, இறைவனது திருவருளைப் பெற, அவனுக்கே அர்ப்பணம் செய்யப்படுகின்றது. எல்லாச்சிறப்புகளும் பொருந்திய மணமகளாகும் இதை ஏற்றுக்கொள்ள, அவன் வேண்டப் படுகிறான். நடையும் பொருளும் இரண்டும் அலங்கரிக்கப் பட்டுள்ளன. ஏறியிறங்கும் ஓசையும் தெய்வீக இசையும் படிப்பவரின் இதயத்தை உயர்நிலைக்கெழுப்பும். இதிலுள்ள பேருண்மைகள் மனதை எழுப்புகின்றன. கலங்கி நிற்கும் ஆத்மாக்களுக்கு இரங்கி ஸ்ரீ சங்கரர் இந்த நூறு பாக்களைக் கொடுத்துள்ளார். அதை வழித்துணையாகக் கொண்டு, நிறைவையடைய அது உதவுகின்றது.

சிவானந்தலஹரி சிவனைப்பற்றியமைவதால், சிவனின் பெருமை ஒவ்வொரு பாவிலும வற்புறுத்தப்படுகின்றது. சிவனுடைய கருணை, அருள் இவைகளை விளக்கும் புராணங் களிலுள்ள சம்பவங்களெல்லாம் பாக்களில் குறிக்கப்படு கின்றன. வேத பண்டிதர்களில் சிலர், ருத்ரன் கொடிய தேவனென்றும், தனக்கு வேண்டாதவர்களையும் பிறரையும் கெடுக்கவுள்ளவனென்றும், எதிர்மறையாக அவனை சிவ னென்று அழைப்பதாகவும் கொள்கின்றார்கள். ஒருவர் ருத்ர-சிவன் பயப்படத்தகுந்த தேவனென்றும், விஷ்ணு-நாராயணன், அன்பு செய்யப்படவுள்ள தெய்வம் என்றும் குறிக்கின்றார். இந்நூலின் பகுதிகளைப் படிப்பவர்களுக்கு இவ்வாறு கொள்வதற்கிடமில்லையென்பது விளக்கமாகும். மங்களத்திற்கு மூலமென்றும், மங்களமானவைகளைச் செய்பவனென்றும், மங்களமே என்றும் சிவானந்தலஹரி விளக்குகின்றது. ஆத்மாக்களை ரக்ஷிப்பவர் சிவன்.

ஆத்மாவிற்கு மோக்ஷமாகும் பெருநலத்தைக் கொடுக்கவுள்ளது.

இந்நூலின் உட்பொருள் இறைவனிடத்து பற்று (பக்தி) ஆன்மிகப் பயிற்சியில் பக்தியின சிறப்பையும், பக்தியின் தன்மையையும் ஆசார்யா சங்கரர், பல இலக்கியத் துறைகளேயும் பயன்படுத்தி வற்புறுத்துகின்ருர். பக்தியென்பதே மனப்போக்குகளே ஒருமுகப்படுத்தி அவைகளே இறைவனே நாடவிட்டு அவ்விடத்திலே பதிப்பதாகும். சிந்தித்தல, உணர்தல், விரும்புதல் இவை மனதின் முக்கிய வேலேகளாகும். இப்பலவும் இறைவனே அடைவதை இலட்சியமாகக் கொண்டால், அதுவே பகதியாகும். இந்த உண்மையைப் போதிக்க சங்கரர், மனதைப் பலவற்றுடன் ஒப்பிட்டு அலங்கார மொழியை உபயோகிக்கின்ருர். உயிருள்ளன, உயிரற்றன இவைகளினின்றும், பலவகை உயிர்களினின்றும் பாடங்களேப்புகுத்துகின்ருர். மனோநிலேயை பல சொற்களேக்கொண்டும் விளக்குகின்ருர். சிததம், சேதஸ், புத்தி மனஸ், இருதயம் என்பன மனதின் உணர்ச்சி நிலேயைக் குறிப்பன. த்ருதி என்பது மனோவலிவைக் குறிக்கவுள்ளது. பல உதாரணஙகளேக் கொடுத்து, மனதின் பல செயல்களும் இறைவனேச் சாாந்ததாக இருக்க வேண்டுமென்கிருர்.

61-வது சுலோகத்தில் பக்தியை விரிக்க, சதா மனது இறைவனே நாடிநிற்பதை, (1) அங்கோலமரத்தின் விதைகள் அடிமரத்தையும், வேரையும் நெருங்கி விழுந்து அவை அதனுடன் பற்றிக்கொள்வதையும் (2) காந்தத்தை இரும்புக் கணுக்கள் பறறிக்கொள்வதையும், (3) கற்புடை மனேவி கணவனிடம் விடாது அன்பு கொள்வதையும் (4) கொடி அயலிலுள்ள ஒரு மரத்தைப் பற்றிக்கொள்வதையும், (5) ஆறு கடலே நோக்கி ஓடுவதையும் உவமிக்கின்ருர். ஒரே நோக்குடனும் விடாதும் அங்கு காணப்படும் பற்று மனதில் உதிக்கவேண்டும். இந்த உதாரணஙகளில், சிறியது பெரியதைப் பற்றியே நிற்கின்றது. அதேபோல மனது இறைவனேப்பற்றி நிற்கும்பொழுது, பக்தி நிறைகின்றது.

பக்தனுக்கு இறைவனன்றி வேறு முடிவில்லை. பக்தி நிறைந்த மனது இறைவனை நாடுவதை, ஹம்ஸ பக்ஷி தாமரைக் குளத்தையும், சாதகம் மேகத்தையும், சக்ரவாகம் சூரியனையும் சகோர பக்ஷி சந்திரனையும் நாடுவதற்கு உவமிக்கின்றார். பக்தி நிறைந்த மனது நான்கு வகைப் பறவைகளுக்குச் சமமாக கூறப்படுகின்றது. ஒவ்வொரு வகைப் பறவையும் தன்னை உயிர்விக்கும் பொருளையே நாடுகின்றது. ஹம்ஸ பக்ஷி தாமரைத்தண்டைத் தின்று உயிர் பிழைக்கின்றது. சாதகபக்ஷி மழைத்துளிகளையே குடித்து உயிர்வளர்வது, சக்ரவாகப் பறவை சூரியோதயத்தை நாடியே உயிர் வாழ்வது. சகோரப்பறவை சந்திரனின் கிரணங்களைப்பெற்று வாழ்வது இவைகளைப்போல பக்தனின் மனது இறைவனிடமே உயிரைப்பெறுகின்றது, பிறவற்றிலன்று (59)

உலகப்பற்றுடையவர் மனது எளிதாக இறைவனிடம் செல்லுவதில்லை. குரங்கைப்போல ஒரு ஆசையைவிட்டு மற்றொன்றிற்குத் தாவுகின்றது. ஆயின் சிவன் பக்தி என்ற கயிற்றால் அதைக் கட்டினால், அது அவனுடைய சொல்லிற்கிணங்க நடந்து அவனுக்கு உதவ நிற்கும் (20) மனது திருடனைப்போன்றது, முறையற்றவழிகளில் செல்வம் திரட்ட நாடுவது, பேராசையும், பற்றுள்ளமும், அதைத் தம் வசத்துவைத்துக் கொள்கின்றன. அது தர்மத்திற்கு மாறான வழியில் ஓட்டப் படுகின்றது. இந்தத் திருடனைப் பெருந் திருடனாகும சிவனன்றி யார் அடக்க முடியும்? அவனே நம்மைக் காப்பாற்ற முன் வந்து, நம் திருடனாகும் மனதை அடக்கி அதைக்கட்டுப்படுத்தி வைக்க வேண்டும் (22) மனது வலிவுள்ளது, பழக்கப்படாத யானைபோன்று கட்டுக்கடங்காதது. மதம் பிடித்த ஆனை போன்று மனது எல்லா திக்குகளிலும் சுற்றுவது. சிவனே அதை சாமர்த்தியமாக பக்தியென்னும் கயிற்றால் கட்டி, தைர்யமென்னும் ஈட்டியால அதை தன் அடிகள் என்னும் முளையில் கட்டவேண்டும். அப்பொழுதே அது சுற்றியலையாது (96, 97) மனம் கொடிய விலங்குகள் வசிக்கும் காட்டைப்போன்றது. [illegible]

சிவன் புராதனவேடன். விலங்குகள் மிகுந்த காடுகளில் வேட்டையாடவல்லவன். என் மனதில் வேட்டையாடி மகிழட்டும். (43) மனது பழைய ஸம்ஸ்காரங்கள் நிறைந்தது. துர்க்கந்தம் வீசும ஒரு பழைய பெட்டியைப்போன்றது. அந்தக்கெட்ட நாற்றங்களை ஓட்டி தெய்வீக மணங்கள் வீசும்படி சிவனே செய்யவேண்டும். தன்னருளால சிவன், மனதினின்று, ஆசை, மயககம், குரோதம் இவைகளை அகற்றவேண்டும். (74)

ஒருவன் இறைவனுக்குத் தன் மனதையும் இதயத்தையுமே சமர்ப்பிக்கவேண்டும். பக்தன் புறத்தமரும் மலர்களைத்தேடி அலைவானேன்? மலர்களைத்தேடி வனங்களையும், மலைகளையும், குளங்களையும் நாடுவானேன்? இதயகமலமே இறைவனுக்குகந்தமலர் (9) அதை சமர்ப்பிக்குமபொழுதே இறைவன் பக்தனின் எல்லாப் பொறுப்புகளையும் ஏற்றுக்கொள்கின்றான். (11) இறைவனுக்கும் தேனீயை இதய மலரில் திளைக்க அழைப்போமாக (51) நடுமரத்தில் ஈர்க்கப்பட்டு சுற்றி கயிறால் இழுத்து கட்டப்பட்டிருக்கும், ஆனால் வேண்டும்பொழுது அகற்றக்கூடிய அழகான அலங்காரங்களுடன் அமைந்து சுத்தமாக இருக்கும் இந்த இதய கூடாரத்தில் இறைவன் அமரட்டும் (21) ஏன் இன்னும் இறைவன் தன் ரிஷப வாஹனத்தை நாடவேண்டும்? அவனே உலகங்களுக்கெல்லாம் தலைவன். எலலாச் சிறப்புகளையும் பெற்ற எனது இதயமென்னும் குதிரை மீது அவர் ஏன் சவாரி செய்யலாகாது? (75) எமனை மார்பில் உதைப்பது, அபஸமாரத்தை அழிப்பது, கைலாயமலையில் நடப்பது, தேவர்களின் கிரீடங்கள் காலில்பட நடப்பது முதலிய கடினமான வேலைகளைச் செய்கின்றார் சிவபெருமான். காலணியுமின்றி அவர் எப்படி இவைகளைச் செய்யக்கூடும்? இவ்வளவு அடியையும் தாங்கும் அலங்கரிக்கப்பட்ட இந்த இதயச்செருப்பை அணிந்துகொள்ளட்டும் (64) சிவன் கோட்டைகளில் வசிக்க விரும்புகின்றார். தகர்க்கமுடியாததும், நன்று காவலமைந்ததும் பல சௌகரியங்களுமுடையதான இதயக் கோட்டையில் அவர் ஏன் வசிக்கக்கூடாது? இங்கே அவர்

தங்கட்டும் (42) சிங்கமாகும் சிவன், மனமாகும் குகைக்கு வந்து தங்கினால் எனக்கு ஒரு பயமுமில்லை. (44) மனக் கமலமாகும் தலைநகரத்தில் மன்னருக்கு மன்னனுருபவன், தன் ஆசனத்தை அமர்த்திக்கொண்டால், எல்லாம் நன்ருகும், சீலம் செழிக்கும், பாபம் பறந்தோடும், குரோதங்கள் பட்டொழியும், பெண்யுகம் நிலைபெற்று, சுபிட்சம் தலையெடுக்கும் (39) சந்திரனுகும் சிவன் இதயமாகும் ஆகாயத்தில் அமர்ந்தால் ஆனந்தக்கடலின் அலைகள் பொங்கும், நல்லோர் பெருமகிழ்ச்சியடைவார்கள் (38) மனதைப் பாத்திரமாக்கி, அதில் ஆனந்த அமிர்தத்தை நிறைத்து, இறைவனடிகளை அதன்மீது மாவிலைகளாக வைத்து, ஞானமென்னும் தேங்காயை அதன்மீது வைத்து நாம் 'புண்யாஹவாசனம்' செய்வோம். இறைவன் திருநாமத்தையே சொல்லுவோம். (36)

மனது இறைவனுக்குப் பணி செய்யத் தகுந்த கன்னிப் பெண். அப்பணிக்கு வேண்டிய தகுதிகள் நிறைந்தவள். அவள் கௌரிக்கு துணைவியாக ஏற்றுக்கொள்ளப்படட்டும் (84) கணவனைவிட்டுப் பிரிந்திருக்கும் மனைவியைப்போல மனது விடாது சிவனையே சிந்தனை செய்கின்றது, அதில் அழிந்தும் படுகின்றது. சிவனென்ற நாமமே அவளை மாற்றியமைக்கின்றது. அவள் திறன்களெல்லாம் சிவனையே நாடுகின்றன. (77) சிவபெருமான் தாழ்த்தாது உடனே மனதென்னும் மணமகளை ஏற்றுக்கொள்ள வேண்டும். சிவனே அவளுக்குப் பாடம் கற்பிக்கவும் பழக்கவும் வேண்டும். அவள் நன்மையை நாடுகின்ருள், நல்லிதயம் பெற்றவள், பணிவுடையவள், அவளுக்குப் பணிவிடை செய்யவும் தெரியும், அவள் இறைவனையே தலைவனுகப் பெற முற்றும் தகுதியுள்ளவள். (78)

பொறுமையாகவும் விழிப்புடனும் பக்தியை வளர்க்க வேண்டும். இதயமென்னும் வயலில், சிவகதைகளின் அமிருதமென்னும் நீரைப் பாய்ச்சவேண்டும். கவிதை என்னும் சிறு கால்கள் வழியாக அறிவென்னும் ஏற்றத்தால் இறைக்கப்பட்ட நீரைப் பாய்ச்ச பெருவிளைவு உண்

டாகும். பஞ்சம் என்று பயப்படவேண்டியதில்லை. (40) இதயம் ஒரு பூந்தோட்டம், தியானமே வசந்தகாலம். இக்காலத்தில பல, பழைய இலைகளை உதிர்த்த (பாவங்களை போக்கிய) செடிகொடிகள் அறமென்னும் துளிர்களை விடுகின்றன. சிவ நாமங்கள் மொட்டுகள், இனிய மணத்தை வீசுகின்றன. (நன்மையை மனதில் பதிப்பிக்கின்றன) அறிவும் ஆனந்தமும் அலர்ந்த மலர்கள். அவை அழிவற்ற தேனைக்கொண்டுள்ளன. பக்திக்கொடிகள் கொடுக்கும் அரும் பழம் ஆத்மாநுபவம். (47) பக்திக்கொடி படர்ந்து காய்க்க மனது பந்தலைப்போல அமைகின்றது. (49) மனது ஒரு குளம்போன்றது, பக்தியென்னும் மேகத்தினின்று இழியும் மழையால் நிறையும்பொழுது வாழ்க்கை பயனுள்ளதாகின்றது, மற்றவழிகளாலல்ல (76) சிவகதை என்னும் ஆற்றில் சிவானந்தம என்னும் வெள்ளம் பொங்கி வரும் பொழுது, பாபம் அடிக்கப்பட்டுப் போகின்றது. அறிவென்னும் கால்வாய்வழி பாய, பிறவி என்னும் துக்கம் விட்டுப்போகின்றது. மனது என்னும் குளம் நிறைந்து விடுகின்றது. (2)

சில பாக்களில் மனதை, ஒரு அம்ஸம் போன்றமைத்து அதை இறைவனடிகளை நாடப்பணிக்கின்றார். இறைவனின் பாதங்கள், அவர் கால் நகங்களாலும் வளர்பிறைச் சந்திரனுலும், பதிப்பிக்கப்பட்ட இரத்தினங்களால் வெளிச்சம்பெற்ற மாளிகை போன்றுள்ளது. மனதென்னும் ராஜஹம்ஸம் இந்த மாளிகையை அடையட்டும். பறவையாகும் மனது வீணுகச்சுற்றியலேயாமல் இறைவனின் பாதங்களாகும் கூட்டில் பதுங்கட்டும். அங்கு அதற்கு திருப்தியும் நலமும் கிட்ட, துக்கமும் அலைச்சலும் அற்றுப் போகும். (45, 46) சிவத்தியானம் என்ற குளத்தை மனமென்னும் ஹம்ஸம் நாடட்டும். அது என்றைக்குமாய ஆனந்தவெள்ளம் நிறைந்துள்ளது. அக்குளத்திலே தேவர்கள் ரிஷிகள் இவர்களின் இதய கமலங்கள் மலர்கின்றன. அதை விட்டுத் தாழ்ந்தோருக்கு அடிமைப்படும் சேற்றுக் குளத்திற்கு மனஹம்ஸம் போவானேன்? (48)

அத்வைத அநுபவமே, சிவபக்திக்கும் சிவதியானத்திற்கும் இலட்சியமாகும். சகுண உபாசனையாலும் அத்வைத இலட்சியத்தை அடையலாம். வேதாந்தப் படிப்பினாலும் அடையலாம். ஆசார்ய சங்கரர் சிவானந்த லஹரியில் பிரம்மானுபூதிக்கு சைவமுறையையே ஏற்றுக் கொள்ளுகின்றார். சமஸாரபந்தங்கள் அறுபடும் பொழுது ஆத்மாநுபூதி உண்டாகின்றது. பந்தங்கள், மாயை அகலவும் அகன்று விடுகின்றன. மாயையை விட ஞானம் வேண்டும் ஞானம் இறைவனின் அருளால் உண்டாகின்றது. அத்வைதத்தில், இறைவனுக்கு இடம் இல்லையென்றோ, பக்தியில்லையென்றோ கொள்வது பிழைபட்டது. "இறைவன் அருளாலேயே அத்வைதத்தில் பற்று ஏற்படுகின்றது - இருவருக்கோ மூவருக்கோ – அது அவர்களை பெரும்பயமாகும் சம்ஸாரத்தினின்று காப்பாற்றுகின்றது" என்ற ஒரு [1]சுலோகம் உள்ளது.

பகவான் ஸ்ரீ ரமணர், சிவானந்த லஹரியின் சார சங்கிரகம் தொகுத்துள்ளார். அதில் அவர் வைப்பு முறையில் பத்து சுலோகங்களே உள்ளன. அப்பத்து சுலோகங்களின் எண்ணிக்கை 61, 76, 83, 6, 65, 10, 12, 9, 11, 91 ஆகும். 61ல் பொருத்தமான உதாரணத்துடன் பக்தி விளக்கப்படுகின்றது. பக்தி விடாது இறைவனைச் சிந்திப்பதே யாகும். (76) மனதில் பக்தி நிறையும்பொழுது வாழ்க்கை நிறைவானதாகவும் பயனுள்ளதாகவும் ஆகின்றது. (83) எது வரையறைக்குட்பட்டதோ, அதை பக்தி செய்வதில் பயனில்லை. பரம்பொருளாகும் இறைவனை பக்தி செய்வதே வேண்டப்படுவது (6) தர்க்கம் பக்திக்கு ஈடாகாது. வாதத்தில் திறமை சுகத்தைக்கொடுப்பதில்லை. அது மனதை ஓயவைக்கும் (65) பக்தனுக்கு வெறுப்பென்பதில்லை. அவன் சாவையும் மறுத்துவிடுகின்றான். அவனை தேவர்களும் போற்றுகின்றார்கள். (10) முக்கியமாவது பக்தி, பிற கருதற்குரியவையல்ல (12) ஒருவன், எம்முறை

1. ईश्वरानुग्रहादेव पुंसामद्वैतवासना ।
महाभयपरित्राणा द्वित्राणामुपजायते ॥

யிலும் வாழலாம், ஆனால் உண்மை யோகம் இறைவனுக்கு பக்தியே யாகும். (9) மலர்களால் பூசிப்பது பக்தியன்று, இதயத்தை இறைவனுக்கு சமர்ப்பிப்பதே பக்தி (11) வாழ்க்கையின் எந்நிலையிலும் ஒருவன் பக்தனாக இருக்கலாம், ஆயின் தன்னை இறைவனிடம் ஒப்படைக்க வேண்டும். அவனுடைய சுமைகளை இறைவன் சுமந்து கொள்கின்றார். (91) பக்தியின் முடிவு மோக்ஷம் இறைவனுக்குச் செய்யும் பக்தி, அஞ்ஞானம் என்னும் இருளை நீக்கி, ஞானம் என்னும் ஒளியை வீசுகின்றது.



|| श्रीः ||

# ॥ शिवानन्दलहरी ॥

## சிவானந்தலஹரீ

(அ) இந்நூல் இடையூறன்னியில் முடிவடைய முதலில் உமா மஹேசுவரர்களை வணங்குகிறார்:—

कलाभ्यां चूडालंकृतशशिकलाभ्यां निजतपः-
फलाभ्यां भक्तेषु प्रकटितफलाभ्यां भवतु मे ।
शिवाभ्यामस्तोकत्रिभुवनशिवाभ्यां हृदि पुन-
र्भवाभ्यामानन्दस्फुरदनुभवाभ्यां नतिरियम् ॥ १ ॥

கலாப்யாம் சூடாலங்க்ருத ஶஶிகலாப்யாம் நிஜதப:—
பலாப்யாம் பக்தேஷு ப்ரகடிதபலாப்யாம் பவது மே ।
ஶிவாப்யாமஸ்தோகத்ரிபுவநஶிவாப்யாம் ஹ்ருதி புந:
பவாப்யாமாநந்தஸ்புரதநுபவாப்யாம் நதிரியம் ॥

**कलाभ्यां**—வேதத்தில்கூறிய ஸகலவித்யாஸ்வரூபர்களாயும், **चूडालंकृतशशिकलाभ्यां**—சிரஸ்ஸில் அலங்கரிக்கப்பட்ட சந்திரகலையையுடையவர்களாயும், **निजतपःफलाभ्यां**—தங்கள் தங்கள் தவப்பயனாக இருப்பவர்களாயும், **भक्तेषु**—பக்தர்களிடத்தில், **प्रकटितफलाभ्यां**—காண்பிக்கப்பட்ட பலனை உடையவர்களாயும், **अस्तोक त्रिभुवन शिवाभ्यां**—மூவ்வுலகிலும் அதிகமான பலனுக்குக் காரண பூதர்களாயும், **हृदि**—ஹ்ருதயத்தில், **पुनर्भवाभ्यां**—அடிக்கடி தோற்றமளிப்பவர்களாயும், **आनन्दस्फुरदनुभवाभ्यां**—ஆனந்தத்துடன் விளங்கும் ஸ்வாத்மானுபவமுள்ளவர்களாயுமிருக்கிற, **शिवाभ्यां**—உமா மஹேச்வரர்களின் பொருட்டு, **मे**—என்னுடைய, **इयं नतिः** இந்த நமஸ்காரம், **भवतु**—இருக்கட்டும்.

என்னுடைய நமஸ்காரங்கள் மங்களமான இருவருக்கும் (சிவன், பார்வதி இவர்களுக்கு) ஆகட்டும். அவர்களே அறிவின்

ஸாரம். அவர்கள் தலையில் பிறையை அணியாகச் சூடிக் கொண்டிருக்கின்றார்கள். அவர்கள் ஒருவர் தவத்திற்கு ஒருவர் பயனாக அமைகின்றார்கள். பக்தர்களுக்கு அநுக்ரஹம் செய்கின்றார்கள்; மூவுலகங்களையும் வாழ்த்துகின்றார்கள், விடாது இதயத்து உறைகின்றார்கள். அவர்களே சுகாநுபவத்தைத் தோற்றுவிக்கின்றார்கள்.

இந்த சுலோகத்தில் படைப்பின் அம்மையப்பராகும் பார்வதி பரமேசுவரர்களுக்கு நமஸ்காரங்கள் சொல்லப்பட்டு, இந்நூல் ஆரம்பமாகின்றது. அவர்கள் ஒருவருக்கொருவர் வேறுபட்டவரன்று, ஒரே உண்மையின் பகுதிகள். இந்த அர்த்தநாரி ரூபத்திற்கு ஆழ்ந்த கருத்துண்டு. பிரம்மத்தைத் தவிர்த்து மாயைக்கு இடமில்லை ஈசுவரனின்றும் பிரகிருதியை பிரித்துவைக்க முடியாது. சொல்லையும் பொருளையும் வேறாகப் பிரித்தல் கூடாதவாறுபோல் பார்வதி பரமேசுவரர்களை பிரித்து வைப்பது கூடுவதில்லை என்று காளிதாஸரும் சொல்லியுள்ளார் ஒருவரைப்பற்றி உண்மையாவது மற்றவரைப்பற்றியும் உண்மை ஆகின்றது. ஒருவரது, சிறப்புகளும் அணிகலங்களும் மற்றவரது மாகின்றன. பிறைச்சந்திரன் இருவருக்கும் உரிய அணி. பண் பாடு, கலைகள் இவைகளுக்கு இருவருமே பிறப்பிடங்கள். அவரிருவருமே பக்தர்கள் இதயத்தில் நிலைக்கின்றார்கள்.

பரம்பொருளிற்கு பால் பாகுபாடு இல்லை. எப்பாலையும் கடந்தது. மங்களம் என்று பொருள்படும் சிவ என்ற சொல்லை எப்பாலிலும் (வடமொழியில்) அமைக்கலாம். இந்த நூல் வாழ்த்து சுலோகத்தில் ஆசார்யர் சங்கரர் சிவ என்ற சொல்லை இருமையில் வைத்துள்ளார. (1)

(அ) சிவானந்தம் தம் மனதில் என்றும் விளங்குமாறு வேண்டுகிறார் :—

गलन्ती शंभो त्वच्चरितसरितः किल्बिषरजो
दलन्ती धीकुल्यासरणिषु पतन्ती विजयताम् ।
दिशन्ती संसारभ्रमणपरितापोपशमनं
वसन्ती मच्चेतोहृदभुवि शिवानन्दलहरी ॥ २ ॥

கலந்தீ ஶம்போ த்வச்சரிதஸரித: கில்பிஷரஜோ
தலந்தீ தீகுல்யாஸரணிஷு பதந்தீ விஜயதாம் I
திஶந்தீ ஸம்ஸார ப்ரமண பரிதாபோபஶமநம்
வஸந்தீ மச்சேதோஹ்ரதபுவி ஶிவாநந்தலஹரீ II

**हे शम्भो**–ஸுகத்திற்குக் காரணபூதரான ஹே! ஈச்வர, **त्वच्चरितसरितः**–உன் சரித்திரமாகிய நதியினின்றும், **गलन्ती**-பெருகுகிறதாயும், **किल्बिषरजः**-பாபமாகிற புழுதிகளை, **दलन्ती**-போக்கடிக்கிறதாயும், **धीकुल्यासरणिषु**-புத்தியாகிய வாய்க்கால்வழியாய், **पतन्ती**–செல்லுகிறதாயும், **संसारभ्रमणपरितापोपशमनं**–ஸம்ஸாரத்தில் சுற்றுவதாலேற்படக்கூடிய தாபத்தின் சாந்தியை, **दिशन्ती**–கொடுப்பதாயும், **मच्चेतोह्रद्भुवि**-என் மனமாகிய மடு பிரதேசத்தில், **वसंती**-தங்கி இருக்கிறதாயுமுள்ள, **शिवानन्दलहरी**-பார்வதீ பரமேச்வரர்களின் ஆனந்தப்பெருக்கானது, **विजयतां**-மிகவும் மேன்மையாய் பிரகாசிக்கட்டும்.

ஓ சம்போ, தங்கள் கதையாகும் ஆற்றினின்று பரந்தோடும் ஆனந்த வெள்ளம் போற்றப்படட்டும். அவ்வெள்ளம் பாபத்தின் திரளை அகற்றி, அறிவென்னும் கால்வாய்களில் ஓடி சம்சாரத்தில் திரிவதால் உண்டாகும் துக்கத்தைத் துடைக்கட்டும். அது என் மனமென்னும் குளத்தில் நிறையட்டும்.

இந்தப் பாவில், சிவனது அருள்வெள்ளம் என்று பொருள் படும் சிவானந்தலஹரி என்ற தலைப்பெயர் உள்ளது. பரம் பொருளாகும் சிவன் ஆனந்தம். மனது சிவனுகும் ஆனந்தத்தால் நிறைக்கப்படவேண்டும். மனதை எப்படி நிறப்புவது? இவனது பெருங் கதையென்னும் வெள்ளத்தால் நிறப்பவேண்டும். அறிவென்றும் கால்வாய் வழியாக ஆனந்தவெள்ளத்தை மனதிற்குக் கொண்டுவரவேண்டும், நீரோடவும் பாபமெல்லாம் அகற்றப்படும். பந்தத்திலிருந்து விடுபடுவதே பெறப்படும் அரும் பெருங்கனியாகும்.

சிவானந்தலஹரியைக் கேட்டு, பரவசமடைபவர்கள் பாபத்தையும், துக்கத்தையும் துலைத்து மனிதனின் இலட்சியமாகும் விடுதலையைப் பெறுகின்றார்கள். (2)

त्रयीवेद्यं हृद्यं त्रिपुरहरमाद्यं त्रिनयनं
जटाभारोदारं चलदुरगहारं मृगधरम् ।
महादेवं देवं मयि सदयभावं पशुपतिं
चिदालम्बं साम्बं शिवमतिविडम्बं हृदि भजे ॥ ३ ॥

த்ரயீவேத்யம் ஹ்ருத்யம் த்ரிபுரஹரமாத்யம் த்ரிநயனம்
ஜடாபாரோதாரம் சலதுரகஹாரம் ம்ருகதரம் ।
மஹாதேவம் தேவம் மயி ஸதயபாவம் பசுபதிம்
சிதாலம்பம் ஸாம்பம் சிவமதிவிடம்பம் ஹ்ருதி பஜே ॥

अहं-நான், त्रयीवेद्यं மூன்றுவேதங்களால் அறியக் கூடியவரும், हृद्यं - மனதிற்கு ப்ரீதியைத்தருபவரும், त्रिपुरहरं-த்ரிபுராஸுரர்களை அழித்தவரும், (ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணமென்ற மூன்று சரீரங்களை போக்குகிற வராயும்) आद्यं-உலகஸிருஷ்டிக்கும் முந்தியவரும், त्रिनयनं-முக்கண்ணராயும், जटाभारोदारं-சடையின் பாரத்தால் கம்பீரமாக இருப்பவரும், चलदुरगहारं-அசைந்து கொண்டிருக்கும ஸர்ப்பங்களை ஆபரணமாயுள்ளவரும், मृगधरं மானை தரிக்கிறவராயும், महादेवं-எங்கும்நிறைந்த ப்ரகாசவடிவமாயும், देवं-ஆனந்தருபியாயும், मयि-என்னிடம், सदयभावं-தயவுடன் கூடிய மனோபாவமுள்ளவரும், पशुपतिं-ஜீவர் களுக்கு அதிபதியாயும், चिदालम्बं-ஆத்ம ஞானத்திற்கு இருப்பிடமாயும், सांबं- அம்பிகையுடன் கூடியவரும், अतिविडम्बं-உலகத்தை அனுஸரிப்பவராயுமிருக்கிற, शिवं-ஈச்வரனை, हृदि-மனதில், भजे-சிந்திக்கிறேன்.

*மூன்று வேதங்களால் அறியப்படுபவனும், இதயத்திற்கு இனியவனனவனும் முப்புரங்களை எரித்தவனும், முதலானவனும், முக்கண் பெற்றவனும், சடைகள் அணிந்து கம்பீரமாக தோற்றம் அளிப்பவனும், பாம்புகளை அணிகளாகப் புனைந்து கையில் மானை, வைத்திருப்பவனும், மகாதேவனும், எனக்கு கருணை செய்யும் தெய்வமானவனும், ஆத்மாக்களுக்கு இறைவனனவனும், அடிப்படை அறிவானவனும், உமையொடு துணையுடன் நிற்பு*

வனும், உலகின் போக்குகளை ஊக்குபவனுமான சிவனை நான் என் இதயத்தில் வணங்குகின்றேன்.

இங்கு சிவபெருமானின் சிறப்புகள் சில கூறப்படுகின்றன. அவர் சிறந்த தெய்வமாகும் மகாதேவன். பிரகாசிக்கும் பிரபு, அவரே வேதங்களுக்குப் பிறப்பிடம். அவரை வேதங்களால் அறிந்துகொள்ளவேண்டும். அவரே எல்லாவற்றிற்கும் மூலம், அவைகளின் முதற்காரணம்,

அவர் இரும்பு, வெள்ளி, தங்கத்தால் கட்டப்பட்ட மூன்று புரங்களை (கோட்டைகளை) அழித்தவர். மகாபாரதக்கதை இவ்வாறுள்ளது, தாரகனென்ற அசுரன் கார்த்திகேயனால் அழிக்கப்பட்டான். அவ்வசுரனது மூன்றுகுமாரர்கள் தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி கடுந்தவம் செய்து பிரம்மாவினிட மிருந்து, அப்புரங்களில் குடியேறி அவைகளை விரும்பும் இடங் களிற்கு மாற்ற வரம் பெற்றார்கள். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகே அவர்களை ஒரே அம்பால் மாய்க்க முடிந்தது. அம்மூன்று அசுரர்களும் மிகவும் பலமிக்கவர்களாகி, தேவர்களையும், நல்லவர் களையும் மிகவும் துன்புறுத்தினார்கள். இறுதியாக தேவர்கள் சிவனிடம் சென்று தங்களைக் காப்பாற்றவேண்டினார்கள். சிவ பெருமான் தேவர்களின் பலத்தில் பாதியைப்பெற்று மஹா தேவனானார். விஷ்ணு அம்பாகவும், அக்னி அதன் நுனியாகவும், அமைய, வேதம் வில்லாகவும், ஸவிதா வில்நாணாகவும் அமைந்தது. பிரம்மா தேரோட்ட சிவன் முப்புரங்களை அழித்தார். திரிபுர ஹரன், திரிபுராரி, என்று சிவன் அழைக்கப்படுகிறார். காரணம், சூக்ஷ்மம், ஸ்தூலம் என்ற மூன்று உடம்புகளைக் குறிப்பதுவே மூன்று புரங்கள். இம்மூன்று உடம்புகளே ஆத்மாவை பிணைப் பவை. சிவனது அருளால் தான் இம்மூன்று உடல்களும் அழிக்கப்பட ஆத்மா விடுதலை பெறுகின்றது.

சிவபெருமானுக்கு மூன்று கண்கள், இயற்கையானது இரண்டு நெற்றியின் நடுவிலுள்ளது மூன்றாவது இந்த மூன்றாவது கண் தோன்றியதிற்கும் ஒரு கதையுண்டு பார்வதி பிராட்டி விளையாட்டாக இறைவனின் இரண்டு கண்களையும் பொத்திக் கொண்டார் உடனே படைப்பு முழுதும் காரிருளால் சூழப் பட்டது. படைப்பிற்கு இரங்கி சிவன், தன் நெற்றியில் ஒரு கண்ணைத் திறந்துகொண்டார். இம்முக்கண்களும் சூரியன், சந்திரன், அக்னி யாகும் மூன்று வெளிச்சங்களையும் குறிக்கின்றன.

சிவபெருமான் அடர்ந்த சடைகளைப் பெற்றுள்ளார் அதுவே துறவின் அறிகுறி தாருகவனத்திலுள்ள ரிஷிகள் ஒரு சமயம் சிவனை மடக்க ஒருவேள்வி செய்தார்கள். அதினின்று, கொடிய பாம்புகளும் ஒரு மானும் வெளிவந்தன. ஆயின் அவை சிவ பெருமானை ஒன்றும் செய்யக்கூடவில்லை அவர் பாம்புகளை அணிகலங்களாக அணிந்துகொண்டு மானைக் கையில் ஏந்திக் கொண்டார். (3)

सहस्रं वर्तन्ते जगति विबुधाः क्षुद्रफलदाः
न मन्ये स्वप्ने वा तदनुसरणं तत्कृतफलम् ।
हरिब्रह्मादीनामपि निकटभाजामसुलभं
चिरं याचे शंभो शिव तव पदाम्भोजभजनम् ॥ ४ ॥

ஸஹஸ்ரம் வர்த்தந்தே ஜகதி விபுதா: க்ஷுத்ரபலதா
ந மந்யே ஸ்வப்நே வா ததநுஸரணம் தத்க்ருதபலம் ।
ஹரிப்ரஹ்மாதீநாமபி நிகடபாஜாமஸுலபம்
சிரம் யாசே ஶம்போ ஶிவ தவ பதாம்போஜபஜநம் ॥

जगति-உலகத்தில், क्षुद्रफलदाः-அல்ப பலனையளிக்கக் கூடிய, विबुधाः-தேவர்கள், सहस्रं-ஆயிரக்கணக்காக, वर्तन्ते-இருக்கிறார்கள், अहं-நான், स्वप्ने वा-ஸ்வப்னத்திலும் तदनुसरणं-அவர்களை அனுஸரிப்பதையாவது. तत्कृतफलं-அவர்களால் கொடுக்கப்பட்ட பலனையாவது, न मन्ये-எண்ணுகிறதில்லை, हे शम्भो-ஈச்வர, निकटभाजां-ஸமீபத்தில் ஸேவிக்கின்ற हरिब्रह्मादीनामपि-விஷ்ணு ப்ரம்மா முதலியோர் களுக்குங்கூட, असुलभ-துர்லபமான, तव पदाम्भोजभजनं-உன் பாதாரவிந்த ஸேவையை, शिव-பரமசிவனே, चिरं-வெகுகாலம், याचे-யாசிக்கிறேன்

சிறுபயன்களைக் கொடுக்கும் தேவர்கள் பலர் இருக்க நான் அவர்களையும் அவர் கொடுக்கும் பயன்களையும் கனவிலும் கருதுவ தில்லை. ஓ சம்போ, ஓ சிவா, உனக்கு அருகாமையிலேயே இருக்கும் விஷ்ணு, பிரம்மா இவர்களுக்கும் கிடைக்க அரிதாகும் உன் இணை தாமரை அடிகளையே வணங்க நீண்ட காலமாக தவஞ் செய்கின்றேன்,

சிவனே பரம்பொருள். வாழ்க்கையின் இலட்சியமே அவனை அடைவதாகும். இதற்குக்குறைவான இலட்சியம் மனிதனை பந்தத்தில் சுழலவே செய்யும் சம்சாரத்தினின்று சிவனின் அடிகளே மனிதனைக்காப்பாற்றும் தேவர்களும் உபதேவர்களும் உலகின் நலன்களையும் தேவலோக சுகபோகங்களையும் கொடுக்க வல்லார்கள். ஆயின் இறுதி இலட்சியத்தை நாடுபவருக்கு இவை மதிப்பற்றவை.

யாமுனாசாரியார் ஸ்தோத்திர ரத்னம் 27ஐயும் இங்கு ஒப்பு வைத்துப் பார்க்கலாம். தேன் சொரியும் மலர் பாதங்களைப் பெற்ற ஆத்மா வேறெதை நாடும்? தேனீ தேன் நிறைந்த தாமரையிருக்க, இக்ஷுரகம் என்ற தேனற்ற, மணமற்ற பூவை நாடுமா? (4)

स्मृतौ शास्त्रे वैद्ये शकुनकवितागानफणितौ
पुराणे मन्त्रे वा स्तुतिनटनहास्येष्वचतुरः ।
कथं राज्ञां प्रीतिर्भवति मयि कोऽहं पशुपते
पशुं मां सर्वज्ञ प्रथितकृपया पालय विभो ॥ ५ ॥

ஸ்ம்ருதௌ ஶாஸ்த்ரே வைத்யே ஶகுநகவிதாகாநபணிதௌ
புராணே மந்த்ரே வா ஸ்துதிநடநஹாஸ்யேஷ்வசதுர: ।
கதம் ராஜ்ஞாம் ப்ரீதிர்பவதி மயி கோऽஹம் பஶுபதே
பஶும் மாம் ஸர்வஜ்ஞ ப்ரதிதக்ருபயா பாலய விபோ ॥

**स्मृतौ**–ஸ்மிருதியிலும், **शास्त्रे**–தர்க்கம் வியாகரணம் முதலிய சாஸ்திரத்திலும், **वैद्ये**–வைத்திய சாஸ்திரத்திலும் **शकुनकवितागानफणितौ**–சகுனம், கவிதை, ஸங்கீதம், இவைகளில்திறமையை ஸபையில் கூறிக்காட்டுவதிலும், **पुराणे**–புராணத்திலும், **मन्त्रे वा**–மந்திரசாஸ்திரத்திலாவது, **स्तुतिनटनहास्येषु**–ஸ்தோத்திரம் செய்வது, நர்த்தனம், விகடம் இவைகளிலும், **अचतुरः**–சக்தியற்றவன். **तस्मात्**–ஆகையால், **राज्ञां**–அரசர்களுக்கு, **प्रीतिः**–பிரியம், **मयि**–என்னிடத்தில், **कथं**–எவ்விதம், **भवति**–உண்டாகும்? (ஆகையால்) **हे पशुपते**–ஜீவர்களின் தலைவனே, **सर्वज्ञ**–எல்லா விஷயங்களையும் உணர்ந்தவரே, **प्रथित**–பிரஸித்தமானவரே, **कोऽहं पशुं**–நான்

யாரென்று அறியாத மிருகத்திற்கு ஒப்பான, **मां**-என்னை, **विभो**-ஸர்வவியாபக, **कृपया**-கருணையால், **पालय**-காப்பாற்றும்.

*சாஸ்திரங்களோ, வேதாந்தமோ, வைத்தியமோ, சகுன சாஸ்திரமோ, கவிதையோ, சங்கீதமோ, புராணமோ, மந்திரமோ நடனமோ, விகடமோ, புகழ்ச்சியோ கற்றேனில்லை அரசர்கள் எப்படி என்னை ஆதரிப்பார்கள் ஆத்மாக்களின் இறைவா, அறிவுச் சுடரே, எங்கும் நிறைந்தவனே, பெரும் புகழ் பெற்றவனே, உன் அருளால் என்னைக் காப்பாற்று.*

*உலகமேம்பாட்டிற்கு அதிகாரத்திலமைபவர்களுக்கு திருப்தி செய்யத் தெரிதல் வேண்டும். அவர்களை திருப்தி செய்ய சாஸ்திரங்களையும், உலக கலைகளையும் கற்றிருக்க வேண்டும். ஆயின் இறைவன் அருளைப் பெற இவைகள் வேண்டப்படுவதில்லை. இறைவனிடம் சரணடைவதுதான் அவனருளைப்பெற வழியாகும்.* (5)

**घटो वा मृत्पिण्डोऽप्यणुरपि च धूमोऽग्निरचलः**
**पटो वा तन्तुर्वा परिहरति किं घोरशमनम् ।**
**वृथा कण्ठक्षोभं वहसि तरसा तर्कवचसा**
**पदाम्भोजं शंभोर्भज परमसौख्यं व्रज सुधीः ॥ ६ ॥**

கடோ வா ம்ருத்பிண்டோZப்யணுரபி ச தூமோZக்நிரசல:
பலடோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோரஶமநம் 1
வ்ருதா கண்டக்ஷோபம் வஹஸி தரஸா தர்க்கவசஸா
பதாம்போஜம் ஶம்போர்பஜ பரமஸௌக்யம் வ்ரஜ ஸுதீ:11

**हे सुधीः**-நல்ல புத்தியுடையவனே, **घटो वा**-குடமாவது, **मृत्पिण्डोऽपि**-மண் கட்டியாவது, **अणुरपि च**-பரமாணுவாவது, **धूमः**-புகையாவது, **अग्निः**-நெருப்பாவது, **अचलः**-மலையாவது **पटो वा**-வஸ்திரமாவது, **तन्तुर्वा**-நூலாவது (இவைகள் *தர்க்க சாஸ்திரத்தின் சொற்கள்*), **घोरशमनं**-பயங்கரமான *யமனை*, **परिहरति किं**-போக்கடிக்குமா? (அப்புறப்படுத்துமா) **तर्कवचसा**-*தர்க்கசாஸ்திரத்தின்* வார்த்தைகளால், **वृथा**-

வீணாக, **कण्ठक्षोभं वहसि**-தொண்டைக்கு சிரமத்தைக் கொடுக்கிறாய். **शम्भोः**-ஸுகத்தையளிக்கக்கூடிய ஈச்வரனுடைய, **पदाम्भोजं**-பாதகமலத்தை, **तरसा**-சீக்கிரம், **भज**-ஸேவிப்பாய். **परमसौख्यं**-மோக்ஷ ஸுகத்தை **व्रज**-அடைவாய்.

*களிமண், அணு, புகை, மலை, துணி, நூல், இவைகளில் ஏதாவது கொடிய சாவை அகற்ற திறன் பெற்றதா? தர்க்க விவாதத்தால் உன் தொண்டையை கிழித்துக் கொள்வதால் பயனென்ன? அறிவாளியே, சம்புவினுடைய தாமரைப் பாதங்களை வணங்கி பெரும் பேற்றை அடைவாயாக!*

*உலகின் தர்க்க வாதத்தின் உண்மைப் பயன் என்ன? வாதத்திற்காக பிடிவாதம் செய்து எதிரியை மடக்கலாம் உன் அறிவின் திறனை வெளியிடலாம். ஆயின் அதனால் உனக்கு உண்டாகும் நன்மையென்ன? தர்க்க முறைகளால் உனக்கு தெளிவு உண்டாவதில்லை, அறிவு பெற்றவன், தர்க்க விவாதங்களில் தன் பொழுதை இழக்கமாட்டான். அவன் இறைவன் அடிகளில் சரணடைவான்.* (6)

मनस्ते पादाब्जे निवसतु वचः स्तोत्रफणितौ
करौ चाभ्यर्चायां श्रुतिरपि कथाकर्णनविधौ ।
तव ध्याने बुद्धिर्नयनयुगलं मूर्तिविभवे
परग्रन्थान्कैर्वा परमशिव जाने परमतः ॥ ७ ॥

மநஸ்தே பாதாப்ஜே நிவஸது வச: ஸ்தோத்ரபணிதௌ
கரௌ சாப்யர்ச்சாயாம் ச்ருதிரபி கதாகர்ணநவிதௌ ।
தவ த்யாநே புத்திர் நயநயுகளம் மூர்த்திவிபவே
பரக்ரந்தான் கைர்வா பரமசிவ ஜாநே பரமத: ॥

**हे परमशिव**-ஹே ஈசுவர, **मनः**-மனது, **ते**-உன்னுடைய, **पादाब्जे**-பாதாரவிந்தத்திலும், **वचः**-வாக்கானது, **स्तोत्र-फणितौ**-ஸ்தோத்திரம் சொல்வதிலும், **करौ च**-கைகள், **अभ्यर्चायां**-பூஜை செய்வதிலும், **श्रुतिरपि**-காது, **कथाकर्णनविधौ**-கதைகளைக் கேட்பதிலும், **तव**-உன்னுடைய, **ध्याने**-

த்யானத்தில், बुद्धिः-புத்தியும், मूर्तिविभवे-ரூபத்தைப் பார்ப்பதில், नयनयुगलं-இரு கண்களும், निवसतु-வஸிக்கட்டும் (ஈடுபடட்டும), अतः परं-இதன் பிறகு परग्रन्थान्-வேறு நூல்களை, कैर्वा-எந்த இந்திரியஙகளால, जाने-அறிவேன்.

தலையாய சிவபெருமானே! என் மனது உன் திருவடிகளில் அமரட்டும். என் நாவு, உன் புகழைப் பாடட்டும். என் கைகள் உனக்கு பூஜை செய்யட்டும். என் புலனகள் உன் கதைகளை கேட்கட்டும். என் அறிவு உன் தியானத்தில் நிலைக்கட்டும உன் திருவுருவை பார்த்தவண்ணம் அமரட்டும் என் கண்கள் இவை இப்படி நிலைக்க, ஏன் எப்படி பிறநூல்களைப படித்தறிவது?

ஒருவன் எப்படி இறைவன பாதுகாப்பைப் பெறுவது? இதயம், உணர்வு, மனது, பல திறன் இவைகளைக் கொண்டு அதைப் பெறவேண்டும். இறைவனிடம் ஒன்றுபட்டு நிற்க கற்றுக் கொள்வதுவே பக்தியின் செயல் முறை. ஒரு மனிதன் காதலில் ஈடுபடும்பொழுது எப்படி அமைகிறான்; அவன் முற்றுமாகத் தன்னை தான் காதலிப்பவரிடம் ஒப்படைக்கின்றான். அவன் செய்கை, பேச்சு, மனது, இவை ஒரு குறியைப் பற்றி நின்று தான் காதலிப்பவரை திருப்திசெய்ய முனைகிறான். அவ்விதமே பக்தன் முற்றுமாக தன்னை இறைவனிடம் அர்பபணித்துக்கொள்ள வேண்டும். மனோநிலை, உணர்ச்சிகள் இவைகளுககு இறைவனே குறிககோளாக அமைதல்வேண்டும். அவனுடைய அக்கரைகள் பலவிற்கும் கேந்திரம் இறைவனே இறைவனுக்கே அவனது ஒரு மித்த பணியாகின்றது அவன அபபொழுது பிறவற்றை விட்டுவிட வேண்டியவனாகின்றான். அவனுக்கு நூல்களால்தான் என்ன பயன்? நூற்களின் பலனையெல்லாம பெற்றவனாகி விடுகிறான்.

குலசேகர ஆழ்வார் முகுந்தமாலையில் 'நாவே, கேசவனின் புகழைப் பாடு, மனமே முரனின் பகைவனை நினை, கைகளே ஸ்ரீயின் தலைவனை பூஜியுங்கள். அச்சுதனின கதைகளை கேளுங்கள் காதுகளே! கண்களே கிருஷ்ணனைப் பார்த்துக் களியுங்கள். கால்களே ஹரியின் கோயிலிற்குச் செல்லுங்கள். முகுந்தனின் பாதங்களிலுள்ள துளசியை முகரு மூக்கே. பிரபு விஷ்ணுவை வணங்கு தலையே' என்றுள்ளதையும் இங்கு ஒப்பு நோக்கலாம்.

(7)

यथा बुद्धिः शुक्तौ रजतमिति काचाश्मनि मणि-
र्जले पैष्टे क्षीरं भवति मृगतृष्णासु सलिलम् ।
तथा देवभ्रान्त्या भजति भवदन्यं जडजनो
महादेवेशं त्वां मनसि च न मत्वा पशुपते ॥ ८ ॥

*யதா புத்தி: ஶுக்தௌ ரஜதமிதி காசாஶ்மநி மணி:*
*ஜலே பைஷ்டே க்ஷீரம் பவதி ம்ருகத்ருஷ்ணாஸு ஸலிலம் ।*
*ததா தேவப்ராந்த்யா பஜதி பவதந்யம் ஜடஜநோ*
*மஹாதேவேஶம் த்வாம் மநஸி ச ந மத்வா பஶுபதே ॥*

**हे महादेव**–மஹாதேவனே, **पशुपते**–பசுபதியே, **शुक्तौ**–முத்துச் சிப்பியில், **रजतमिति बुद्धिः**–வெள்ளியென்ற புத்தியும், **काचाश्मनि**–காசமணியில், **मणिः**–ரத்னமென்ற புத்தியும், **पैष्टे**–மாவுடன் கலந்த, **जले**–ஜலத்தில், **क्षीरं**–பாலென்னும் புத்தியும், **मृगतृष्णासु**–கானலில், **सलिलं**–ஜலமென்ற புத்தியும், **यथा भवति**–எவ்விதமுண்டாகிறதோ, **तथा**–அவ்விதம், **जडजनः**–மூடமனுஷ்யன், **ईशं**–ஈசுவரனை. **त्वां**–உன்னை, **मनसि**–மனதில், **न मत्वा**–எண்ணுமல், **भवदन्यं**–உன்னைக்காட்டிலும் வேறு தேவதையை, **देवभ्रांत्या**–தேவதையென்ற பிரமையால், **भजति**–ஸேவிக்கிறுன்.

*ஓ மகாதேவா! ஆத்மாக்களின் இறைவா! சிப்பியில் வெள்ளியையும், கண்ணுடி மணியில் ரத்தினக்கல்லேயும் மாவு கலந்த நீரில் பாலேயும், கானலில் நீரையும் காண்பதைப் போல அறிவிலி, நீயல்லாத பிற தெய்வங்களே வணங்குகின்ருன். ஒரே மனதுடன் நின்னே வணங்காது பிறரை வணங்கு*

*அறிவற்ருேர் மாயையினுல் ஒளியிழந்தோராய் பரம்பொருளே விட்டு பிறதெய்வங்களே வணங்குகின்ருர்கள். ஒருவன் வெள்ளியை மதிக்கின்ருன். அதனுல் சிப்பியை வெள்ளியாக தப்பாகக்கொள்கின்ருன். மயக்கம் தப்பறிவையே உண்டாக்குவது. ஒருவன் நாடவேண்டுவது பரம்பொருளே. ஆயின் உலகின் அற்ப சுகங்களே நாடுபவன் அவை பரம ஸுகத்தைக்கொடுக்குமென்று நினைத்துக்கொள்கின்ருன். அற்ப சுகமும் பரமசுகத்தின்*

பிரதிபிம்பமாகையால் அதுவும் அவனுக்குத் தற்காலிகமாக திருப்தியை அளிக்கின்றது. எவன் தோற்றங்களைப் பொய்யென உணர்ந்து உண்மையைப்பற்றி தேவனுகும் பரம்பொருளிடம் பக்தி செய்கின்ருனே அவனே அறிவாளி. (8)

गभीरे कासारे विशति विजने घोरविपिने
विशाले शैले च भ्रमति कुसुमार्थं जडमतिः ।
समर्प्यैकं चेतःसरसिजमुमानाथ भवते
सुखेनावस्थातुं जन इह न जानाति किमहो ॥ ९ ॥

கபீரே காஸாரே விஶதி விஜநே கோரவிபிநே
விஶாலே ஶைலே ச ப்ரமதி குஸுமார்த்தம் ஜடமதி: I
ஸமர்ப்யைகம் சேத: ஸரஸிஜமுமாநாத பவதே
ஸுகேநாவஸ்தாதும் ஜந இஹ ந ஜாநாதி கிமஹோ II

**हे उमानाथ**–ஹே பார்வதியின் பதியே, **गभीरे**–ஆழமுள்ள **कासारे**-குளத்திலும் **विजने**–ஜனஸஞ்சாரமற்ற, **घोरविपिने**-பயங்கரமான காட்டிலும், **विशाले**-விஸ்தீர்ணமான, **शैले च**–மலையிலும், **कुसुमार्थं**–புஷ்பத்திற்காக, **जडमतिः**–உபாயம் தெரியாத மூடன், **विशति**–பிரவேசிக்கிருன். **भ्रमति**–சுற்று கிருன். **एकं**–ஒரு, **चेतःसरसिजं**–மனமாகிய தாமரை மலரை **भवते**-உன் பொருட்டு, **समर्प्य**–அர்ப்பணம் செய்து, **सुखेन**–சுகமாக, **अवस्थातुं** – இருப்பதற்கு, **इह**–இவ்வுலகில், **जनः**–மனிதன், **न जानाति**–அறிகிறதில்லை. **किमहो**–என்ன ஆச்சரியம்.

உமையின் தலைவ! மலர் தேடி கொய்துவர ஆழமான குளத்தில் இறங்குபவனும், அடர்ந்த கொடி காட்டில் புகுபவனும் மலையேறுபவனும் எவ்வளவு மடையர்கள்! பாவம்! தனியான தன்னிதய தாமரையை உனக்கு அர்ப்பணித்து இங்கு சுகமாக வாழத்தெரியாத அறிவிலியே அவன்.

மலரால் அர்ச்சிப்பதற்கு ஒரு உட்பொருளுள்ளது வனுக்கு மலர்களும் அலங்காரமும் வேண்டுவதில்லை. அவரே பரம அழகு. அவரை அழகுபடுத்துவது தேவையன்று. பக்தன் மலரிடும்

பொழுது தன் இதயத்தையே இறைவனுக்குக் கொடுப்பதாக பொருள். பூஜையின் பல செயல்களுக்கும் உட்பொருளுண்டு. பெரும்பாலும் உட்பொருள் கைவிடப்பட்டு புறச்செய்கைகள் மட்டும் செய்யப்படுகின்றன. இறைவன் மலர்களை விரும்பு கின்றான் என்ற தப்பெண்ணமே மலர்களை அவர்மீது சொரியச் செய்கின்றது. மலரைத்தேடிப் பரிப்பதிலுமே எவ்வளவோ ஆபத்துக்கள் உள்ளன. இந்தப் பாடெல்லாம் வீணானது என்பது தெளிவானது. இறைவன் வேண்டுவது பல மலர் பூக்களன்று, ஒன்றேயாகும் மனிதனின் இதய கமலத்தையே அவர் வேண்டு கிறார். (9)

नरत्वं देवत्वं नगवनमृगत्वं मशकता
पशुत्वं कीटत्वं भवतु विहगत्वादिजननम् ।
सदा त्वत्पादाब्जस्मरणपरमानन्दलहरी-
विहारासक्तं चेद्धृदयमिह किं तेन वपुषा ॥ १० ॥

நரத்வம் தேவத்வம் நகவநம்ருகத்வம் மஶகதா
பஶுத்வம் கீடத்வம் பவது விஹகத்வாதிஜநநம் ।
ஸதா த்வத்பாதாப்ஜ ஸ்மரண பரமாநந்தலஹரீ-
விஹாராஸக்தம் சேத் ஹ்ருதயமிஹ கிம் தேந வபுஷா ॥

**नरत्वं**–மனுஷ்யத்தன்மை, **देवत्वं**–தேவத்தன்மை, **नगवनमृगत्वं**–மலை, காட்டுமிருகம் இவற்றின் தன்மை, **मशकता**–கொசுவாயிருப்பது, **पशुत्वं**–பசுத்தன்மை, **कीटत्वं**–புழுத் தன்மை, **विहगत्वादिजननं**–பறவை முதலிய பிறப்பாவது, **भवतु**–உண்டாகட்டும். **सदा**–எப்பொழுதும், **हृदयं**–மன மானது, **त्वत्पादाब्जस्मरणपरमानन्दलहरीविहारासक्तं चेत्**–உன் பாதாரவிந்த ஸ்மரணத்தினாலுண்டான சிறந்த ஆனந்தப் பெருக்கின் விளையாட்டில் ஈடுபடுமானால், **इह**–இவ்வுலகில், **तेन वपुषा**–அந்த சரீரத்தால், **किं**–என்ன கெடுதல் உண்டாகும்? (ஒன்றும் நஷ்டமில்லை.)

மனிதன், தேவன், மலை, காட்டு விலங்கு, கொசு, பசு, புழு, பறவை இவைகளில் எப்பிறப்பு வேண்டுமானாலும் வரட்டும். இதயமானது ஆனந்தவெள்ளத்தில் திளைத்து நினது மலரடிகளைத்

தியானத்தில் வைக்குமானல் எந்த உடலை ஒருவன் எடுத்தா லென்ன ?

இதயத்தை ஒருவன் இறைவனுக்கு அர்ப்பணம் செய்து விட்டால் பிறகு அவன் எதிர்காலத்தைப்பற்றி கவலையுற வேண்டியதில்லை. அடுத்தபிறவி யாதாயினுமாகலாம். மனிதனுக்கு தாழ்ந்தும், மனிதனுயும், மனிதனுக்கு உயர்ந்தும் பிறக்கலாம். இப்பிறவியில் ஒருவன் இறைவனுக்குச் சரணடைந்துவிட்டால் மறு பிறவி யாதென்பது கவலையுறும் விஷயமல்ல.

பகவான் கீதையில் "என்னையன்றி வேருென்றையும் சிந்திக்காமலும், என்னுடன் இணைந்தும் விடாது என்னை பூஜிப்ப வர்களின் யோகக்ஷேமம் என்னுடைய முற்றுய பொறுப்பு" (9—22) என்று சொல்லுகின்ருர். (10)

वटुर्वा गेही वा यतिरपि जटी वा तदितरो
नरो वा यः कश्चिद्भवतु भव किं तेन भवति ।
यदीयं हृत्पद्मं यदि भवदधीनं पशुपते
तदीयस्त्वं शंभो भवसि भवभारं च वहसि ॥ ११ ॥

வடுர்வா கேஹீ வா யதிரபி ஜடீ வா ததிதரோ
நரோ வா ய: கஶ்சித்பவது பவ கிம் தேந பவதி ।
யதீயம் ஹ்ருத்பத்மம் யதி பவததீநம் பஶுபதே
ததீயஸ்த்வம் ஶம்போ பவஸி பவபாரம் ச வஹஸி ॥

**भव**—பரமசிவனே, **वटुर्वा**—பிரம்மசாரியாகவாவது, **गेही वा**—கிருகஸ்தனுகவாவது, **यतिरपि** – ஸன்னியாஸியாக வாவது, **जटी वा**—சடையை தரிக்கிறவனுகவாவது, **तदितरः**— அதைத் தவிற வேறு, **यः कश्चिन्नरो वा**-ஏதாவது ஒரு மனுஷ்யனுகவாவது, **भवतु**-இருக்கட்டும். **तेन**—அந்தப் பிறவியினுல், **किं भवति**—என்ன பயன் உண்டாகும்? **हे पशुपते**-லோகநாயக, **यदीयं हृत्पद्मं**—எவனுடைய ஹிருதய கமலம், **भवदधीनं यदि**-உனக்கு அதீனமாயிருக்குமானுல், **शम्भो**-ஸுகத்தையுண்டுபண்ணக்கூடிய ஈசுவரா, **तदीयः**— அவனைச் சேர்ந்தவராக, **त्वं**—நீர், **भवसि**—ஆகிறீர். **भवभारं च**—வாழ்க்கைச் சுமையையும், **वहसि**—தாங்குகிறீர்.

ஓ பிரபுவே, பிரம்மசாரி (மாணவன்) கிருஹஸ்தன், (இல்லறத்தான்) சந்நியாசி (துறவி) இவைகளில் ஒருவன் எந்த முறையில் அமைந்தாலும் அதனால் பயனென்ன? ஓ சம்போ, ஒருவனது இதயம் நினதானால், நீ அவனதானால் அவனுடைய வாழ்க்கைப் பொறுப்பை நீ ஏற்றுக்கொள்ளுகின்றாய்.

உண்மை பக்தனுக்கு அடுத்த பிறவியைப்போன்று இவ் வாழ்க்கையின் நிலையும் கவலை கொடுப்பதில்லை. பக்திக்கு ஆச்ரமப் பாகுபாடுகள், பிறப்புப் பாகுபாடுகள் இல்லை. அவன் மாணவனாகவும், இல்லறத்தானாகவும் துறவியாகவும் இருக்கலாம். இந்த வாழ்க்கை நிலைகளை அவன் கருதவேண்டியதில்லை.

நாரதர் பக்தி சூத்திரத்தில் 'பக்தர்களிடையே சாதி, படிப்பு, அழகு, குலம், செல்வம், தொழில் முதலிய புறவேற்றுமைகள் இல்லை' என்று காண்கிறது. (11)

गुहायां गेहे वा बहिरपि वने वाद्रिशिखरे
जले वा वह्नौ वा वसतु वसतेः किं वद फलम् ।
सदा यस्यैवान्तःकरणमपि शंभो तव पदे
स्थितं चेद्योगोऽसौ स च परमयोगी स च सुखी ॥१२॥

குஹாயாம் கேஹே வா பஹிரபி வநே வாZத்ரிஶிகரே
ஜலே வா வஹ்நௌ வா வஸது வஸதே: கிம் வத பலம் ।
ஸதா யஸ்யைவாந்த:கரணமபி ஶம்போ தவ பதே
ஸ்திதம் சேத்யோகோZஸௌ ஸ ச பரமயோகீ ஸ ச ஸுகீ ॥

**गुहायां**–குகையிலாவது, **गेहे वा**–கிருஹத்திலாவது, **बहिरपि**–வெளியிலாவது, **वने वा**–காட்டிலாவது, **अद्रिशिखरे**–மலையுச்சியிலாவது, **जले वा**–தண்ணீரிலாவது, **वह्नौ वा**–நெருப்பிலாவது, **वसतु**–வஸிக்கட்டும். **वसतेः**– அப்படி வஸிப்பதினால், **किं फलं**–என்ன பயன்? **वद**–சொல். **हे शंभो**-அழிவற்ற ஸுகத்திற்குக் காரணமான ஈச்வரா, **यस्य**–எந்த புருஷனுடைய, **अंतःकरणमपि**–மனது, **सदा**–எப்பொழுதும், **तव पदे एव**-உன் திருவடியிலேயே, **स्थितं चेत्**–நிலைத்து இருக்குமானால், **असौ योगः**-இதுதான் சிவயோகம், **स च**-

அவனேதான், **परमयोगी**-உயர்ந்த யோகீ, **स च सुखी**-அவன் தான் பரமானந்த ஸுகத்தையடைந்தவன்.

குகையிலோ, வீட்டிலோ, வெளியிலோ, கானிலோ, மலை உச்சியிலோ, கனலிலோ, கடலிலோ எங்கு வேண்டுமானாலும் ஒருவன் வசிக்கட்டும். அப்படி வாழ்வதின் பயனென்ன சொல்லட்டும். சம்போ, ஒருவனது மனது உனது திருவடிகளில் அமர்வதுவே யோகம். அவனே தலைசிறந்த யோகி. அவனே பரமசுகி.

ஒருவன் வசிக்கும் நிலையிலும் செய்யும் தவத்திலும் தனிச்சிறப் பொன்றுமில்லை. மனது இறைவனுக்கு பக்தி செய்வதே வேண்டப்படுவது யோகமென்றால் மனதை நுகத்தடியில் பூட்டுவ தென்பது பொருள், உண்மையான யோகம் மனதை இறைவ னுடன் பூட்டுவதேயாகும். ஒருவன் இறைவனைச்சுற்றியே அமையும்பொழுது அவன் பேரானந்தத்தை அடைகின்றான். (12)

असारे संसारे निजभजनदूरे जडधिया
भ्रमन्तं मामन्धं परमकृपया पातुमुचितम् ।
मदन्यः को दीनस्तव कृपणरक्षातिनिपुण-
स्त्वदन्यः को वा मे त्रिजगति शरण्यः पशुपते ॥ १३ ॥

அஸாரே ஸம்ஸாரே நிஜபஜநதூரே ஜடதியா
ப்ரமந்தம் மாமந்தம் பரமக்ருபயா பாதுமுசிதம் ।
மதந்ய: கோ தீநஸ்தவ க்ருபணரக்ஷாதிநிபுண-
ஸ்த்வதந்ய: கோ வா மே த்ரிஜகதி ஶரண்ய: பஶுபதே ॥

**हे पशुपते**-ஹே பசுபதே, **असारे**-பயனற்றதான, **निजभजनदूरे**-தன்னை பஜிப்பதினின்று வெகு தூரமாயிருக்கிற **संसारे**-ஸம்ஸாரத்தில், **जडधिया**-மந்தபுத்தியால், **भ्रमन्तं**-சுழலுகிறவனும், **अन्धं**-விவேகமில்லாதவனுமுள்ள, **मां**-என்னை, **परमकृपया**-மிகுந்த கிருபையினால், **पातुं उचितं**-காப்பாற்றுவது யோக்கியம். **दीनः**-தீன சுபாவமுடைய **मदन्यः**-என்னைக் காட்டிலும் வேறு ஒருவன், **तव**-உமக்கு **कः**-எவனிருக்கிறான்? **कृपणरक्षातिनिपुणः**-தீனர்களை ரக்ஷிப்

பதில் மிகுந்த திறமையுள்ள शरण्यः-ரக்ஷிக்கக்கூடியவர், त्रिजगति-மூவுலகிலும், त्वदन्यः உம்மைக் காட்டிலும் வேறொருவர், मे-எனக்கு, को वा-யாரிருக்கிறார் ?

ஆத்மாக்களின் தலைவ, உண்மை இலட்சியத்தினின்று எட்டியிருக்கும் சாரமற்ற சம்சாரத்தில் மடையனாக உழலும் நான் குருடன். நீ உன் பெருங்கருணையால் என்னைக்காப்பாற்ற வேண்டும். என்னிலும் அறிவற்றோர் யார் உன்னை அணுகப் போகின்றார்கள் ? எனக்கு உன்னிலும் சிறந்த நிபுணன் எவன் கிடைக்கப்போகின்றான். மூவுலகங்களிலும் எளியோரைக் காப்பாற்றி சரண் தர வேறு யாருள்ளார்கள்.

இறைவனுக்கும் ஆத்மாவிற்குமுள்ள தொடர்பு அறுகொண்ணாதது இறைவன் பரம ரக்ஷகன், ஆத்மா பாதுகாப்பைத் தேடி நிற்பது. இவ்வுண்மையறியாதவரை அது உலகின் பொய்யான பாதுகாப்புகளை நம்பி நிற்கின்றது. அஞ்ஞானத்தால் ஒழியிழந்து சம்சாரத்தில் உழன்று துன்புறுகின்றது. மனதில் பக்தி புகும்பொழுது அது கடவுளை நாடி நிச்சயமான காப்பைப் பெற்று பிழைக்கின்றது. இறைவனன்றி துணையில்லை என்பதை அறிபவனே பக்தன். மூவுலகங்களிலும் கடவுளன்றி அவனுக்கு துணையில்லை. (13)

प्रभुस्त्वं दीनानां खलु परमबन्धुः पशुपते
प्रमुख्योऽहं तेषामपि किमुत बन्धुत्वमनयोः ।
त्वयैव क्षन्तव्याः शिव मदपराधाश्च सकलाः
प्रयत्नात्कर्तव्यं मदवनमियं बन्धुसरणिः ॥ १४ ॥

ப்ரபுஸ்த்வம் தீநாநாம் கலு பரமபந்து: பஶுபதே
ப்ரமுக்யோऽஹம் தேஷாமபி கிமுத பந்துத்வமநயோ: ।
த்வயைவ க்ஷந்தவ்யா: ஶிவ மதபராதாஶ்ச ஸகலா:
ப்ரயத்நாத் கர்த்தவ்யம் மதவநமியம் பந்துஸரணி: ॥

हे पशुपते-ஹே லோகநாத, त्वं-நீர், प्रभुः-அதிக ஸாமர்த்தியமுள்ளவர். दीनानां-எளியவர்களுக்கு, परमबंधुः खलु-முக்கியபந்து அல்லவா! तेषामपि-அவர்களுக்குள், अहं-நான், प्रमुख्यः-முந்தினவன். अनयोः-(இந்த) நம்மிருவருக்கும்

உள்ள, बन्धुत्वं-பந்துத்தன்மை விஷயம், किमुत-கேட்ப்பானேன். हे शिव-ஆனந்தவடிவமுள்ள ஈச்வரா, सकलाः मदपराधाः च-என் எல்லா அபராதங்களும், त्वयैव-உன்னாலேயே, क्षन्तव्याः-பொறுக்கக்கூடியவைகள. प्रयत्नात्-முயற்சியினால, मदवनं कर्तव्यं-என்னைக் காப்பாற்ற வேண்டியது. इयं-இதுதான், बन्धुसरणिः-பந்துக்களின்வழி.

ஆத்மாக்களின் இறைவ, எளியவர்களின் பெருந்துணையன்றோ நீ. எளியவர்களில் முதன்மையானவன் நான். இதுவன்றோ நம் உறவு. சிவா, நீதான் என் பிழைகளை யெல்லாம் மன்னிக்கவல்லவன் முயன்றும் என்னைப்பாதுகாக்க வேண்டும். இப்படியன்றோ உறவினர்களும் நடந்து கொள்கின்றார்கள்.

இங்கு பக்தன் இறைவனுக்கும் தனக்கும் உள்ள உறவை விவரிக்கின்றான் எளியவர்களிலும் எளியவனுகும் அவன் ஒன்று மற்றவன் என்பதை உணர்கின்றான். இறைவன் பிரபுக்களுக் கெல்லாம பிரபு அவனுக்கு உயர்ந்தவாகள் இல்லை. பாது காப்பை நாடுவது ஆத்மாவிற்கு உரிமை. அதற்குக் காப்பளிக்க வேண்டுவது இறைவனின் கடமை. ஆத்மா செய்த எந்த பாபத்திற்காகவும் இறைவன் தன் கடமையைச் செய்யாமலிருப்ப தற்கில்லை. ஆத்மாவின் பாபங்களை மன்னிக்க வேண்டுவது அவர் கடமையாகின்றது. (14

उपेक्षा नो चेत्किं न हरसि भवद्ध्यानविमुखां
दुराशाभूयिष्ठां विधिलिपिमशक्तो यदि भवान् ।
शिरस्तद्वैधात्रं ननखलु सुवृत्तं पशुपते
कथं वा निर्यत्नं करनखमुखेनैव लुलितम् ॥ १५ ॥

உபேக்ஷா நோ சேத் கிம் ந ஹரஸி பவத் த்யாநவிமுகாம்
துராஶா பூயிஷ்டாம் விதிலிபிமஶக்தோ யதி பவான் ।
ஶிரஸ்தத்வைதாத்ரம் நநகலு ஸுவ்ருத்தம் பஶுபதே
கதம் வா நிர்யத்நம் கரநகமுகேநைவ லுலிதம் ॥

हे पशुपते-பசுபதே, उपेक्षा-உபேக்ஷை, नोचेत्-இல்லைவிடில், भवद्ध्यानविमुखां-உம்முடைய த்யானத்திற்கு விரோ

மானதாயும், दुराशाभूयिष्ठं-துராசைகள் நிறைந்ததுமான, विधिलिपिं-பிரம்மாவின் எழுத்தை (தலையெழுத்தை) किं न हरसि-ஏன்போக்கடிக்கவில்லை? भवान्-தாங்கள், अशक्तो यदि-சக்தியற்றவராஞல், ननखलु-நகத்தால் கிள்ளமுடியாததாயும், सुवृत्तं-திடமாயுமிருக்கிற, तत्-அந்த, वैधात्रं शिरः-பிரம்மாவின் தலை, निर्यत्नं-முயர்ச்சியில்லாமல், करनखमुखेनैव-கை நகத்தின் நுனியாலேயே, कथं वा-எப்படி, लुलितं-கிள்ளப்பட்டது?

ஆத்மாக்களின் தலைவ, பிரம்மாவின் கட்டளைப்படி நான் உன்னைப் புறக்கணித்து நின்று என் இதயத்தில் கெட்ட சிந்தனைகளை நின்ருலும் நீர் அந்த பிரம்மாவின் கட்டளையையும் அழிக்கக் கூடாதா? என்னைப் புறக்கணிக்கின்ருய் போலும்! உனக்கு வலிவில்லையா? அப்படியாஞல் பிரம்மாவின் தலையை கட்டை விரலின் நுனியைக்கொண்டு எப்படிக் கிள்ளியெறிந்தீர்?

விதியின் மீது பழியைப் போட்டு இறைவன் வாளா இருப்பதற்கில்லை. அதை சரி செய்ய அவருக்கு வலிவில்லையா? இறைவன் வலிவிற்கு முன்பு எதுதான் நிற்கும்? இறைவன் அருளிருக்க விதி என்ன செய்யக்கூடும்?

விதியை வகுப்பவர் பிரம்மா என்பது புராணம். அவருக்கு முன்பு ஐந்து தலைகள் இருந்தனவாம். சிவன் அவற்றிலொன்றை கிள்ளி எறிந்தாராம். இந்நிகழ்ச்சியைப் பற்றி பலகதைகள் உண்டு. வராஹபுராணம்:—

பிரம்மா ருத்திரனைப் படைத்து உலகைக் காக்கச் சொன்ஞர். சிவன் அப்படி பணியாற்றுங்கால் சிவனை பிரம்மா கபாலி என்று நிந்தித்தார். சிவன் கோபமடைந்து பிரம்மாவின் தலைகளில் ஒன்றைக் கிள்ளியெறிந்தார் அந்த தலை ருத்ரனின் கையிலேயே ஒட்டிக்கொண்டதாம். கூர்ம புராணக்கதை வேருனது. ஒரு சமயம் ரிஷிகள் படைப்பின் ஆதி மூலம் எதுவென்று பிரம்மாவைக் கேட்டார்களாம். பிரம்மா பெருமையாக தானே முதல்வனென்று பதிலளித்தார். சிவன் அங்கு தோன்றி, பிரம்மா சொல்வதை மறுத்தாராம். பிரம்மா தன் வாதத்தை சாதித்து நிற்க, ஒரு நெருப்புப்பிழம்பு தோன்றியது. அதில் சிவபெருமான் நின்ருர். சிவன் பைரவரை பிரம்மாவின் தலைகளிலொன்றை

வெட்ட உத்திரவிட்டார். அது நிறைவேற்றப்படவும், பிரம்மா வின் பெருமிதம் அழிந்தது.

*பிரம்மாவினும் உயர்ந்து நிற்கும் சிவன் பக்தனின் விதியை மாற்ற வல்லவர். பக்தன் தன் பழைய பாபங்களினின்றும் தப்பி விடக்கோரவில்லை. உண்டான தண்டனைகளை ஏற்றனுபவிக்கத் தயாராக உள்ளான். அவன் பழைய வாசனைகளால் இதயத் திலமரும் தீய சிந்தனைகளையும், ஈசனை நாடாத போக்கையும் மாற்ற வேண்டுகின்றான்.* (15)

विरिञ्चिर्दीर्घायुर्भवतु भवता तत्परशिर-
श्चतुष्कं संरक्ष्यं स खलु भुवि दैन्यं लिखितवान् ।
विचारः को वा मां विशद कृपया पाति शिव ते
कटाक्षव्यापारः स्वयमपि च दीनावनपरः ॥ १६ ॥

விரிஞ்சிர் தீர்காயுர் பவது பவதா தத்பரஶிர-
ஶ்சதுஷ்கம் ஸம்ரக்ஷ்யம் ஸ கலு புவி தைந்யம் லிகிதவான் ।
விசார: கோ வா மாம் விஶத க்ருபயா பாதி ஶிவ தே
கடாக்ஷவ்யாபார: ஸ்வயமபி ச தீநாவநபர: ॥

**हे विशद्**-ஹே நிர்மலஸ்வரூப, **विरिंचिः**-பிரம்மாவானவர் **दीर्घायुर्भवतु**-நீண்ட ஆயுளுடையவராயிருக்கட்டும். **भवता**- உம்மால், **तत्परशिरश्चतुष्कं**-அதைக்காட்டிலும் வேறு நான்கு தலைகளும், **संरक्ष्यं** - காப்பாற்றக்கூடியவைகள், **सः**-அந்த பிரமமா, **भुवि**-பூலோகத்தில், **दैन्यं**-ஏழ்மையை, **लिखितवान् खलु**-எழுதிவிட்டார் அல்லவா! **हे शिव** - மங்களகரமான மஹேச்வரா, **दीनावनपरः**-ஏழையைக் காப்பாற்றக்கூடிய, **ते**-உம்முடைய, **कटाक्षव्यापारः** - கடைக்கண் பார்வை, **स्वयमपि च**-தானாகவே, **कृपया**-கருணையால், **मां**-என்னை, **पाति**-காப்பாற்றுகிறது **को वा विचारः**-அதைப்பற்றி என்ன கவலை?

*புனிதமான சிவபெருமானே! பிரம்மன் பலகாலம் வாழட்டும். நீ அவரது எஞ்சியுள்ள நான்கு தலைகளைக் காப்பாற்றுவாயாக. அவர் உலகில் எனக்கு வறுமையையே விதித்துள்ளார். எளிய*

வர்களையே நோக்கி நிற்கும் உன் பார்வை, தானாகவே என்னைக் காப்பாற்ற இருக்க எனக்கு கவலையிருக்க நியாயமென்ன?

பிரம்மா எவருக்கு வறுமையை விதித்துள்ளாரோ அவர். செய்நன்றியறிபவர்களாக இருக்க வேண்டும். எளியவனாயிருப் பவனுக்கு உதவிக்கு கடவுளை நாடியிருப்பது எளிது. தீனரக்ஷக னாகவும், தீனபந்துவாகவும் இறைவன் எளியவர்களைக் காப்பாற்ற இருக்கின்றான்.

பக்தன் பிரம்மா நீண்டு வாழவேண்டுமென்றும், அவர் நான்கு தலைகளுக்கும் பழுதுவரக் கூடாதென்றும் வாழ்த்து கின்றான். (16)

फलाद्वा पुण्यानां मयि करुणया वा त्वयि विभो
प्रसन्नेऽपि स्वामिन् भवदमलपादाब्जयुगलम् ।
कथं पश्येयं मां स्थगयति नमःसंभ्रमजुषां
निलिम्पानां श्रेणिर्निजकनकमाणिक्यमकुटैः ॥ १७ ॥

பலாத்வா புண்யாநாம் மயி கருணயா வா த்வயி விபோ
ப்ரஸந்நேऽபி ஸ்வாமின் பவதமல பாதாப்ஜ யுகளம் ।
கதம் பஶ்யேயம் மாம் ஸ்தகயதி நம: ஸம்ப்ரமஜுஷாம்
நிலிம்பாநாம் ஶ்ரேணிர் நிஜகநக மாணிக்ய மகுடை: ॥

**हे विभो**-ஸர்வ வியாபக, **स्वामिन्**-லோகநாத ஈச்வரா, **पुण्यानां**-புண்யங்களின், **फलाद्वा**-பலத்தாலாவது, **मयि**-என்னிடம், **करुणया वा**-கருணையினாலாவது, **त्वयि**-தாங்கள், **प्रसन्नेपि**-அனுக்ரகம் செய்யக்கூடியவராயிருந்தபோதிலும் **भवदमलपादाब्जयुगलं**-பரிசுத்தமான தமது இரு பாதாரவிந்தங் களை, **अहं** - நான், **कथं पश्येयं** - எப்படிப் பார்ப்பேன்? **नमस्संभ्रमजुषां** - வணங்குவதில் பரபரப்புடன் கூடிய, **निलिंपानां** - தேவர்களுடைய, **श्रेणिः** - ஸமூகமானது, **निजकनकमाणिक्यमकुटैः** - தங்கள் மாணிக்கம் பதித்த தங்கக் கிரீடங்களால், **मां** - என்னை, **स्थगयति** - மறைக்கிறது.

எங்கும் நிறைந்துள்ள தலைவ! என் நற்செயல்களின் விளைவா கவோ, தாங்கள் என் மீது கொள்ளும் கருணையாலேயோ தங்கள் குற்றமற்ற தாமரைத் திருவடிகளை நான் பார்க்க தாங்கள்

இங்குள்ளீர்கள் ஆனால் தங்களை வணங்க உந்திவரும் தேவர்களின் கிரீட ஒளியால் நான் தங்கள் திருவடிகளைப் பார்க்க முடியவில்லை.

பக்தன் பழைய புண்ணியத்தாலும், இறைவனின் திருவருளாலும் அவன் முன்னிலைக்கு வருதல் கூடும். ஆனால் பக்தன் திருவடிகளைப் பார்க்கக்கூடுமென்னும் உறுதியில்லை. பல தேவர்கள் சுற்றிநின்று கொண்டு அவருக்கு வணக்கம் செலுத்துகின்றார்கள். தேவர்களின் கும்பலும், அவர்களது மணிக்கிரீடங்களின் ஒளியும் உள்ளது.

சிவனே தலையாய தேவன், தேவர்களுக்கு தேவன் என்பது அலங்கரித்துச் சொல்லப்படுகிறது. (17)

त्वमेको लोकानां परमफलदो दिव्यपदवीं
वहन्तस्त्वन्मूलां पुनरपि भजन्ते हरिमुखाः ।
कियद्वा दाक्षिण्यं तव शिव मदाशा च कियती
कदा वा मद्रक्षां वहसि करुणापूरितदृशा ॥ १८ ॥

த்வமேகோ லோகாநாம் பரமபலதோ திவ்யபதவீம்
வஹந்தஸ்த்வந்மூலாம் புநரபி பஜந்தே ஹரிமுகா: ।
கியத்வா தாக்ஷிண்யம் தவ ஶிவ மதாஶா ச கியதீ
கதா வா மத்ரக்ஷாம் வஹஸி கருணாபூரிதத்ருஶா ॥

**हे शिव**–ஸுகஸ்வரூப, **लोकानां**–உலகங்களுக்கு, **परमफलदः**–மோக்ஷம் முதலிய உயர்ந்த பலங்களையளிக்கக் கூடியவர், **त्वमेकः**–தாங்கள் ஒருவர்தான். **हरिमुखाः**-விஷ்ணு முதலிய தேவதைகள், **त्वन्मूलां**-உன்காரணமான, **दिव्यपदवीं**-உயர்ந்த ஸ்தானத்தை, **वहन्तः**–அடைந்தும், **पुनरपि**–மறுபடியும், **भजन्ते**–ஸேவிக்கிறார்கள். **तव**-உமக்கு, **कियद्वा दाक्षिण्यं**-எவ்வளவுதான் தாக்ஷிண்யம் (பிறர் கருத்துப்போல் நடந்துகொள்வது)? **मदाशा च**–என் ஆசைதான் **कियती**–எவ்வளவு? **कदा वा**–எப்பொழுதுதான், **करुणापूरितदृशा**–கருணைநிரம்பிய பார்வையால், **मद्रक्षां वहसि**–என்னைக் காப்பாற்றுவாய்?

உள்ளவைகளுக்கெல்லாம் நன்மை பயப்பவனே! சிவனே! உங்களால் உள்ள தெய்வீக நிலையைப்பற்றி விஷ்ணு முதலான தேவர்கள் அவர்களது நிலைக்கு பழுதுவராமலிருக்க உங்களை வேண்டுகின்றார்கள். உன் அருள்தான் என்னே! என் ஆசையும் எவ்வளவு பெரியது! கருணை நிறைந்த நின் கண்களால் என்னை எப்பொழுது காப்பாற்ற நிற்கின்றாய்?

சிவனையண்டியே பல தேவர்களும் பெருமையை அடைகின்றார்கள். அவர்கள் தங்கள் பயன்களைக் காப்பாற்றவும் வளர்க்கவும் அவனை வேண்டுகின்றார்கள். எல்லோருக்கும் நன்மை விளைவிப்பவன் சிவனே. அருளிற்கும் களன் அவனே. தன்மீது சிவன் கருணைபொழிய வேண்டுமென்று பக்தன் வேண்டுகின்றான்.

दुराशाभूयिष्ठे दुरधिपगृहद्वारघटके
दुरन्ते संसारे दुरितनिलये दुःखजनके ।
मदायासं किं न व्यपनयसि कस्योपकृतये
वदेयं प्रीतिश्चेत्तव शिव कृतार्थाः खलु वयम् ॥ १९ ॥

துராஶா பூயிஷ்டே துரதிபக்ருஹத்வார கடகே
தூரந்தே ஸம்ஸாரே துரிதநிலயே து:க்கஜநகே ।
மதாயாஸம் கிம் ந வ்யபநயஸி கஸ்யோபக்ருதயே
வதேயம் ப்ரீதிச்சேத் தவ ஶிவ க்ருதார்த்தா: கலு வயம் ॥

हे शिव-மங்களரூபியே, दुराशाभूयिष्ठे-அதிக துராசைகளை உடையதாயும், दुरधिपगृहद्वारघटके-துஷ்ட பிரபுக்களின் வீட்டுவாயிற்படியை அடையக்கூடியதாயும், दुरन्ते-முடிவற்றதும், दुरितनिलये-பாபத்திற்கு இருப்பிடமானதும், दुःखजनके-துக்கத்தையுண்டுபண்ணக்கூடியதுமான, संसारे-ஸம்ஸாரத்தில், कस्योपकृतये-பிரம்மாவிற்கு உதவிசெய்வதற்காக, मदायासं-என் கஷ்டத்தை, न व्यपनयसि किं-போக்கவில்லையா என்ன? वद-சொல்லும், तव इयं प्रीतिश्चेत्-உமக்கு இந்த ப்ரியமிருக்குமானால், वयं-நாங்கள், कृतार्थाः खलु-பலனடைந்தவர்களாவோம் அல்லவா!

*சம்சாரத்தின் தொல்லைகளால் ஆசைகள் நிறைந்து தீயோர்களின் வாயில்களுக்கு—பாபத்தின் நிலைக்களமும், துன்பத்தின் பிறப்பிடமுமாகும் — ஓயாது சென்று நான் அலைவதை நீ பிரம்மாவிற்கு உதவுவதற்காக அழிக்காது விடுகின்றாய் போலும்! அதுவே நின் திருவுள்ளமானால் நானும் அதைத் திருவருளாகக் கொள்கின்றேன்.*

*ஒருவனது தீயபான்மையும், கெட்ட போக்குகளும் இறைவன் அருளாலேயே மாற்றமடையும், இறைவனால் மாற்றப்படக் கூடாதது ஒன்றுமில்லை. இறைவன் திருவருளிற்கு முன்பு வினை நிற்பதில்லை.*

*தீவினையின் பயனாகவே கொடுங்கோல் மன்னரின் ஈகையை நோக்கி அவனிடம் செல்லுதலும் ஏற்படுகின்றது.* (19)

सदा मोहाटव्यां चरति युवतीनां कुचगिरौ
नटत्याशाशाखास्वटति झटिति स्वैरमभितः ।
कपालिन् भिक्षो मे हृदयकपिमत्यन्तचपलं
दृढं भक्त्या बद्ध्वा शिव भवदधीनं कुरु विभो ॥ २० ॥

ஸதா மோஹாடவ்யாம் சரதி யுவதீநாம் குசகிரௌ
நடத்யாஶாஶாகாஸ்வடதி ஜடிதி ஸ்வைரமபித: ।
கபாலின் பிக்ஷோ மே ஹ்ருதயகபிமத்யந்தசபலம்
த்ருடம் பக்த்யா பத்வா ஶிவ பவததீநம் குரு விபோ ॥

**विभो**-ஸர்வவியாபக, **शिव**-ஸுகஸ்வரூப, **भो कपालिन्** கபாலத்துடன் கூடியவரே, **भिक्षो**-பிக்ஷாடனம் செய்கிறவரே, **सदा**-எப்பொழுதும், **मोहाटव्यां**-அஞ்ஞானமாகிய காட்டில் (**हृदयकपिः**-மனமாகிற குரங்கு,) **चरति**-ஸஞ்சரிக்கிறது. **युवतीनां**-யௌவனஸ்திரீகளின், **कुचगिरौ**-ஸ்தனங்களாகிற மலையில், **नटति**-நர்த்தனம் செய்கிறது. **आशाशाखासु**-மனைவி மக்களிடம் ஆசையாகிற கிளைகளில், **स्वैरं**-இஷ்டப்படி, **अभितः**-நாலு பக்கத்திலும், **झटिति**-சீக்கிரம், **अटति**-ஸஞ்சரிக்கிறது. **अत्यन्तचपलं**-அதிக சஞ்சல ஸ்வபாவமுள்ள, **मे**-என்னுடைய, **हृदयकपिं**-மனமாகிற குரங்கை, **दृढं**-கெட்டி

யாய், भक्त्या–பக்தியாகிற கயிறுல், बद्ध्वा–கட்டி, भवदधीनं–உமக்கு ஸ்வாதீனமாக, कुरु–செய்யும்.

சிவனே! பிச்சைப்பாத்திரமாக மண்டையோட்டை உடையவனே! எங்கும் நிறைந்த ஒருவனே! ஓ பிச்சைக்காரனே, என்னுடைய குரங்கு மனது, மாயைக்காட்டில் திரிகின்றது. பெண்கள் மார்பில் குதிக்கின்றது. மரத்தின் ஒரு கிளையினின்று மற்றொன்றிற்கு விடாது குதித்துத் தாவி அலைகின்றது அதையே நான் உனக்குப் பிச்சையாகக்கொடுக்கின்றேன். அதை ஏற்றுக் கொண்டு பக்தியென்னும் கயிற்றால் பிணைத்து அதை உன் ஆதீனத்தில் வைத்துக்கொள்வாயாக!

இங்கு மனது குரங்கிற்கு உவமிக்கப்படுகின்றது. டார்வின் சொல்படி குரங்கு முற்றியே மனிதன் உண்டாவனென்பது உண்மையோ அன்றோ, மனிதன் மனதிற்கும் குரங்கின் செய்கைக்கும் ஒருமைப்பாடு நிச்சயமாக இருக்கின்றது. உணர்ச்சிகளால் உந்தப்பட்டும் ஆசைகளால் விரட்டப்பட்டும், மனது ஒவ்வொன்றுகப் பற்றியோடுகின்றது. அது அமைதியற்று சுழன்று திரிகின்றது.

மனதை ஈசுவர பக்தியினுல் அடக்கியாளலாம். சிவன் திருவிளையாடல்களில் அவர் மண்டையோட்டை ஏந்தி பிச்சைக்குச் செல்வதும் ஒன்று இந்தப் பாவில் மனமென்னும் குரங்கையே பிச்சையாகக்கொடுக்கின்றார். அவர் அக்குரங்கை பக்தியென்னும் கயிற்றால் கட்டி, அதை அடக்கி வைத்துக் கொள்வாராயின் அவருக்கு வேண்டிய பிச்சை கிடைக்கும். (20)

धृतिस्तम्भाधारां दृढगुणनिबद्धां सगमनां
विचित्रां पद्माढ्यां प्रतिदिवससन्मार्गघटिताम् ।
स्मरारे मच्चेतःस्फुटपटकुटीं प्राप्य विशदां
जय स्वामिन् शक्त्या सह शिव गणैः सेवित विभो ॥

த்ருதிஸ்தம்பாதாராம் த்ருடகுணநிபத்தாம் ஸகமநாம்
விசித்ராம் பத்மாட்யாம ப்ரதிதிவஸஸந்மார்க்க கடிதாம்
ஸ்மராரே மச்சேத:ஸ்புடபடகுடீம் ப்ராப்ய விஶதாம்
ஜய ஸ்வாமிந் ஶக்த்யா ஸஹ ஶிவ கணை: ஸேவித விபோ॥

**स्मरारे**-மன்மதனை எரித்தவரே, **विभो**-ஸர்வவியாபக, **शिव**-ஸுகஸ்வரூப, **स्वामिन्**-லோகநாத, **गणैः सेवित**-பிரமத கணங்களால் ஸேவிக்கப்பட்டவரே, **धृतिस्तम्भाधारां**-தைரிய மாகிற ஸ்தம்பத்தை ஆதாரமாக உடையதாயும், **दृढगुण-निबद्धां**-உறுதியான குணங்களால், குணங்களாலுண்டான சரீரத்தால் (உறுதியான கயிறுகளால்) கட்டப்பட்டதாயும், **सगमनां**-பலவேறு இடங்களுக்குப் போகக்கூடியதாயும், **विचित्रां**-நாநாவித வாஸனையுடன் கூடியதாயும் (பலவர்ணங் களுடன் கூடியதும்) **पद्माढ्यां**-லக்ஷ்மீ பிரார்த்தனையுடன், பணஆசையுடன் கூடியதும் (தாமரைபோன்ற சித்திரத் துடன் கூடியதும்), **प्रतिदिवससन्मार्गघटितां**-தினந்தோறும் ஆத்மவிசார வழியில் ஈடுபட்டதும் (ராஜமார்க்கங்களில் கட்டப்பட்டதும்), **विशदां**-நிர்மலமானதுமான, **मच्चेतस्स्फुट-पटकुटीं**-என் மனமாகிற பிரகாசமான துணியால் செய்யப் பட்ட சிறுகுடிசையை, **शक्त्या सह**-அம்பிகையுடன்கூட, **प्राप्य**-அடைந்து, **जय**-பிரகாசிப்பாய். (இந்த சுலோகத்தில் மனதிற்கும் துணியால் செய்யப்பட்ட சிறுகுடிசைக்கும் சில இடங்களில் இரண்டு விதமான அர்த்தம் கூறப்பட்டது.)

மன்மதனையழித்தவனே! இறைவா! சிவனே, உன்னைத் தேவர்களும் பணிகின்றார்கள். எங்கும் நிறைந்தவனே, உமை யுடன் என் மனதென்னும் கூடாரத்தில் குடிபுகு. அதன் நடுமரம் உறுதியானது நல்ல சீலங்களென்னும் கயிறுகளால் அது இறுக கட்டப்பட்டுள்ளது. அதை எங்கும் எடுத்துச்செல்லலாம். அதில் பல நிறங்களும் உள்ளன. தாமரைப்பூக்கள் பொறிக்கப்பட் டுள்ளன. தினமும் நெடுவழிகளில் அதை எடுத்துச்செல்லலாம். வெற்றி உனக்கு உண்டாகட்டும்.

இங்கு மனது ஒருவலுவாய சௌகரியங்கள் நிறைந்த கூடாரத்திற்கு உவமிக்கப்படுகின்றது. தீமையை ஒழிக்க படை யெடுக்கும்பொழுது இதை உபயோகப்படுத்திக்கொள்ள இறைவன் வேண்டப்படுகிறார். உமையுடன் இறைவன் அதில் குடிபுகவுமே தீமையை அழிப்பது உறுதியாகின்றது மனமென்னும் கூடாரத்தைப் பகைவர்கள் கைப்பற்றிக்கொள்ளா வண்ணம் பார்த்துக்கொள்ளவேண்டும். (21)

प्रलोभाद्यैरर्थाहरणपरतन्त्रो धनिगृहे
प्रवेशोद्युक्तः सन् भ्रमति बहुधा तस्करपते ।
इमं चेतश्चोरं कथमिह सहे शंकर विभो
तवाधीनं कृत्वा मयि निरपराधे कुरु कृपाम् ॥ २२ ॥

*ப்ரலோபாத்யைரர்த்தாஹரணபரதந்த்ரோ தநிக்ருஹே*
*ப்ரவேசோத்யுக்த: ஸன் ப்ரமதி பஹுதா தஸ்கரபதே ।*
*இமம் சேதச்சோரம் கதமிஹ ஸஹே சங்கர விபோ*
*தவாதீநம் க்ருத்வா மயி நிரபராதே குரு க்ருபாம் ॥*

**शंकर**–க்ஷேமத்தை உண்டுபண்ணுகிறவரே, **विभो**–வியாபக, **तस्करपते**-திருடர்களுக்கு அரசே (இது நிந்தா ஸ்துதி), **प्रलोभाद्यैः**–ஆசைகாட்டுவது முதலியவற்ருல், **अर्थाहरणपरतन्त्रः**–பொருள்பறிப்பதிலேயே ஊக்கம்கொண்டு (என் மனமாகிய திருடன்), **धनिगृहे**–பொருளுள்ளவர்கள் வீட்டில் **प्रवेशोद्युक्तस्सन्**–உள்ளே போவதில் முயற்சித்துக்கொண்டு, **बहुधा**–அனேகவிதமாய், **भ्रमति**–சுற்றுகிருன். **इमं चेतश्चोरं**–இந்த மனமாகிய திருடனை, **इह**–இப்பொழுது, **कथं**–எப்படி, **सहे**–பொறுத்துக்கொள்ளுவேன்? **तवाधीनं कृत्वा**–உமக்கு ஸ்வாதீனமாய்ச் செய்து, **निरपराधे**-அபராதமில்லாத, **मयि**–என்னிடத்தில், **कृपां**–கருணையை, **कुरु**–செய்யும்.

*ஓ சங்கரா! முதலாகும் கள்வா! எங்கும் நிறைந்துள்ளவனே என் மனமென்னும் கள்வன் பேராசையால் தூண்டப்பட்டு, பிறர் வீடுகளில் புகும் தொழிலில் அலைகின்ருன். அவனை அடக்கி உன் வசப்படுத்திக்கொண்டு குற்றமற்ற என்மீது கருணை பொழிவாயாக!*

*வஞ்சனை, பித்தலாட்டம் இவைகளையே கையாளும் திருடனைப் போன்று மனது அமைகின்றது. விருப்புகள், வெறுப்புகள், பேராசை, பற்றுள்ளம், கோபம் முதலிய மனோ நிகழ்ச்சிகளும் திருடனுடன் உவமிக்கப்படுகின்றன. நல்லது கெட்டது அறியும் ஞானத்தை அவை பலவும் திருடவே செய்கின்றன. இறைவனன்றி வேறு யார் மனதை அடக்கமுடியும்? அவர் திருடர்களுக்கும் தலைவன் (1) அவரே உலகிற்கெல்லாம் தலைவர் (2) அவர்*

பக்தர்களின் இதயத்தை திருடுகின்றார். வேதங்கள் ருத்ர சிவனை திருடர்களுக்குத் தலைவன் என்று வணங்குகிறது (தஸ்கராணாம் பதயே நம:) (22)

करोमि त्वत्पूजां सपदि सुखदो मे भव विभो
विधित्वं विष्णुत्वं दिशसि खलु तस्याः फलमिति ।
पुनश्च त्वां द्रष्टुं दिवि भुवि वहन् पक्षिमृगता-
मदृष्ट्वा तत्खेदं कथमिह सहे शंकरविभो ॥ २३ ॥

கரோமி த்வத்பூஜாம் ஸபதி ஸுகதோ மே பவ விபோ
விதித்வம் விஷ்ணுத்வம் திசஸி கலு தஸ்யா: பலமிதி ।
புநச்ச த்வாம் தரஷ்டும் திவி புவி வஹன் பக்ஷிம்ருகதாம்
அத்ருஷ்ட்வா தத்கேதம் கதமிஹ ஸஹே சங்கரவிபோ ॥

शंकर-சங்கர, विभो-வியாபக, त्वत्पूजां-உனக்கு பூஜையை, करोमि-செய்கிறேன். सपदि-உடனே, मे-எனக்கு सुखदः-அழிவற்ற சுகத்தை கொடுப்பவராக भव-இரு. तस्याः-அந்த பூஜைக்கு, विधित्वं-பிரம்மஸ்தானமும், विष्णुत्वं-விஷ்ணுஸ்தானமும், फलमिति-பலமென்று, दिशसि खलु-கொடுக்கிறீர் அல்லவா ? पुनः-மறுபடியும், त्वां-உம்மை, द्रष्टुं-பார்ப்பதற்கு, दिवि-ஆகாயத்திலும், भुवि च-பூமியிலும் पक्षिमृगतां-பறவை (அன்னம்) மிருகம் (பன்றி) இவைகளின் தன்மையை, वहन् - அடைகிறவனாக, (त्वां - உம்மை) अदृष्ट्वा-காணாமல், तत्खेदं-அந்த துக்கத்தை, इह-இவ்வுலகில், कथं-எப்படி, सहे-பொறுத்துக்கொள்ளுவேன்.

ஓ சங்கரா! எங்கும் பரந்து நிற்பவனே! நான் உன்னை வணங்குகின்றேன். எனக்கு உடனே பேரானந்தத்தை அருளுவாயாக! என் தவப்பயனாக நீ எனக்கு பிரம்மா, விஷ்ணு இவர்களின் நிலையைக்கொடுத்தால், நான் பறவையாகவும், மிருகமாகவும் உருவெடுத்து உன்னை மூவுலகங்களிலும் தேடி காணாது வருந்தும் நிலை உண்டாகும். அந்த வருத்தத்தை நான் எவ்வாறு ஏற்பேன்,

தன் பக்தியின் பயனாக பக்தன் மோக்ஷத்தையே வேண்டுகின்றான். அதற்கு குறைவானதெதுவும் அவனுக்கு திருப்தியைக்

கொடுக்காது. உயர் தேவர்களாகும் விஷ்ணு. பிரம்மாக்களின் நிலையும் அவனுக்குத் திருப்தியைக் கொடுப்பதில்லை.

சிவனது அடிமுடிகளைத்தேடி, பிரம்மனும் விஷ்ணுவும் அலைந்து காணுது நின்ற கதையே இங்கு குறிக்கப்படுகின்றது. பிரம்மாவும், விஷ்ணுவும் ஒரு சமயம் தங்களுடைய உயர் நிலையைப் பற்றி விவாதித்தார்கள். சிவபெருமான் அவர்களுக்கு முன் ஒரு சோதிக்கம்பமாகத் தோன்றினர் அதற்கு அடியும் முடியும் காணவில்லை. பிரம்மாவும் விஷ்ணுவும் அந்த லிங்கத்தின் எல்லைகளைக் கண்டு வருவதாக தங்களுக்குள் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அதன்படி யார் அதில் வெற்றிபெறுகின்றுர்களோ அவரே உயர்ந்தவரென்றும் கொண்டார்கள். விஷ்ணு ஒரு வராஹத்தின் (பன்றி) உருவை எடுத்துக்கொண்டு பாதாளத்திற்குக் குடைந்து சென்றுர். பிரம்மா ஹம்ஸத்தின் உருவத்தில் மேலே பறந்து முடியைக் காண விரைந்தார். இருவரும் தம் சபதத்தில் வெற்றி பெறவில்லை. தங்கள் பெருமிதம் தணிய, தேவாதி தேவனுகும் சிவனையே முதற்கடவுளாக ஏற்றுக் கொண்டார்கள். திருவண்ணுமலையிலுள்ள அருணுசலமலையே சிவபெருமான் சோதிலிங்கமாக திருமாலுக்கும் பிரம்மாவுக்கும் தோற்றம் கொடுத்த இடம் என்று பரம்பரை கொள்கின்றது.

சிவானந்தலஹரியின் பல சுலோகங்களில் சங்கரர், பிரம்ம விஷ்ணுக்களால் சிவ பெருமானின் பெருமை அளந்தறியக் கூடாததைக் குறிக்கின்றுர். (23)

**कदा वा कैलासे कनकमणिसौधे सह गणै-**
**र्वसन् शंभोरग्रे स्फुटघटितमूर्धाञ्जलिपुटः ।**
**विभो साम्ब स्वामिन् परमशिव पाहीति निगद-**
**न्विधातॄणां कल्पान् क्षणमिव विनेष्यामि सुखतः ॥ २४ ॥**

கதா வா கைலாஸே கநகமணிஸெளதே ஸஹ கணை:
வஸன் ஶம்போரக்ரே ஸ்புடகடித மூர்தாஞ்ஜலிபுட: ।
விபோ ஸாம்ப ஸ்வாமின் பரமஶிவ பாஹீதி நிகதன்
விதாத்ருணும் கல்பான் க்ஷணமிவ விநேஷ்யாமி ஸுகத:॥

**कैलासे**—கைலாஸபர்வதத்தில், **कनकमणिसौधे**—தங்கம் ரத்னம் முதலியவைகளால் கட்டப்பட்ட உப்பரிகையில்,

**गणैः सह**-பிரமத கணங்களுடன், **वसन्** -வஸித்துக்கொண்டு **शंभोरग्रे**-ஈசுவரனுக்கு முன்னால், **स्फुटघटितमूर्धाञ्जलिपुटः**-நன்கு தெரியும்படி சிரஸ்ஸில் அஞ்ஜலிபந்தம் செய்துகொண்டு, **भो विभो**-ஸர்வவ்யாபக, **साम्ब**-அம்பிகையுடன்கூடியவரே **स्वामिन्** -லோகநாத, **परम**-உயர்ந்தவரே, **शिव**-மங்கள மூர்த்தியே, **पाहि**-காப்பாற்று, **इति**-என்று, **निगदन्**-சொல்லிக்கொண்டு, **विधातॄणां कल्पान्** அநேகம் பிரம்ம கல்பங்களை, **सुखतः**-சுகமாக, **क्षणमिव**-ஒருக்ஷணமேபோல், **कदा वा**-எப்பொழுதுதான், **विनेष्यामि**-போக்குவேனோ ?

*நான் எப்பொழுது கைலாசத்தில் வசிப்பேன். தங்கத்தாலும் பச்சைக்கற்களாலும் அலங்கரிக்கப்பட்ட கூடத்தில் தேவகணங்களால் சூழப்பட்டிருக்கும் சிவபெருமானை, இருகரமும் உச்சி மீது குவியப்பணிந்து 'எங்கும் நிறைந்தவனே உமையொருபாகா! இறைவா! பரமாகிய சிவனே! என்னைக்காப்பாற்று' என்று கூவி பிரம்ம யுகங்களும் கணமாக எப்பொழுது காலம் கழிப்பேன் ?*

*இங்கு சிவபெருமானின் நிலையிடமாகிய கைலாயத்தின் வருணனை உள்ளது. அங்கு காலத்தை அளக்கமுடியாத முக்காலமே நிலையுள்ளது. ஒருவன் சிவனை வணங்கும்பொழுது அவனுக்கு கால உணர்ச்சி உண்டாவதில்லை.* (24)

**स्तवैर्ब्रह्मादीनां जयजयवचोभिर्नियमिनां**
**गणानां केलीभिर्मदकलमहोक्षस्य ककुदि ।**
**स्थितं नीलग्रीवं त्रिनयनमुमाश्लिष्टवपुषं**
**कदा त्वां पश्येयं करधृतमृगं खण्डपरशुम् ॥ २५ ॥**

ஸ்தவைர்ப்ரஹ்மாதீநாம் ஜயஜயவசோபிர் நியமிநாம்
கணாநாம் கேலீபிர்மதகலமஹோக்ஷஸ்ய ககுதி ।
ஸ்திதம் நீலக்ரீவம் த்ரிநயநமுமாச்லிஷ்டவபுஷம்
கதா த்வாம் பச்யேயம் கரத்ருதம்ருகம்
கண்டபரசும் ॥

**ब्रह्मादीनां**-பிரம்மாதி தேவர்களுடைய, **स्तवैः**-துதிகளாலும், **नियमिनां**-ரிஷிகளுடைய, **जयजयवचोभिः**-ஜய விஜய

சப்தங்களாலும், **गणानां**-பிரமதகணங்களின், **केलीभिः**-கோலாஹலங்களுடனும்கூடி, **मदकलमहोक्षस्य**-மதத்தினுல் அழகான உயர்ந்த விருஷபத்தின், **ककुदि**-திமிழ் பிரதேசத்தில், **स्थितं**-இருப்பவரும், **नीलग्रीवं**-கருமையான கழுத்துடன் கூடியவரும், **त्रिनयनं**-முக்கண்ணராயும், **उमाश्लिष्टवपुषं**-பார்வதியுடன் கூடிய சரீரத்தையுடையவரும், **करधृतमृगं**-மானைக்கையிலேந்தியவரும், **खण्डपरशुं**-பாதிகோடரியுடைய வருமான, **त्वां**-உம்மை, **कदा**-எப்பொழுது, **पश्येयं**-பார்ப்பேன்.

*நீலகண்டமும், முக்கண்ணும் உமையால் தழுவப்பட்ட உடலும், கைகளில் மானும், கோடாலியும் கொண்டு பெரிய ரிஷபம் (எருது) முதுகில் சவாரி வர, பிரம்மா முதலிய தேவர்கள் உன் வாழ்த்துகளைப்பாட துறவிகள் போற்றி, போற்றி என்று வாழ்த்த, தேவகணங்கள் நர்த்தனமாடவுள்ள உன் உருவை நான் எப்பொழுது காண்பேன்.*

*பக்தன் கைலாய தரிசனத்தை வேண்டுகின்ருன். நீலகண்டம், மூன்று கண்கள், அர்த்தநாரி உருவம், இச்சிறப்புகள் இங்கு குறிக்கப்படுகின்றன. இவை மூன்றும் எல்லையற்ற கருணையை விளக்குவன. கைலாயத்தில் துக்கம் என்பதில்லை. எல்லாம் மகிழ்ச்சியும் ஆனந்தமும்தான். சிவன் முன்பு பல உயிர்களும் தம் நிலைகளை மறந்து தமது தனித்தன்மையை இழக்கின்ருர்கள். சிவனைப்புகழ்ந்து பாடும்பொழுதும் மெய்மறந்து, ஆடும்பொழுதும் அவர்கள் தங்களையே மறந்துவிடுகின்ருர்கள். பெருங்கருணையின் அநுபவமே கைலாயம்.* (25)

**कदा वा त्वां दृष्ट्वा गिरिश तव भव्याङ्घ्रियुगलं**
**गृहीत्वा हस्ताभ्यां शिरसि नयने वक्षसि वहन् ।**
**समाश्लिष्याघ्राय स्फुटजलजगन्धान् परिमला-**
**नलभ्यां ब्रह्माद्यैर्मुदमनुभविष्यामि हृदये ॥ २६ ॥**

கதா வா த்வாம் த்ருஷ்ட்வா கிரிஶ தவ பவ்யாங்க்ரியுகளம்
க்ருஹீத்வா ஹஸ்தாப்யாம் ஶிரஸி நயனே வக்ஷஸி வஹன் ।

ஸமாச்லிஷ்யாக்ராய ஸ்புடஜலஜகந்தான் பரிமளான்
அலப்யாம் ப்ரஹ்மாத்யைர்முதமநுபவிஷ்யாமி
ஹ்ருதயே ॥

**गिरिश**–கைலாஸ பர்வதத்திலிருக்கிற ஈச்வர, **कदा वा**–எப்பொழுது, **त्वां दृष्ट्वा**–உம்மைப் பார்த்து, **तव**–உம்முடைய, **भव्यांघ्रियुगलं**–நன்மைதரும் இருபாதகமலங்களை, **हस्ताभ्यां**–இருகைகளாலும், **गृहीत्वा**–பிடித்துக்கொண்டு, **शिरसि**–சிரஸ்ஸிலும், **नयने**–இருகண்களிலும், **वक्षसि**–மார்பிலும், **वहन्**–வைத்துக்கொண்டும், **समाश्लिष्य** அணைத்துகொண்டும் **स्फुटजलजगन्धान्**-மலர்ந்த தாமரை மலரின் வாஸனைபோன்ற **परिमलान्**-வாஸனைகளை, **आघ्राय**–முகர்ந்தும், **ब्रह्माद्यैः**-பிரம்மாதி தேவர்களாலும், **अलभ्यां**–அடையமுடியாத, **मुदं**–ஸந்தோஷத்தை, **हृदये**–மனதில், **अनुभविष्यामि**–அனுபவிப்பேன்.

மலையில் வாழ்பவனே உன்னைப்பார்த்துக்கொண்டும் உன் திருவடிகளை என் கைகளால் இறுகப்பற்றிக்கொண்டும், அவைகளை என் மார்பு, தலை, கண்கள் இவைகளில் ஒற்றிக்கொண்டும் அலர்ந்த தாமரை மலரின் நாற்றத்தை முகர்ந்துகொண்டும் இருக்கும் பெரும் பாக்கியம் பிரம்மா முதலானவர்களுக்கும் கிட்டாதது எனக்கு என்று கிட்டுமோ ?

ஒருவனது உடல், உணர்ச்சி, மனது இவைகளில் சிவனே நிறைதல் வேண்டும் உணர்ச்சிகளால் வரும் இன்பம், சிவனிடமிருந்து கிடைக்கும் ஆனந்தத்திற்கு எம்மாத்திரம்! பக்தன் சிவனிடமே இருக்கவும், நெருங்கவும் அவனிலேயே கரைந்து படவும் சதா வேண்டுகிறான். (26)

**करस्थे हेमाद्रौ गिरिश निकटस्थे धनपतौ**
**गृहस्थे स्वर्भूजामरसुरभिचिन्तामणिगणे ।**
**शिरस्स्थे शीतांशौ चरणयुगलस्थेऽखिलशुभे**
**कमर्थं दास्येऽहं भवतु भवदर्थं मम मनः ॥ २७ ॥**

கரஸ்த்தே ஹேமாத்ரௌ கிரிச நிகடஸ்தே தநபதௌ
க்ருஹஸ்தே ஸ்வர்பூஜாமரஸுரபிசிந்தாமணிகணே ।

சிரஸ்தே சீதாம்சௌ சரணயுகளஸ்தேऽகிலசுபே
கமர்த்தம் தாஸ்யேஹம் பவது பவதர்த்தம் மம மந: ॥

**हे गिरिश**–கைலாஸபர்வதத்திலிருக்கிற ஈச்வர, **हेमाद्रौ**–மஹாமேரு பருவதம், **करस्थे**–கையிலிருக்கும்பொழுது, **धनपतौ**–குபேரன், **निकटस्थे**–பக்கத்திலிருக்கும்பொழுது, **स्वर्भूजामरसुरभिचिन्तामणिगणे**–கல்பவிருக்ஷம், காமதேனு, சிந்தாமணி ரத்னம் இவைகள், **गृहस्थे**-கிருஹத்திலிருக்கும்பொழுது, **शीतांशौ**-சந்திரன், **शिरस्स्थे**-சிரஸ்ஸிலிருக்கும்பொழுது, **अखिलशुभे**-ஸமஸ்த மங்களமும், **चरणयुगलस्थे**-திருவடிகளிலிருக்கும் பொழுது, **अहं**–நான், **कमर्थं**–எந்தப்பொருளை, **दास्ये**–கொடுப்பேன்? **मम मनः**–என் மனமானது, **भवदर्थं**–உமக்காக, **भवतु**–இருக்கட்டும்.

மலையில் வதிப்பவனே! தங்கமேருமலை உன் கையில் அம்பாக (வில்லாக), குபேரன் (செல்வத்தின் தேவன்) உன்னருகாமையில் நிற்க (உன் பணியாளாக) உன் வீட்டில் தெய்வீகமரங்கள் (கல்பக விருக்ஷங்கள்) வளர, காமதேனுவும், விரும்புவதைக்கொடுக்கும் மணிகளுமிருக்க, குளிர்ந்த பிறை உன் தலையில் பிரகாசிக்க, மங்களமானவையெல்லாம் உன் அடிகளில் குவிய, நான் எந்தப் பொருளைத்தருவது! என் மனதையே உனக்கு அர்ப்பணம் செய்ய வேண்டுவதுதான்.

சிவபெருமான் மதிப்புள்ளவைகளுக்கெல்லாம் மூலமாகையில் நாம் அவருக்கு மதிப்புள்ள எதைக் கொடுக்கமுடியும்? அவரிடமில்லாததொன்று எது? அதை நாம் அவருக்கு எப்படிக்கொடுப்பது? அவரடிகளினின்றே மங்களம் ஓடுகின்றது. நமது செல்வத்தையும், நம் உலக சமர்ப்பணங்களையும் அவர் வேண்டுவதில்லை அவை பலவும் அவரது அருட்பயனே. அவருக்கு நாம் நம் மனதையே கொடுக்கவேண்டும். நம் எண்ணங்களை அவருக்கே சமர்ப்பிப்போம். நம் உணர்ச்சிகளும் அவனை நாடியே செல்லட்டும் நாம் எப்பொழுதும் அவனையே சிந்திப்போமாக. (27)

सारूप्यं तव पूजने शिव महादेवेति संकीर्तने
सामीप्यं शिवभक्तिधुर्यजनतासांगत्यसंभाषणे

सालोक्यं च चराचरात्मकतनुध्याने भवानीपते
सायुज्यं मम सिद्धमत्र भवति स्वामिन्कृतार्थोऽस्म्यहम् ॥

ஸாரூப்யம் தவ பூஜனே ஶிவ மஹாதேவேதி ஸங்கீர்த்தனே
ஸாமீப்யம் ஶிவபக்திதுர்யஜனதாஸாங்கத்ய
ஸம்பாஷணே ।
ஸாலோக்யம் ச சராசராத்மகதநுத்யானே பவாநீபதே
ஸாயுஜ்யம் மம ஸித்தமத்ர பவதி ஸ்வாமின்
க்ருதார்த்தோऽஸ்ம்யஹம் ॥

**भवानीपते**-அம்பிகாபதே, **स्वामिन्**-லோகநாத, **तव पूजने**-உம்மை அர்ச்சிப்பதில், **मम**-எனக்கு, **सारूप्यं**-ஸமான ரூபமான முக்தியும், **शिव महादेवेति**-சிவ, மஹாதேவ என்று, **संकीर्तने**-சொல்வதில், **सामीप्यं**-ஸமீபத்திலிருக்கும் முக்தியும் **शिवभक्तिधुर्यजनतासाङ्गत्यसंभाषणे**-சிவனிடம் பக்தி கொண்ட ஜனங்களுடன் சேர்ந்து ஸம்பாஷிப்பதில், **सालोक्यं**-ஸமான லோகத்திலிருப்பதான முக்தியும், **चराचरात्मकतनुध्याने**-ஸ்தாவர ஜங்கம ரூபமான உம் உருவத்தின் தியானத்தினுல் **सायुज्यं च**-ஒன்ருகக்கலந்து இருக்கும்படியான முக்தியும் **सिद्धं भवति**-நிச்சயமாக ஏற்படுகிறது. **अतः**-ஆகையால், **अहं**-நான், **अत्र**-இங்கேயே, **कृतार्थः अस्मि**-பரமலாபத்தை அடைந்தவனுகிறேன்.

*பார்வதியின் கணவ! பூஜையால் அதே உருவையும் (ஸாரூப்யம்), (ஸாமீப்ய) உனது அருகாமையை சிவ மகாதேவா என்று பாடுவதாலும், அதே இடத்தில் வசிப்பதை (ஸாலோக) சிவபக்தி தியானங்களில் சிறந்தவருடன் பேசுவதிலும் வசிப்பதினுலும், பக்தியும் ஒற்றுமையும்(ஸாயுஜ்யம்) எல்லாவற்றையும் அடக்கும் உன்னுருவை தியானிப்பதாலும் இங்கேயே அடையப்படவேண்டும் அதுவே எனக்கு பெரும் பயன். அதைப் பெற்றுவிட்டேன்.*

*இறுதி நிலையாகும் முக்தியில் பல படிகள் இல்லாவிட்டாலும் ஈசுவரானுபூதி ஸகுண பிரம்ம உபாசனைகளில் பல நிலைகள் உள்ளன. நான்கு நிலைகள் வகுக்கப்படுகின்றன. (1) ஸாலோகம் என்பது இறைவன் உள்ள அதே இடத்தில் தங்குவது (2) ஸாமீப.*

இறைவனருகாமையிலேயே தங்குவது (3) ஸாரூப ஒருருவு பெறுதல் (4) ஸாயுஜ்ய, ஒன்றுதல். சைவசித்தாந்தத்தின்படி சரியை, கிரியை, யோகம் ஞானம் என்ற நான்குபடிகள் அமைகின்றன. சரியையென்பது திருக்கோயில்களை பெருக்கி மெழுகி சுத்தம் செய்தல், இறைவனடியார்களுக்குத் தொண்டுசெய்தலாகும். கிரியை என்பது முறையான பூஜைசெய்தல், யோகமென்பது சிந்தனையும், தியானமும். ஞானமென்பது அறிவு வழி, இறைவனை அடைதல். அப்பர், ஞானஸம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நான்குநாயன்மார்கள் இந்த வழிகளை விளக்குபவர்கள் என்று கொள்ளப்படுகின்றது.

இந்த சுலோகத்தில் ஈசுவரானுபவத்தின் படிகளும் அவைகளையடையும் வழியும் விவரிக்கப்படுகின்றது. (28)

त्वत्पादाम्बुजमर्चयामि परमं त्वां चिन्तयाम्यन्वहं
त्वामीशं शरणं व्रजामि वचसा त्वामेव याचे विभो ।
वीक्षां मे दिश चाक्षुषीं सकरुणां दिव्यैश्चिरं प्रार्थितां
शंभो लोकगुरो मदीयमनसः सौख्योपदेशं कुरु ॥ २९ ॥

த்வத்பாதாம்புஜமர்சயாமி பரமம் த்வாம்
சிந்தயாம்யன்வஹம்
த்வாமீசம் சரணம் வ்ரஜாமி வசஸா த்வாமேவ யாசே
விபோ ।
வீக்ஷாம் மே திச சாக்ஷுஷீம் ஸகருணாம்
திவ்யைச்சிரம் ப்ரார்த்திதாம்
சம்போ லோககுரோ மதீயமனஸ:
ஸௌக்யோபதேசம் குரு ॥

विभो–நாநாரூபங்களுடன் கூடியவரே, परमं–சிரேஷ்டமான, त्वत्पादाम्बुजं–உன் பாதாரவிந்தத்தை, अन्वहं–தினந்தோறும் अर्चयामि–பூஜிக்கிறேன். त्वां–உம்மை, चिन्तयामि–தியானம் செய்கிறேன். ईशं–ஸர்வலோகநாதனை, त्वां–உம்மை, शरणं–சரணமாக, व्रजामि–அடைகிறேன். वचसा–வார்த்தையால், त्वामेव–உம்மையேதான், याचे–யாசிக்கிறேன். शंभो–க்ஷேமத்தையுண்டுபண்ணுகிறவரே, लोकगुरो–உலகங்

களுக்கு குருவான ஈச்வரா, दिव्यैः-தேவதைகளால், चिरं-வெகுகாலம், प्रार्थितां-பிரார்த்திக்கப்பட்டதான, सकरुणां-கருணையுடன்கூடிய, चाक्षुषीं वीक्षां-கடைக்கண் பார்வையை मे-எனக்கு, दिश-கொடுக்கவேண்டும். मदीयमनसः-என் மனதுக்கு, सौख्योपदेशं-நித்யானந்தமான ப்ரஹ்மத்தின் உபதேசத்தை, कुरु-செய்யும்.

எங்கும் பரந்து நிற்கும் ஒருவ, தங்கள் திருவடிகளை நான் பூஜிக்கின்றேன். பரமமாகிய உன்னை தினமும் தியானம் செய்கின்றேன். இறைவனுகும் உன்னை சரணடைகின்றேன். தனியாக நான் சொற்களைக்கொண்டு உன்னை இறைஞ்சுகின்றேன். தேவர்களும் நீண்டகாலம் தவம் கிடக்கும் உன் கருணைத் திரு நோக்கை என்மீது வீச நான் வேண்டுகின்றேன். ஓ சம்போ, உலகிற்கெல்லாம் ஆசிரியனே, சுகமென்பது என்ன என்பதை எனக்கு போதிப்பாயாக.

விடுதலை பெறும் வழியை போதிக்க உலக ஆசிரியன் வேண்டப்படுகின்ருன். அவர் போதனையைப்பெற ஒருவன் முற்றுமாகத் தன்னை ஒப்படைக்கவேண்டும். முற்றுமாக தன்னை ஒப்படைத்தால் தான் இறைவன் அருள் கிடைக்கும் இறைவனருளாலேயே விடுதலை தரும் ஞானம் கிடைக்கப்பெறும்.

பகவத்கீதையில் (2. 7) அர்ச்சுனன் தன்னை கிருஷ்ணனிடம் முற்றுமாக ஒப்படைக்கின்ருன். "நான் உனது சீடன், துணிந்த நல்லதாவதை அருளு. உனக்குச் சரண்புகுந்த எனக்கு போதனை செய்" மேலும் பகவத்கீதையில் (9. 43) "நிலைக்கவும் நகரவுமுள்ள படைப்புகளுள்ள இந்த உலகில் நீயே அப்பன், நீயே வணங்கப்படவேண்டியவன், நீயே பேராசிரியன், முவ்வுலகங்களிலும் உனக்கு ஒப்பாவார் இல்லை சிறப்பின் சிறப்பைப்பெற்ற உன்னிலும் உயர்ந்தோர் யார்?" என்று உள்ளது. (29)

वस्त्रोद्धूतविधौ सहस्रकरता पुष्पार्चने विष्णुता
गन्धे गन्धवहात्मतान्नपचने बर्हिर्मुखाध्यक्षता ।
पात्रे काञ्चनगर्भतास्ति मयि चेद्बालेन्दुचूडामणे
शुश्रूषां करवाणि ते पशुपते स्वामिंस्त्रिलोकीगुरो ॥ ३० ॥

வஸ்த்ரோத்தூதவிதௌ ஸஹஸ்ரகரதா
புஷ்பார்சனே விஷ்ணுதா
கந்தே கந்தவஹாத்மதாந்நபசனே
பர்ஹிர்முகாத்யக்ஷதா ।
பாத்ரே காஞ்சனகர்பதாஸ்தி மயி சேத்
பாலேந்துசூடாமணே
ஶுச்ருஷாம் கரவாணி தே பஶுபதே ஸ்வாமிம்
ஸ்த்ரிலோகீகுரோ ॥

बालेन्दुचूडामणे-பாலசந்திரனை சிரஸில் அணிந்தவரான ஈசுவர, पशुपते-பசுரூபமான அஞானிகளுக்கு அதிபதியே, स्वामिन्-உலகத்திற்கு நாதனான ஈசுவர, त्रिलोकीगुरो-மூவ்வுலகிற்கும் குருவே. वस्त्रोद्धूतविधौ-வஸ்திரோபசார விஷயத்தில், सहस्रकरता-சூரியனாகவும், पुष्पार्चने-புஷ்பங்களால் அர்ச்சிக்கிற விஷயத்தில், विष्णुता-விஷ்ணுவாகவும், गन्धे-கந்தோபசாரத்தில், गन्धवहात्मता-வாயுவாகவும், अन्नपचने-நைவேத்யம் சமைக்கிற விஷயத்தில், बर्हिर्मुखाध्यक्षता-இந்திரனாகவும், पात्रे-பாத்திர உபசாரத்தில், काञ्चनगर्भता-பிரம்மாவாகவுமிருக்கும் தன்மை, मयि अस्ति चेत्-என்னிடம் இருக்குமானால், ते-உமக்கு, शुश्रूषां-சுச்ரூஷையை, करवाणि-செய்வேன்.

*தலையணியாக இளம்பிறையைச்சூடிய ஒருவ! ஆத்மாக்களின் தலைவ! இறைவா! மூவுலகங்களுக்கும் ஆசிரியனே! ஆயிரம் கைகளைக்கொண்டு (கிரணங்களை) உனக்கு உடையணிய நான் சூரியனது சக்தியைப் பெற்றிருந்தாலும், மலர்களைக்கொண்டு பூஜிக்க விஷ்ணுவின் நிலையைப்பெற்றிருந்தாலும், உனக்குச் சந்தனக்காப்பு செய்ய வாயுவின் திறனைப்பெற்றிருந்தாலும், நினது நிவேதனத்தைச்சமைக்க அக்னியின் தலைவனாகும் இந்திரன் நிலையைப்பெற்றிருந்தாலும், நினக்காகும் பாத்திரங்களையமைக்க ஹிரண்யகர்ப்பனின் தன்மையைப்பெற்றிருந்தாலும் உன் பணிவிடை செய்ய நான் உனக்குச் சரணடையக்கூடும். அப்படி*

*சென்ற சுலோகத்தில் சிவன் உலகின் ஆசிரியன் என்று அழைக்கப்பட்டான். (லோக-குரு) இதில் அவர் மூவுலகங்களுக்கும்*

ஆசிரியன் என்று சொல்லப்படுகின்றார் (திரி லோக குரு) சிவனருளைப்பெற ஒருவன் அவரை பூஜிக்கவேண்டும். ஆயின் அல்பனாகும் ஒரு மனிதனால் அதை எப்படிச் செய்தல்கூடும்? இறைவன் எல்லையற்றவன்? மனிதன் வரையறுக்கப்பட்டவன். வஸ்திரம், மலர், சந்தனம், நிவேதனம் முதலியவைகளைக்கொண்டு சிறியவனாகும் மனிதன், எப்படி இறைவனை பூஜிப்பது. அதைச் செய்து முடிக்க மனிதன், சூரியன், விஷ்ணு, வாயு, இந்திரன் இவர்களின் நிலையைப்பெற்றாகவேண்டும். (30

नालं वा परमोपकारकमिदं त्वेकं पशूनां पते
पश्यन्कुक्षिगतांश्चराचरगणान्बाह्यस्थितान्रक्षितुम् ।
सर्वामर्त्यपलायनौषधमतिज्वालाकरं भीकरं
निक्षिप्तं गरलं गले न गिलितं नोद्गीर्णमेव त्वया ॥

நாலம் வா பரமோபகாரகமிதம் த்வேகம் பசூனாம் பதே
பச்யன் குக்ஷிகதாம்ச்சராசர கணான் பாஹ்ய
ஸ்திதான் ரக்ஷிதும்
ஸர்வாமர்த்யபலாயநௌஷதமதிஜ்வாலாகரம் பீகரம்
நிக்ஷிப்தம் கரலம் கலே ந கிலிதம் நோத்கீர்ணமேவ
த்வயா ||

भो पशूनां पते–பாமர ஜனங்களையும் காப்பாற்றக்கூடிய ஈசா, कुक्षिगतान्–வயிற்றுக்குள்ளிருக்கிறதும், बाह्यस्थितान्–வெளியிலிருக்கிறதுமான, चराचरगणान्–ஸ்தாவர ஜங்கம ஸமூகங்களை, रक्षितुं–காப்பாற்றுவதற்கு, पश्यन्–பார்த்து (ஆலோசனை செய்து) अतिज्वालाकरं–அதிகமான தாபத்தை உண்டுபண்ணுகிறதும், भीकरं–பயங்கரமானதுமான, गरलं–காலகூடவிஷம், सर्वामर्त्यपलायनौषधं–ஸகல தேவதைகளின் ஓட்டத்தைப்போக்கக்கூடிய ஔஷதமாயிருக்கும்படி, त्वया–உம்மால், गले–கழுத்தில், निक्षिप्तं–வைக்கப்பட்டது. न गिलितं–விழுங்கப்படவில்லை, नोद्गीर्णमेव–வெளிப்படுத்தப்படவுமில்லை. परमोपकारकं–மிகுந்த உதவி செய்கின்ற, इदमेकं तु–இது ஒன்றே, नालं वा –(உமது மஹிமையை அறியப்

ஆத்மாக்களின் தலைவ! உன் கருணையைப்புகழ, உனது ஒரு உதவியும் போதுமானதே! நிலையானவற்றையும், நகர்வனவற்றையும் படைப்பிலுள்ளவைகளை உன் வயிற்றடக்கியும், வெளியே வைத்தும், தேவர்கள் கண்டு அஞ்சி சிதறியோடிய எரிகின்ற கொடிய விஷத்தை, உள்ளே விழுங்காமலும், வெளியே உமிழாமலும் தொண்டையில் வைத்துக்கொண்டாய்!

இதிலும் அடுத்த சுலோகத்திலும் சிவனே உலகிற்கு பெருநன்மையைவிளைவித்தவர் என்பது சொல்லப்படுகின்றது. அவரை, அழிப்பவராக அதிகம் சொல்லப்படுவதால், அவர் உலகை காப்பவர் என்பது மறக்கப்படுகின்றது.

ஹாலஹால விஷத்தை விழுங்கி உலகை சிவன் எப்படி உய்வித்தார் என்பது புராணங்களில் சொல்லப்படுகின்றது. பாற்கடலைக்கடைந்து அதினின்று சாவைப்போக்கும் அமிருதத்தைப்பெற, தேவர்களும் அசுரர்களும் ஒன்ருகக் கடைந்தார்கள். ஆயின் அவர்கள் கடையவும் முதலில் வெளிப்பட்டது ஹாலஹால விஷம். அவர்கள் சாவிற்குப் பயந்து ஓட்டம் எடுத்தார்கள். அவர்களுக்கு இரங்கி சிவபெருமான் அவ்விஷத்தை எடுத்து தன் வாயில் போட்டுக்கொண்டு அவர்களைக் காப்பாற்றினர். அவர் அதை உள்ளேவிட்டிருந்தால் உள்ளே உள்ளவை அழிந்துவிடுமாகையால், விஷத்தைத் தொண்டையிலேயே அடக்கிக்கொண்டார். அதனல் அவரது வெள்ளைத் தொண்டை கருத்து நீலமாயிற்று, அதனல் நீலகண்டன், காலகண்டன், நீலக்ரீவன், என்று அவருக்குப் பெயருண்டாயிற்று.

சுந்திரமூர்த்தி நாயனரின் இரு திருப்பாசுரங்கள் இவை.

**கடிக்கும் அரவால் மலையால் அமரர் கடலைக் கடைய**
**எழுகாளகூடம்**
**ஒடிக்கும் உலகங்களை என்றதனை உமக்கே அமுதாக உண்டீர்**
**உமிழீர்**
**இடிக்கும் மழைவீழ்த் திட்டருவி இருபாலும் ஓடி இரைக்கும்**
**திரைக்கை**
**அடிக்கும் புனல்சேர் அரிசிற் றென்கரை அழகர் திருப்புத்தூர்**
**அழகனீரே** (7—8—10)

**கோலமால் வரை மத்தென நாட்டிக் கோளரவு சுற்றிக்**
**கடைந்தெழுந்த**
**ஆலநஞ்சுகண் டவர்மிக விரிய வமரர்கட்க்கு அருள் புரிவது கருதி**

நீலமார்கடல் விடந்தனையுண்டு கண்டத்தே வைத்த பித்த நீ செய்த சீலங்கண்டு நின் திருவடியடைந்தேன் செழும் பொழிற்றிருப்புன்
கூருளானே (7—52—5)

ज्वालोग्रः सकलामरातिभयदः क्ष्वेलः कथं वा त्वया
दृष्टः किं च करे धृतः करतले किं पक्वजम्बूफलम् ।
जिह्वायां निहितश्च सिद्धघुटिका वा कण्ठदेशे भृतः
किं ते नीलमणिर्विभूषणमयं शंभो महात्मन्वद ॥ ३२ ॥

ஜ்வாலோக்ர: ஸகலாமராதிபயத: க்ஷ்வேள: கதம் வா த்வயா
த்ருஷ்ட: கிம் ச கரே த்ருத: கரதலே கிம் பக்வஜம்பூபலம் ।
ஜிஹ்வாயாம் நிஹிதச்ச ஸித்தகுடிகா வா
கண்டதேசே ப்ருத:
கிம் தே நீலமணிர்விபூஷணமயம் ஶம்போ
மஹாத்மன் வத ॥

शंभो-க்ஷேமத்தையுண்டுபண்ணுகிறவரே, महात्मन्-அளவற்ற ரூபமுடையவரே, ज्वालोग्रः-ஜ்வாலைகளால் பயங்கரமாயும், सकलामरातिभयदः-ஸகலமான தேவதைகளுக்கும், அதிகமான பயத்தைக்கொடுக்கக்கூடியதுமான, क्ष्वेलः-காலகூடவிஷம், कथं वा-எப்படித்தான், त्वया-உம்மால், दृष्टः-பார்க்கப்பட்டது? किंच-பின்னும், करे-கையில், धृतः-எடுக்கப்பட்டதே! करतले-உள்ளங்கையிலும், निहितः-வைக்கப்பட்டதே! किं पक्वजम्बूफलं-பழுத்த நாகக்கனியா? जिह्वायां निहितश्च-நாக்கில் வைக்கட்பட்டதே! सिद्धघुटिका वा-ஸித்தர்களின் மருந்துகுளிகையா? कण्ठदेशे भृतः-கழுத்தில் தரிக்கப்பட்டதே! अयं-இந்த விஷம், ते-உமக்கு, विभूषणं-அலங்காரமான, नीलमणिः किम्-நீலரத்னமா? वद-சொல்லும்

ஓ சம்போ, தேவர்கள் கண்டஞ்சிய பெருவிடத்தை நீ எப்படிப் பார்த்தாய்? அதை எப்படிக்கையிலெடுத்தாய்? உன் கையில் அது நாவல் பழம் போன்று அமைந்ததா? சித்தர்கள் கையாளும் மருந்தா அது? அது ஓரு நீலக்கல் ஆபரணமென்று தொண்டையில் அடக்கப்பட்டதா? இதையெல்லாம் பெரியோய். எனக்குச் சொல்வாயாக.

உலக அளவைகளைக்கொண்டு நாம் சிவன் எப்படி விஷத்தைப் பருகினர் என்று சொல்வது கூடுவதில்லை. தானே சாகத் துணிந்தோ தவறுதலாகவோவன்றி யாரும் விஷத்தை உட்கொள்ளமாட்டார்கள் ஹாலாஹலம் மிகவும் கொடிய விஷமென்பது சிவனுக்குத் தெரியாதா? தேவர்கள் பயந்தோடுவதை அவர் பார்க்கவில்லையா? அவர் ஒரு மருந்தென்றோ, ஒரு பழமென்றோ, ஒரு அணியென்றோ, அதைக்கொண்டாரா? அவர் செயலை நாம் புரிந்துகொள்வதற்கில்லை. தன் படைப்புகளுக்கு இரங்கிய கருணையின் பெருமைதான் என்னே? (32)

नालं वा सकृदेव देव भवतः सेवा नतिर्वा नुतिः
पूजा वा स्मरणं कथाश्रवणमप्यालोकनं मादृशाम् ।
स्वामिन्नस्थिरदेवतानुसरणायासेन किं लभ्यते
का वा मुक्तिरितः कुतो भवति चेत्किं प्रार्थनीयं तदा ॥

நாலம் வா ஸக்ருதேவ தேவ பவத: ஸேவா நதிர்வா நுதி:
பூஜா வா ஸ்மரணம் கதா ச்ரவணமப்யாலோகநம்
மாத்ருசாம் ।
ஸ்வாமிந்நஸ்த்திர தேவதாநுஸரணாயாஸேந
கிம் லப்யதே
கா வா முக்திரித: குதோ பவதி சேத் கிம்
ப்ரார்த்தனீயம் ததா ॥

भो स्वामिन्–ஸர்வலோகாதிபதியான ஈசுவர, देव–தேவனே, मादृशां–என்னைப்போலிருப்பவர்களுக்கு, भवतः–உம்முடைய, सकृदेव–ஒரே தடவை, सेवा–ஸேவையாவது, नतिर्वा–நமஸ்காரமாவது, नुतिः–துதியாவது. पूजा वा–பூஜையாவது, स्मरणं–ஸ்மரணமாவது, कथाश्रवणमपि–கதையைக் கேட்பதாவது, आलोकनं–தர்சனமாவது, नालं वा–போதாதா? अस्थिरदेवतानुसरणायासेन–நிலையற்ற தேவதைகளையனுஸரிப்பதிலுள்ள கஷ்டத்தினால், किं लभ्यते–என்ன அடையப்படுகிறது? इतः–இதிலிருந்து, का वा मुक्तिः–ஏது முக்தி? कुतो भवति चेत्–வேறு உபாயத்தால் உண்டாகுமானால், तदा–அப்பொழுது, किं प्रार्थनीयं–எது பிரார்த்திக்கக்கூடியது?

ஓ இறைவனே தேவனே என்னைப்போன்றவர்கள் ஒருதரம் உன்னை நமஸ்கரிக்கவோ புகழ்ந்து பாடவோ, பூஜிக்கவோ தியானம் செய்யவோ, உன் கதைகளை கேட்கவோ, உன் தரிசனம் பெறவோ செய்தால் போதாதா? இவ்வழிகளிலன்றி எப்படி விடுதலை கிட்டும்? இது உண்மையாக, நிலையற்ற தேவர்களை முயன்று பின் செல்வதின் பயனென்ன? அவர்களை வழிபடுவதும் வேண்டப்படுவதா?

பக்தன் சிவனருளன்றி பிறவற்றால் விடுதலை பெறுவது கூடுவதில்லை என்ற உறுதியை அடைந்துவிட்டான். ஒரு மனதுடன் அவனை வழிபட ஒன்றைச்செய்தாலும் போதியது. தேவர்கள், உபதேவர்களை நாடியலைவானேன்? அவர்களை நாட முயல்வது பயனற்ற வீண்பாடாகும். (33)

किं ब्रूमस्तव साहसं पशुपते कस्यास्ति शंभो भव-
धैर्यं चेदृशमात्मनः स्थितिरियं चान्यैः कथं लभ्यते ।
भ्रश्यद्देवगणं त्रसन्मुनिगणं नश्यत्प्रपञ्चं लयं
पश्यन्निर्भय एक एव विहरत्यानन्दसान्द्रो भवान् ॥ ३४ ॥

கிம் ப்ரூமஸ்தவ ஸாஹஸம் பஶுபதே கஸ்யாஸ்தி
ஶம்போ பவத்
தைர்யம் சேத்ருஶமாத்மந: ஸ்திதிரியம் சாந்யை:
கதம் லப்யதே ।
ப்ரச்யத் தேவகணம் த்ரஸன் முனிகணம்
நச்யத்ப்ரபஞ்சம் லயம்
பச்யன் நிர்பய ஏக ஏவ் விஹரத்யாநந்த ஸாந்த்ரோ
பவான் ॥

पशुपते-ஜீவர்களின் தலைவனே, शम्भो-சம்புவே, भ्रश्यद्देवगणं-தன் இருப்பிடமிருந்து நழுவக்கூடிய தேவ ஸமூகத்தையுடையதும், त्रसन्मुनिगणं-பயப்படுகிற முனி கணத்துடன் கூடியதும், नश्यत्प्रपञ्चं-பிரபஞ்சம் நசிக்கும்படியான, लयं-பிரளயத்தை, पश्यन्-பார்த்துக்கொண்டிருக்கிற, भवान्-நீர், एक एव-ஒருவராகவே, निर्भयः-பயமில்லாமல், आनन्दसान्द्रः-ஸம்பூர்ணமான ஆநந்தத்துடன், विहरति-விளையாடுகிறீர். तव-உம்முடைய, साहसं-கடினமான

செய்கையை, **किं ब्रूमः**-எப்படி சொல்லுவோம்? **ईदृशं**-இவ்வித மான, **भवद्धैर्यं**-உம்முடைய தைரியம், **कस्यास्ति**-யாருக்கு இருக்கிறது? **आत्मनः**-தன்னுடைய, **इयं स्थितिः**-இந்த நிலைமையானது, **अन्यैः**-மற்றோர்களால், **कथं लभ्यते**-எப்படி அடையப்படும்?

*ஆன்மாக்களின் இறைவ! உன் திருவிளையாடல்களைப்பற்றி நாங்கள் என்ன சொல்வது? சம்பூ, உன்னைப்போன்ற தைரியம் உள்ளவர்கள் யார்? உன் நிலையை பிறர் எப்படி அடைதல் கூடும்? தேவர்கள் தம் நிலையினின்று கிழிந்து பட்டு மறைவதைக் கண்டு தவசிகள் பயப்படுகின்றார்கள். உலகம் அழிந்து படுகின்றது. நீ தன்னந்தனியாக, பயமின்றி, ஆனந்தம் பொங்கி மிளிர்கின்றாய்!* (34)

**योगक्षेमधुरंधरस्य सकलश्रेयःप्रदोद्योगिनो**
**दृष्टादृष्टमतोपदेशकृतिनो बाह्यान्तरव्यापिनः ।**
**सर्वज्ञस्य दयाकरस्य भवतः किं वेदितव्यं मया**
**शंभो त्वं परमान्तरङ्ग इति मे चित्ते स्मराम्यन्वहम् ॥**

*யோக க்ஷேம துரந்தரஸ்ய ஸகல ச்ரேய: ப்ரதோத்யோகிநோ*
*த்ருஷ்டாத்ருஷ்ட மதோபதேச க்ருதிநோ*
*பாஹ்யாந்தர வ்யாபிந: ।*
*ஸர்வக்ஞஸ்ய தயாகரஸ்ய பவத: கிம் வேதிதவ்யம் மயா*
*சம்போ த்வம் பரமாந்தரங்க இதி மே சித்தே*
*ஸ்மராம்யன்வஹம் ॥*

**शंभो**-ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய ஈச்வர, **योगक्षेम-धुरन्धरस्य**-யோகம் (அடையக்கூடாததையடைவது) க்ஷேமம் (அடைந்ததைக்காப்பாற்றுவது) இவைகளை வஹிக்கிறவராயும், **सकलश्रेयःप्रदोद्योगिनः**-ஸகலமான நன்மைகளையும் கொடுப்பதில் முயற்சியுடையவரும், **दृष्टादृष्टमतोपदेशकृतिनः**-இம்மை மறுமை இவைகளையடையக்கூடிய உபாயங்களை உபதேசிப்பதில் வல்லவராயும், **बाह्यान्तरव्यापिनः**-உள்ளும் வெளியிலும் வியாபிக்கிறவராயும், **सर्वज्ञस्य**-எல்லாவற்றையும்

உணர்ந்தவராயும், दयाकरस्य-தயாநிதியாகவுமுள்ள भवतः- உமக்கு, मया-என்னால், किं वेदितव्यं-எது தெரிவிக்கக் கூடியது? त्वं-நீர், परमान्तरङ्ग इति-மிகவும் ஆப்தரென்று, मे चित्ते-என் மனதில், अन्वहं-தினந்தோறும், स्मरामि-நினைக்கிறேன்.

ஓ சம்பூ, எல்லாவுயிர்களின் நலத்திற்கும் பொறுப்பாளியா கின்றாய்! நீ நன்மையையெல்லாம் ஈய நிற்கின்றாய். தெரிந்ததும் தெரியாததுமான பயனைக்கொடுக்கவல்லாய் நீயே! உள்ளும் புறமுமாக எங்கும் பரந்து நிற்கின்றாய். கருணை நிறைந்தவன். எல்லாம் அறிவாய். உனக்கு நான் சொல்வதென்ன உள்ளது? என் உள்ளுள்ளும் இருப்பவன் நீ என்றே உன்னை எப்பொழுதும் மனதில் கொள்ளுகின்றேன்.

சிவனே மங்களத்திற்கெல்லாம் இருப்பிடம், அவனே எல்லா நன்மையையும் கொடுப்பவன். எல்லோர் நலத்திற்கும் காப்பு அவன் நல்லதெது என்னும் அறிவையும் கொடுத்து பரமாகும் உண்மையை விளக்குபவன். அவன் என்றும் இருப்பவன் எல்லாம் அறிபவன், கருணைக்கடல். பக்தன் தனக்கு இதுவேண்டு மென சொல்லவேண்டியதில்லை. அவனுக்கே எல்லாம் தெரியும் சிவன் பெருமை அறிந்து, அவனே அழிவற்று உள்ளிருந்து ஆளுகின்றான் என்பதை அறிந்தால்போதும். (35)

भक्तो भक्तिगुणावृते मुदमृतापूर्णे प्रसन्ने मनः-
कुम्भे साम्ब तवांघ्रिपल्लवयुगं संस्थाप्य संवित्फलम् ।
सत्त्वं मन्त्रमुदीरयन्निजशरीरागारशुद्धिं वह-
न्पुण्याहं प्रकटीकरोमि रुचिरं कल्याणमापादयन् ॥ ३६ ॥

பக்தோ பக்தி குணாவ்ருதே முதம்ருதாபூர்ணே
ப்ரஸன்னே மந:-
கும்பே ஸாம்ப தவாங்க்ரி பல்லவ யுகம் ஸம்ஸ்தாப்ய
ஸம்வித்பலம் ।
ஸத்வம் மந்த்ரமுதீரயன் நிஜஶரீராகார ஶுத்திம் வஹன்
புண்யாஹம் ப்ரகடீகரோமி ருசிரம் கல்யாணமாபாதயன் ॥

हे साम्ब-அம்பிகையுடன் கூடிய ஈச்வர, निजशरीरागारशुद्धिं वहन्-தன் சரீரமாகிற கிருஹத்திற்கு, சுத்தியை செய்யக் கூடிய, भक्तः-பக்தனான நான், रुचिरं कल्याणं-மனதுக்குப் பிரியமான கல்யாணத்தை, आपादयन्-உண்டுபண்ணுகிற வனாய்கொண்டு, भक्तिगुणावृते-பக்தியாகிற நூலால் சுற்றப் பட்டதும், मुदमृतापूर्णे-ஸந்தோஷமாகிற ஜலத்திறல் நிரப்பப் பட்டதும், प्रसन्ने-சுத்தமானதுமான, मनःकुम्भे-மனதாகிய கும்பத்தில், तव अंघ्रिपल्लवयुगं-உம்முடைய திருவடியாகிற இரண்டு துளிர்களையும், संवित्फलं-ஞானமாகிய தேங்காயை யும், संस्थाप्य-வைத்து, सत्त्वं मन्त्रं-ஸத்வகுணப்ரதானமான மந்திரத்தை, उदीरयन्-சொல்லிக்கொண்டு, पुण्याहं-புண்யாஹவாசனத்தை, प्रकटीकरोमि-ப்ரகாசப்படுத்து கிறேன்.

மனமென்னும் ஒளிவீசும் பாத்திரத்தை பக்தியென்னும் சரடால் கட்டி, அதில் ஆனந்தமென்னும் நீரை நிரப்பி, பக்தனுகும் நான் உனது இரு திருவடிகளைச்சார்த்தி (மாவிலையை), அறி வென்னும் தேங்காயை அதன்மீது வைத்து. எனது வீடாகும் இந்த உடலிற்கு 'புண்யாஹம்' என்னும் மந்திரங்களையோதி பரமானந்தத்தை அடைய முயல்கின்றேன்.

ஒரு இடத்தை புனிதமாக்க புண்யாஹம் செய்யப்படுகின்றது. அசுத்தத்தையும், அமங்களத்தையும் போக்க இது செய்யப் படுவது. ஒரு பானைக்கு சரடு சுற்றி அதில் நீரை வைக்க வேண்டும். பாத்திரத்தின் வாயில் மாவிலைகளை வைத்து அதற்கு மேல் தேங்காய் வைக்கப்படவேண்டும். உரிய மந்திரங்களை ஓத புண்யாஹம் முடிகின்றது. பிறகு அந்த பாத்திரத்திலுள்ள நீர் மாவிலைகளால் வேண்டுமிடங்களில் தெளிக்கப்படுகின்றது. இங்கு உள்ளமைப்பிற்கு புண்யாஹம் கூறப்படுகின்றது. இவ்வழி உடல், ஐம்புலன்கள், மனது முதலியவைகளை சுத்தம் செய்து, ஆத்மாவை விடுவிக்கும் வினை மேற்கொள்ளப்படுகின்றது. ஒவ்வொரு செய்கைக்கும் உட்பொருளொன்றுண்டு. வைதிக கர்மாக்களின் உட்பொருளை உபநிஷத்துகள் விளக்குகின்றன பிருஹதாரண்யக உபநிஷத்தின் ஆரம்பத்தில் அச்வமேதத்தின் உட்பொருள் விளக்கப்படுகின்றது. (36)

आम्नायाम्बुधिमादरेण सुमनःसंघाः समुद्यन्मनो-
मन्थानं दृढभक्तिरज्जुसहितं कृत्वा मथित्वा ततः ।
सोमं कल्पतरुं सुपर्वसुरभिं चिन्तामणिं धीमतां
नित्यानन्दसुधां निरन्तररमासौभाग्यमातन्वते ॥ ३७ ॥

ஆம்நாயாம்புதிமாதரேண ஸுமநஸ்ஸங்கா:
ஸமுத்யன்மநோ
மந்தானம் த்ருட பக்தி ரஜ்ஜு ஸஹிதம் க்ருத்வா
மதித்வா தத: I
ஸோமம் கல்பதரும் ஸுபர்வ ஸுரபிம் சிந்தாமணிம் தீமதாம்
நித்யானந்த ஸுதாம் நிரந்தர ரமா
ஸௌபாக்யமாதன்வதே II

सुमनस्संघाः-வித்வான்களாகிற தேவதா ஸமூஹம், समुद्यन्मनः-முயர்ச்சியுடன்கூடிய மனதை, दृढभक्तिरज्जुसहितं-திடபக்தியாகிய கயிறுடன் கூடியதான, मन्थानं-மந்தாக, कृत्वा-செய்து, आम्नायाम्बुधिं-வேதமாகிற ஸமுத்திரத்தை, आदरेण-ஆதரவுடன், मथित्वा-கடைந்து, ततः-அதினின்றும், सोमं-சந்திரனையும், कल्पतरुं-கல்பகவிருக்ஷத்தையும், सुपर्व-सुरभिं-காமதேனுவையும், चिन्तामणिं-சிந்தாமணி ரத்னத்தையும், धीमतां-மனதிற்கு இஷ்டமான, नित्यानन्दसुधां-எப்பொழுதும் ஆநந்தத்தைக்கொடுக்கக்கூடிய அமிருதத்தையும், निरन्तररमासौभाग्यं-எப்பொழுதும் லக்ஷ்மீவிலாஸத்தையும், आतन्वते-அடைகிறார்கள்.

(தேவர்கள் பாற்கடலைக்கடைந்து அமிருதம் பெற்றனர் வித்வான்களோ மனதால் வேதத்தைக் கடைந்து, कल्पतरुं-கல்பவிருக்ஷத்திற்கொப்பானவரும், चिन्तामणिं-சிந்தாமணி ரத்தினம்போல் இருப்பவரும், सुपर्वसुरभिं-காமதேனுவுக்கு ஸமமானவருமான, सोमं-அம்பிகையுடன்கூடிய பரமேச்வரனையும், धीमतां-மனதிற்கு இஷ்டமான, नित्यानन्दसुधां-அழிவற்ற ஆனந்தமென்னும் அமிருதத்தையும், निरन्तर, रमासौभाग्यं-நித்யமான மோக்ஷலக்ஷ்மீ விலாஸத்தையும். आतन्वते-அடைகிறார்கள்,

துணிந்த ஞானத்தை மத்தாகவும், பிணித்த பக்தியைக் கயிராகவும் கொண்டு, வேதாகமங்களை ஆவலுடன் கடைந்து அதனின்று, சந்திரன், கற்பகவிருக்ஷம், காமதேனு, சிந்தாமணி பரமானந்தமாகும். அமிருதம் இவைகளைப்பெறுகின்றார்கள். அது ஞானிகளுக்கே கிடைக்கக்கூடியது.

இங்கும் பாற்கடலை கடையும் நிகழ்ச்சி குறிக்கப்படுகின்றது. அப்பாற்கடலிலிருந்து பல மங்களமானவை வெளிவந்தன. மனிதனுடைய ஆசைகளைக்கொடுக்ககூடிய ஏதாவது ஒரு மங்களப் பொருள் வருகின்றது. துணிந்த அறிவுடனும் பக்தியுடனும் புனித நூல்களை ஆராய்வதால் பலமுடிவுகளின்றி, இறுதியாகும் மோக்ஷமே கிட்டுகின்றது. சோமம், கற்பகவிருக்ஷம், காமதேனு, சிந்தாமணி, அமிருதம், லக்ஷ்மி இவை பலவும் இறுதிப்பயனாகும் மோக்ஷ நிலையையே குறிக்கின்றன. (37)

प्राक्पुण्याचलमार्गदर्शितसुधामूर्तिः प्रसन्नः शिवः
सोमः सद्गणसेवितो मृगधरः पूर्णस्तमोमोचकः ।
चेतःपुष्करलक्षितो भवति चेदानन्दपाथोनिधिः
प्रागल्भ्येन विजृम्भते सुमनसां वृत्तिस्तदा जायते ॥

ப்ராக் புண்யாசல மார்க தர்சித ஸுதா மூர்த்தி:
ப்ரஸன்ன: ஶிவ:
ஸோம: ஸத்கணஸேவிதோ ம்ருகதர: பூர்ணஸ்தமோ
மோசக: ।
சேத: புஷ்கரலக்ஷிதோ பவதி சேதாநந்தபாதோநிதி:
ப்ராகல்ப்யேன விஜ்ரும்பதே ஸுமநஸாம்
வ்ருத்திஸ் ததா ஜாயதே ॥

**प्राक्पुण्याचलमार्गदर्शितसुधामूर्तिः**–முற்பிறவிகளில் செய்யப்பட்டு மலைபோல் குவிநதுள்ள புண்யங்களின் வழியாக காண்பிக்கப்பட்ட அமிருதமயமான ஸ்வரூபமுள்ளவரும், (கிழக்கு திசையிலுள்ள உதயமலையின் வழியாக காண்பிக்கப்பட்ட அமிருத சரீரமுள்ளவனும்,) **प्रसन्नः**–ஸ்வச்சனையும், **शिवः**-ஆனந்தரூபமாயும், (ஆனந்தத்தைச் செய்கிறவனையும்,) **सद्गणसेवितः**–ஸாதுக்களின் கூட்டத்தால் ஸேவிக்கப்பட்டவரும், (நக்ஷத்ர ஸமூகங்களால் ஸேவிக்கப்பட்டவரும்,)

**मृगधरः**-மானை தரித்தவரும், **पूर्णः**-ஸர்வ வியாபகரும், (16 கலைகளால் பூர்ணராயும்,) **तमोमोचकः**- அஞ்ஞானத்தை (இருளை)ப் போக்குகிறவருமான, **सोमः** – அம்பிகையுடன் கூடிய ஈச்வரன் (சந்திரன்) **प्रागल्भ्येन**–பிரகாசத்துடன், **चेतः पुष्करलक्षितः भवति चेत्** – மனமாகிற ஆகாயத்தில் காணப் பட்டால், **आनन्दपाथोनिधिः**–ஆனந்த ஸமுத்திரம், **विजृम्भते**– விருத்தியடைகிறது. **तदा**:–அச்சமயம், **सुमनसां** – ஸாதுக் களுக்கு (தேவதைகளுக்கு,) **वृत्तिः**-நல்ல பிரவிருத்தியானது (ஜீவனமானது,) **जायते**– உண்டாகிறது. இந்த சுலோகத் தில் சந்திரனையும் ஈசுவரனையும் சிலேடையால் துதிக்கிறார்.

*மங்களகரமான சந்திரன் மானைத்தரித்து கிழக்கு மலைகளின் வழியாக நக்ஷத்திரங்கள் தொடர வெண்மையாகக் கிளம்பும் பொழுது உலகின் இருள் அகல சந்திரனின் பிரதிபிம்பம் விழும் பொழுது மகிழ்ச்சியடையும் சமுத்திரம் பொங்கியெழுகின்றது. அச்சமயம் தேவர்கள் வாழ்வது சரியாகின்றது.*

*அமைதியுடன் கையில் மானை ஏந்தி முன்பே தான் பெற்றிருக் கும் மலைபோன்ற சிறப்புடன் சிவன் வரும்பொழுது தேவர்கள் பின் தொடர உலகத்தின் அநாதியாக வரும் அஞ்ஞானம் நீங்கி. பிரம்மானந்தம் தெளிவாக விளங்க நல்லோருடைய மனம் மாற்ற மடைகின்றது.*

*இந்த சுலோகத்தில் இருபொருட் சொற்கள் பல உள்ளன. சொற்கள் சிவனுக்கும் சந்திரனுக்கும் பொருந்துவன. சந்திரன் இருட்டை அகற்றவும் ஆனந்தத்தைக்கொடுக்கவும் செய் கின்றான். சிவனது அருள் ஆத்மாவின் அநாதியான மாயையை அகற்றி பேரானந்தத்தைக் கொடுக்கின்றது. சிவனே உயர்ந்த தெய்வீக சந்திரன். 'ஸோம' என்ற சொல்லிற்கு தன்னருகே உமையைப் பெற்றவன் என்பது பொருள்.* (38)

**धर्मो मे चतुरङ्घ्रिकः सुचरितः पापं विनाशं गतं**
**कामक्रोधमदादयो विगलिताः कालाः सुखाविष्कृतः ।**
**ज्ञानानन्दमहौषधिः सुफलिता कैवल्यनाथे सदा**
**मान्ये मानसपुण्डरीकनगरे राजावतंसे स्थिते ॥ ३९ ॥**

தர்மோ மே சதுரங்க்ரிக: ஸுசரித: பாபம் விநாஶம் கதம்
காம க்ரோத மதாதயோ விகளிதா: காலா:
ஸுகாவிஷ்க்ருத: I
ஞானானந்த மஹௌஷதி: ஸுபலிதா கைவல்ய நாதே ஸதா
மான்யே மாநஸ புண்டரீக நகரே ராஜாவதம்ஸே
ஸ்த்திதே ॥

**मान्ये**–உயர்ந்தவரான **राजावतंसे**-சந்திரனை அணிந்த பரமசிவன் (உயர்ந்த ராஜா), **मे**–என்னுடைய, **मानसपुण्डरीकनगरे**–ஹிருதய கமலமாகிற பட்டணத்தில், **कैवल्यनाथे**–மோக்ஷமளிக்க வல்லவராக, (ஏக சக்ராதிபதியாக,) **सदा**–எப்பொழுதும், **स्थिते**–இருக்கும்பொழுது, **चतुरंघ्रिकः**-நான்கு கால்களுடன்கூடிய, **धर्मः**–தர்மம், **सुचरितः**–நன்று அனுஷ்டிக்கப்பட்டது **पापं**–பாபமானது, **विनाशं गतं**–நசித்துவிட்டது **कामक्रोधमदादयः**–காமம் க்ரோதம் மதம், முதலியவைகள், **विगलिताः**–நழுவிவிட்டன **कालाः**–வருஷம் மாதம் முதலிய காலங்கள், **सुखाविष्कृतः**–மகிழ்ச்சியைக் கொடுக்கின்றன. **ज्ञानानन्दमहौषधिः**–அறிவு, ஆனந்தம் இவைகளாகிற சிறந்த பயிர், **सुफलिता**–நன்கு பலனைத் தந்தது.

*சந்திரனைச் சூடாமணியாகப் பெற்றிருக்கும் நிறைவாய இறைவன், மனத்தாமரை யென்னும் சிறப்பு வாய்ந்த நகரில் மகுடாபிஷேகம் செய்து கொள்ளும்பொழுது நான்கு கால் களுள்ள தர்மம் நிறைவாகின்றது. பாபம் அழிக்கப்படுகின்றது. காமக்ரோத அகந்தை நீக்கப்படுகின்றன. இன்பம் நிறைந்த காலமுண்டாகிறது. அறிவு, ஆனந்தம் என்ற பயிர்கள் பெரு விளைவைக்கொடுக்கின்றன.*

*பல சிந்தனையாளர்கள், சிறந்த அரசியலமைப்பை எவ்வளவோ கற்பனை செய்துள்ளார்கள். ஆதர்ச நிலை எது வென்றால் அமைதி நிலைப்பதுவேயாகும். நியாயம், ஒப்புறவு, திருப்தி, அமைதி இவைகள் அத்தகைய அரசியலமைப்பில் அமையும் பலமின்றி சீலமே அடிப்படையாகும். ராமராஜ்ய மென்ற பெயரே ஆதர்ச அரசியலமைப்பாகும்.*

ஞானிகளும் தவத்தோறும் தேவலோகம், தேவநகரம் என்பவைகளை சித்தரித்துள்ளார்கள். சிவனே அரசர்களுக்கு அரசன். அவர் மனதைத் தலைநகரமாக்கிக்கொண்டு வதிந்தால் உலகம் பல வழிகளிலும் நன்முயமையும், அவர் நாட்டில் தர்மமே ஆளும். அங்கு பாபத்தின் குறியுமிருக்காது. அறிவும் ஆனந்தமும் அனைவருடைய உடமையுமாகும், நிறைவே பயனாக நிற்கும்

धीयन्त्रेण वचोघटेन कविताकुल्योपकुल्याक्रमै-
रानीतैश्च सदाशिवस्य चरिताम्भोराशिदिव्यामृतैः ।
हृत्केदारयुताश्च भक्तिकलमाः साफल्यमातन्वते
दुर्भिक्षान्मम सेवकस्य भगवन्विश्वेश भीतिः कुतः ॥ ४० ॥

தீயந்த்ரேண வசோ கடேன கவிதா குல்யோபகுல்யாக்ரமை
ரானீதைச்ச ஸதாஶிவஸ்ய சரிதாம்போராஶி திவ்யாம்ருதை
ஹ்ருத்கேதார யுதாச்ச பக்தி கலமா: ஸாபல்யமாதன்வதே
துர்பிக்ஷான் மம ஸேவகஸ்ய பகவன் விச்வேஶ பீதி: குத:|

**विश्वेश**–உலகநாத, **भगवन्**-உயர்ந்த ஆறு குணங்களுள்ள ஈச, **धीयन्त्रेण**–புத்தியாகிற ராட்டின யந்திரத்திலும், **वचोघटेन**–வார்த்தையாகிற குடத்தாலும், **कविताकुल्योपकुल्याक्रमैश्च**–கவிதையாகிற பெரிய வாய்க்கால் சிறிய வாய்க்கால் வழியாகவும், **आनीतैः**–கொண்டுவரப்பட்ட, **सदाशिवस्य**–ஈச்வரனுடைய, **चरिताम्भोराशिदिव्यामृतैः**–சரித்திரமாகிற ஸமுத்திரத்தின் உயர்ந்த தீர்த்தங்களால், **हृत्केदारयुताः**–ஹிருதயமாகிற நஞ்சை நிலத்திலுள்ள, **भक्तिकलमाः**–பக்தியாகிற சம்பா பயிர்கள், **साफल्यमातन्वते**–நன்கு விளைவையடைகின்றன. **सेवकस्य मम**–உம்மை ஸேவிக்கிற எனக்கு, **दुर्भिक्षात्**–பஞ்சத்திலிருந்து, **भीतिः कुतः**–பயமேது?

ஓ தேவா, லோகங்களின் தலைவ, வாக்கு (நீரை முகந்துவரும்) பறியாக, கவிதை நீர்பாயும் சிறுகால்களாக, அறிவு என்னும் (நீரிரைக்கும்) கவலையால், சதாசிவன் புராணங்களென்னும் நீரை இதயமென்னும் வயல்களில் பாய்ச்சினால் பக்திப்பயிர் பயனுள்ள விளைவைப் பெறும். உனது பணியாளனை எனக்கு, பிறகு பஞ்சபயம் ஏன்?

இங்கு விவசாயத்தொழில் உதாரணமாக்கப்படுகின்றது. ஆத்மாவிற்கு பயிற்சி கொடுக்க, சிவபுராணங்களே நீர், அறிவே நீரிறைக்கும் கவலை, வாக்கே நீரிறைக்கும் பறி, கவியே சிறு கால்வாய்கள். இதயம் இப்படி நீர்பாய்ச்சப்பட்டால், பக்தி பேரளவில் விளைகின்றது. (40)

पापोत्पातविमोचनाय रुचिरैश्वर्याय मृत्युंजय
स्तोत्रध्याननतिप्रदक्षिणसपर्यालोकनाकर्णने ।
जिह्वाचित्तशिरोङ्घ्रिहस्तनयनश्रोत्रैरहं प्रार्थितो
मामाज्ञापय तन्निरूपय मुहुर्मामेव मा मेऽवचः ॥ ४१ ॥

பாபோத்பாத விமோசனாய ருசிரைச்வர்யாய ம்ருத்யுஞ்ஜய
ஸ்தோத்ர த்யான நதி ப்ரதக்ஷிண
ஸபர்யாலோகநாகர்ணனே ।
ஜிஹ்வா சித்த சிரோங்க்ரி ஹஸ்த நயன ச்ரோத்ரை
ரஹம் ப்ரார்த்திதோ
மாமாக்ஞாபய தந்நிரூபய முஹுர்மாமேவ மா மேऽவச: ॥

**मृत्युञ्जय**-யமனை ஜயித்த ஈச, **पापोत्पातविमोचनाय** பாப மாகிற உத்பாதம் நீங்கவும், **रुचिरैश्वर्याय**-உயர்ந்த ஸம்பத்தின் பொருட்டும், **स्तोत्रध्याननतिप्रदक्षिणसपर्यालोकनाकर्णने**-துதிப்பது தியானம் செய்வது வணங்குவது பிரதக்ஷிணம் செய்வது பூஜை செய்வது, பார்ப்பது கேட்பது இவைகளில் **जिह्वाचित्तशिरोङ्घ्रिहस्तनयनश्रोत्रैः**-நாக்கு புத்தி சிரஸ் பாதங்கள், கைகள், கண்கள், காதுகள் இந்த இந்திரியங்களால் முறையே, **अहं प्रार्थितः**-நான் வேண்டப்பட்டவனாக இருக்கிறேன். **मां आज्ञापय**-எனக்கு உத்தரவு செய்யும், **तत्**-அதைக்குறித்து, **मुहुः**-அடிக்கடி, **मां निरूपय**-எனக்கு வழி காட்டும், **मे**-எனக்கு, **अवचः**-பேசாமலிருத்தல் (மௌனம்), **मैव**-வேண்டவே வேண்டாம்.

எமனை மடக்கும் இறைவா! எனது நாக்கு, மனது, தலை, கால்கள், கைகள், கண்கள், காதுகள் இவை உன் பணியில் ஊக்க என்னை வேண்டுகின்றன. உன்னைப்பாடவும், தியானம்

செய்யவும், வணங்கவும், பிரதக்ஷிணம் செய்யவும், பூஜிக்கவும், பார்க்கவும், கேட்கவும் விரும்புகின்றன. அவ்வாறு செய்வதால் பாபம் துலைந்து, பெரும்பயனைப் பெறலாம். எனக்குக் கட்டளை கொடு! மீண்டும் மீண்டும் (உன்னைப் பணிய) வழியைக்காட்டு! என்னிடம் மௌனம் காட்டாதே!

இறைவன் பணியில் மனதையும், ஐம்புலன்களையும் ஊக்கி விடுவதே பக்தியின் சாரமாகின்றது. இறைவனை எப்படிப் பணிவது? ஏன் அவரைப் பணியவேண்டும்? அதற்கு முறை என்ன? செயல் திறன் எது? என்பவைகளை இறைவனே விளக்கவேண்டும். அவனை வழிபடவும் அவனருள் பெற்றாக வேண்டும். ஆகையால் பக்தன், முறைகளையும், வழிகளையும் தனக்கு விளக்க மௌனமாக இருக்கக்கூடாதென்று இறைவனை வேண்டுகின்றான். தக்ஷிணாமூர்த்தியாக, மௌனமாக சிவ பெருமான் போதிக்கின்றார் சனகன், சநாதனன், சனந்தன், சநத்குமாரன் இவர்களைப்போன்று மௌன போதத்தை அறிந்து கொள்ளத் தனக்குத் திறமையில்லை என்கிறான். ஆகையால் தன்னிடத்து தக்ஷிணாமூர்த்தம் பயன் படாது என்கிறான். வாயைத்திறந்து சொற்களைக்கொண்டு தனக்கு விளக்கவேண்டு கிறான், (41)

गाम्भीर्यं परिखापदं घनधृतिः प्राकार उद्यद्गुण-
स्तोमश्चाप्तबलं घनेन्द्रियचयो द्वाराणि देहे स्थितः ।
विद्या वस्तुसमृद्धिरित्यखिलसामग्रीसमेते सदा
दुर्गातिप्रियदेव मामकमनोदुर्गे निवासं कुरु ॥ ४२ ॥

காம்பீர்யம் பரிகா பதம் கன த்ருதி: ப்ராகார உத்யத்குண
ஸ்தோமச்சாப்தபலம் கனேந்த்ரிய சயோ
த்வாராணி தேஹே ஸ்தித: ।
வித்யா வஸ்து ஸம்ருத்திரித்யகில ஸாமக்ரீ ஸமேதே ஸதா
துர்காதிப்ரியதேவ மாமக மனோதுர்கே நிவாஸம் குரு ॥

दुर्गातिप्रिय—கஷ்டப்பட்டு செல்லக்கூடிய மலை முதலிய வற்றில் மிகுந்த பிரியமுள்ளவனே (துர்கையினிடம் மிகுந்த ப்ரீதியுள்ளவரே), देव-தேவனே, परिखापदं-அகழின் லக்ஷண மான், गाम्भीर्यं-காம்பீர்யம், घनधृतिः—மிகுந்த தைரியமாகிற.

**प्राकार:**-மதிள் சுவர், **उद्यद्गुणस्तोम:**-உண்டாகும் நற்குணங் களின் கூட்டமாகிற, **आप्तबलं**-நம்பிக்கையுள்ள சைன்யம் **देहे स्थित:**-சரீரத்திலிருக்கும், **घनेन्द्रियचय:**-நெருக்கமாக இருக் கும் இந்திரியக் கூட்டமாகிற, **द्वाराणि**-கோட்டை வாயில்கள் **विद्या**-அறிவாகிற **वस्तुसमृद्धि:**-பொருள் நிறைவு, **इति**- இவ்வாறு, **अखिलसामग्रीसमेते**-எல்லாப்பொருள்களுடனும் கூடிய, **मामकमनोदुर्गे**-என்னுடைய தான மனமாகிற கோட்டையில், **सदा**-எப்பொழுதும், **निवासं कुरु**-வாஸம் செய்யும்.

*இறைவ, அணுகமுடியாத கோட்டையை (துர்க்கையை) நீ மிகவும் விரும்புகிறாய் எப்பொழுதும் என் மனது என்னும் கோட்டையில் வசிப்பாயாக. அது கம்பீரமாக அமைகின்றது. சிறப்பாக அமையும் அகழிகள், தைரியம் என்னும் மதிள்கள், அரசர் சேனைகளினும் சிறந்த வீரம், இவை பெற்றுள்ளது. புலன் களென்னும் கோட்டை வாயில்கள் உள்ளன. இக்கோட்டை அறிவென்னும் பொருளால் நிறைந்து முற்றும் ஸாதனங்கள் பெற்றதாக உள்ளது.*

*மனது ஒரு கோட்டையாக சித்திரிக்கப்பட்டு அதில் சிவன் உறையவேண்டுமென்று கோரப்படுகின்றது. இறைவனுக்கு கோட்டைகளெனில் பிரியம். அவர் மனமென்னும் கோட்டை யிலும் தங்கலாம். துர்கா* (**दुर्गा**) *என்ற சொல், உமாதேவிக்கும் ஆகின்றது அதில் நகைச்சுவை. லலிதாஸஹஸ்ரநாமத்திலும் துர்லபா* (**दुर्लभा**); *துர்கமா* (**दुर्गमा**), *துர்க்கா* (**दुर्गा**), *துக்கஹந்த்ரீ* (**दुःखहन्त्री**), *ஸுகப்ரதா* (**सुखप्रदा**) *என்றுள்ளது.* (42)

**मा गच्छ त्वमितस्ततो गिरिश भो मय्येव वासं कुरु**
**स्वामिन्नादिकिरात मामकमनःकान्तारसीमान्तरे ।**
**वर्तन्ते बहुशो मृगा मदजुषो मात्सर्यमोहादय-**
**स्तान्हत्वा मृगयाविनोदरुचितालाभं च संप्राप्स्यसि ॥**

மா கச்ச த்வமிதஸ்ததோ கிரிஶ போ மய்யேவ வாஸம் குரு
ஸ்வாமின்னாதிகிராத மாமக மந: காந்தார ஸீமாந்தரே ।

வர்த்தந்தே பஹுசோ ம்ருகா மதஜுஷோ
மாத்ஸர்ய மோஹாதய
ஸ்தான் ஹத்வா ம்ருகயா விநோத ருசிதா லாபம்
ச ஸம்ப்ராப்ஸ்யஸி ||

**भो आदिकिरात**-ஆதிகாலத்தில் வேடரூபந்தரித்த, **विभो**-ஸர்வ வியாபியான, **स्वामिन्**-லோகநாத, **गिरिश**-கைலாஸ பர்வதத்தில் வஸிக்கிற ஈச, **त्वं**-நீ, **इतस्ततः**-இங்குமங்கும், **मा गच्छ**-போகாதே. **मय्येव**-என்னிடத்திலேயே, **वासं कुरु**-வாஸம் செய்யும், **मामकमनःकान्तारसीमान्तरे**-என் மனமாகிய காட்டின் எல்லைக்குள் **मदजुषः**-கர்வத்தையடைந்த, **मात्सर्य-मोहादयः**-மாத்ஸர்யம் அஞானம் முதலிய, **मृगाः**-மிருகங்கள், **बहुशः वर्तन्ते**-அதிகமாக இருக்கின்றன. **तान्**-அவைகளை, **हत्वा**-கொன்று, **मृगयाविनोदरुचितालाभं च**-வேட்டை விளையாட்டில் உள்ள பிரியத்தின் லாபத்தை, **संप्राप्स्यसि**-அடைவாய்.

ஓ மலைவாசியே! இறைவா! ஆதிவேடனே! நீ அங்குமிங்கும் (வேட்டை தேடி) அலைவதில்லையா? நீ தனியாக என்னிடம் வாழ்வாயாக. பொறாமை, மயக்கம், முதலிய கொடிய மிருகங்கள் என் மனதென்னும் அடர்ந்த காட்டில் திரிகின்றன. அவைகளைக் கொன்று நீ உன் வேட்டையில் மகிழ்வாயாக!

மனது கொடிய விலங்குகள் திரியும் ஒரு அடர்ந்த காடு. இந்த வளமுள்ள காட்டில் வேடனுகும் சிவபெருமான் வேட்டை ஆடட்டும். அதனுல் மனதின் கொடிய பகுதிகள் தொலையும், சிவபெருமானும் தான் வேட்டையாடிய திருப்தியை அடையலாம்.

மகாபாரதத்தில், அர்ச்சுனனின் வில்லாண்மையை சோதிக்கவும், அவனுக்கு பாசுபதம் வழங்கவும், சிவபெருமான் வேடனுருக் கொண்டது சொல்லப்படுகின்றது.

ருத்திரத்தில் "நமஸ்தே அஸ்து தன்வனே பாஹுப்யாம் உத தே நம:" **(नमस्ते अस्तु धन्वने बाहुभ्यामुत ते नमः)** உன் வில்லிற்கு நமஸ்காரம் உனது இரு கரங்களுக்கும் நமஸ்காரம் என்றுள்ளது. வனனம் பதயே நம: **(वनानां पतये नमः)** காடுகளின் பதிக்கு நமஸ்காரம், நமோ ம்ருகயுப்ய: **(नमो मृगयुभ्यः)**

மிருகங்களை வேட்டையாடுபவனுக்கு நமஸ்காரம் நம: காட்யாய ச (**नमः काट्याय च**) கற்களும் முள்ளும் நிறைந்த காட்டில் வசிப்ப வருக்கு நமஸ்காரம் என்று குறிப்புகள் உள்ளன. (43)

**करलग्नमृगः करीन्द्रभङ्गो**
**घनशार्दूलविखण्डनोऽस्तजन्तुः ।**
**गिरिशो विशदाकृतिश्च चेतः-**
**कुहरे पञ्चमुखोऽस्ति मे कुतो भीः ॥ ४४ ॥**

கர லக்ன ம்ருக: கரீந்த்ர பங்கோ
கந ஶார்தூல விகண்டனோ஽ஸ்த ஜந்து: ।
கிரிஶோ விஶதாக்ருதிச்ச சேத: -
குஹரே பஞ்சமுகோ஽ஸ்தி மே குதோ பீ: ॥

**करलग्नमृगः**-கையில் மானையுடையதும், **करीन्द्रभङ्गः**-யானையை ஜயிப்பதும், கஜமுகாஸுரனைக்கொல்லுகிறவரும், **घनशार्दूलविखण्डनः**-வலிமையுள்ள புலியைக்கொல்லக்கூடியதும, பலிஷ்டனை வியாக்ராஸுரனைக்கொல்லுகிறவரும், **अस्तजन्तुः**-பிராணிகளை நாசம் செய்ததும், பிரளயத்தில் உலகத்தையழித்தவரும், **गिरिशः**-மலையிலிருக்கிற, கைலாஸ பர்வதத்திலிருக்கிற, **विशदाकृतिश्च**-சுத்தமான, வெளுப்பான ரூபத்தையுடையவருமான, **पञ्चमुखः**-ஸிம்மம், ஐந்து முகங் களுடன் கூடிய ஈச்வரன், **मे चेतःकुहरे**-என் மனமாகிற குகையில், **अस्ति**-இருக்கிறது, இருக்கிறார். **मे**-எனக்கு, **कुतः भीः**-பயமேது ? (ஈச்வரனுக்கும் ஸிம்மத்திற்கும் சிலேடை)

என் மனக்குகையில் ஐந்துமுகங்களுடன் இறைவன் (சிங்கம்) வதிகின்றார். மலையில் வதிபவன் கையில் ஒரு மானை வைத்துள்ளார். (அதுவும் ஒரு மானை இறையாகப் பிடித்துள்ளது) அவர் யானையைக்கொன்றார். (யானைகளைக்கொல்லவும் வல்லது) கொடிய புலியைக்கொன்றார். (புலிகளையும் வெல்லவல்லது. தன்மீது இறந்த விலங்குகளை பெற்றவர் (அருகே இறந்த விலங்கு களை உடையது) வெண்மை நிறம் பெற்றவர் (கம்பீரத் தோற்றம் பெற்றது.) இனி எனக்கு பயமேது !

இந்த சுலோகம் சிலேடை நிறைந்துள்ளது. சொற்கள் சிவனிற்கும் சிங்கத்திற்கும் பொருந்துபவை. சிவனிற்கு ஐந்து முகங்கள், பஞ்சமுகன் என்று அழைக்கப்படுகின்றான். அதற்கு சிங்கமென்பதும் பொருள்.

பக்தனின் மனது ஒரு குகையாகச் சொல்லப்படுகின்றது சிவனென்னும் சிங்கம் குகையில் வசிக்க, பக்தன் எதைப்பற்றியும் பயப்படவேண்டியதில்லை. (44)

छन्दःशाखिशिखान्वितैर्द्विजवरैः संसेविते शाश्वते
सौख्यापादिनि खेदभेदिनि सुधासारैः फलैर्दीपिते ।
चेतःपक्षिशिखामणे त्यज वृथासंचारमन्यैरलं
नित्यं शंकरपादपद्मयुगलीनीडे विहारं कुरु ॥ ४५ ॥

சந்த: ஶாகி ஶிகாந்விதைர் த்விஜவரை:
ஸம்ஸேவிதே ஶாச்வதே
ஸௌக்யாபாதினி கேத பேதினி ஸுதாஸாரை:
பலைர் தீபிதே ।
சேத: பக்ஷி ஶிகாமணே த்யஜ வ்ருதா ஸஞ்சார மந்யைரலம்
நித்யம் ஶங்கர பாதபத்ம யுகளீ நீடே விஹாரம் குரு ॥

**चेतःपक्षिशिखामणे**-மனமாகிய சிறந்த பறவையே, **छन्दश्शाखिशिखान्वितैः**-வேதங்களாகிற மரங்களின் கிளைகளாகிற உபநிஷத்துக்களுடன்கூடிய, **द्विजवरैः**-உயர்ந்த பக்ஷிகளால் உயர்ந்த பிராம்மணர்களால், **संसेविते**-கூடிக்கொண்டு ஸேவிக்கப்பட்டதும், **शाश्वते**-நாசமற்றதும், **सौख्यापादिनि**-ஸௌக்கியத்தையுண்டுபண்ணக்கூடியதாயும், **सुधासारैः**-அமிருதம்போலுள்ள ரஸத்தையுடைய, **फलैः**-பழங்களால், ஞானம் வைராக்கியம் முதலிய பலன்களால் **खेदभेदिनि**-பசியைப்போக்குவதும், ஸம்ஸார துக்கத்தைப்போக்குவதும் **दीपिते** - பிரகாசிக்கிறதுமான, **शङ्करपादपद्मयुगलीनीडे**-ஈசுவரனுடைய திருவடித்தாமரையாகிற கூட்டில், **नित्यं**-எப்பொழுதும், **विहारं कुरु**-விளையாடிக்கொண்டிரு, **अन्यैरलं**-இதர தேவதைகளை நாடுவதில் பயனில்லை. **वृथासंचारं त्यज**-வீணாக அலைவதை விட்டுவிடு.

மனமென்னும் பறவையே, வேதாந்தத்தை மிகவும் கற்றவர் நாடும் சங்கரனது தாமரை அடிகளில் நீ என்றும் அமைவாயாக. (மரக்கிளைகளில் உட்கார்ந்திருக்கும் பறவைகள்) அது என்றும் உள்ளது. (நிலையானது) அதுவே சுகத்தைக்கொடுப்பது (ஆறுதல்) துன்பத்தைக்களைவது (ஓய்வை தருவது) அது இனிமையென்னும் பழங்களுடன் பிரகாசிப்பது (தேன் நிறைந்த பழங்கள்) வீணை அலைவதை விட்டொழி. வேண்டியது அலைந்து திரிந்து விட்டாய்!

மனதை ஒரு பறவையாக வைத்து, அதை இறைவனடிகள் என்னும் கூட்டில் அமையச்சொல்லுகின்றார். அது வீணை அங்குமிங்கும் அலைந்து களைப்படைவானேன்? அதனுடைய பாதுகாப்பு கூட்டிலேயே அமைகின்றது. அங்கு அமைதியாகவும் ஆனந்தத்துடனும் இருப்பது கூடும். (45)

आकीर्णे नखराजिकान्तिविभवैरुद्यत्सुधावैभवै-
राधौतेऽपि च पद्मरागललिते हंसव्रजैराश्रिते ।
नित्यं भक्तिवधूगणैश्च रहसि स्वेच्छाविहारं कुरु
स्थित्वा मानसराजहंस गिरिजानाथाङ्घ्रिसौधान्तरे ॥

ஆகீர்ணே நகராஜி காந்தி விபவைருத்யத்ஸுதா வைபவை
ராதௌதேZபி ச பத்மராக லலிதே ஹம்ஸ வ்ரஜைராச்ரிதே
நித்யம் பக்தி வதூகணைச்ச ரஹஸி ஸ்வேச்சா விஹாரம் குரு
ஸ்தித்வா மாநஸ ராஜஹம்ஸ கிரிஜா நாதாங்கரி
ஸௌதாந்தரே ll

**मानसराजहंस**–மனமாகிய சிறந்த ஹம்ஸ பக்ஷியே, **नखराजिकान्तिविभवैः**–நகவரிசைகளின் ஒளிகளின் பெருமைகளால், **आकीर्णे**–வியாபிக்கப்பட்டிருப்பதும், **उद्यत्सुधावैभवैः**–விருத்தியடைகிற சிரஸிலிருக்கும் சந்திரனின் அமிருதமய கிரணங்களால், சுண்ணாம்புகளால், **आधौते**–வெண்மை (சுத்தம்) ஆக்கப்பட்டதும், **अपि च**–மேலும், **पद्मरागललिते**–பத்மராகம்போல் அழகுள்ளதும், பத்மராகக் கற்களால் இழைக்கப்பட்டதும், **हंसव्रजैः**–ஹம்ஸபக்ஷிகளால் ஹம்ஸ மந்திர த்யானம் செய்யும் மஹரிஷிகளால், **आश्रिते**–

ஆச்ரயிக்கப்பட்டதுமான, **गिरिजानाथांघ्रिसौधान्तरे**-மலைமக(
நாதருடைய திருவடியாகிய உப்பரிகையின் மத்தியி(
**स्थित्वा** – இருந்துகொண்டு, **भक्तिवधूगणैः**–பக்தியாகிய ஸ்தி
களுடன், **रहसि**–ஏகாந்தத்தில், **नित्यं**–எப்பொழுதுப்
**स्वेच्छाविहारं कुरु**-தன்னிஷ்டப்போல் விளையாடு.

ராஜஹம்ஸமாகிய மனமே, கால் நகங்களால் வெளிச்ச
பெற்றும் சந்திர கிரணங்களால் சுண்ணும்படிக்கப்பட்டதும், ரத்ன
மணிகளால் அலங்கரிக்கப்பட்டதும், ஹம்ஸங்களால் நிறையப்
பட்டதுமான, மலைமகள் கணவன் சிவபெருமானின் திருவடிகள்
என்னும் மாளிகையில் தங்குவாயாக. அங்கு தனித்து பிறபக்தர்
களுடன் (பெண்களுடன்) நீ வேண்டியபடி இன்பத்தில் திளைத்து
நிற்கலாம்.

பறவையின் உருவகம் இங்கும் நீட்டப்படுகின்றது. இதில்
மனது ராஜஹம்ஸமாகின்றது. இறைவனடிகள் மாளிகையா
கின்றது. இறைவனடிகளில் மனது அமைந்து, பேரின்பத்தை
அடையட்டும். அவனடிகளிலேயே ரிஷிகளும் தவசிகளும் வத்
கின்றூர்கள் ஹம்ஸம் என்ற சொல், ஹம்ஸத்தையும், தவசி, ரிஷி
இவர்களையும் குறிக்கின்றது. (46

**शंभुध्यानवसन्तसङ्गिनि हृदारामेऽघजीर्णच्छदाः**
**स्रस्ता भक्तिलताच्छटा विलसिताः पुण्यप्रवालश्रिताः ।**
**दीप्यन्ते गुणकोरका जपवचःपुष्पाश्च सद्वासना**
**ज्ञानानन्दसुधामरन्दलहरी संवित्फलाभ्युन्नतिः ॥ ४७ ॥**

ஶம்பு த்யான வஸந்த ஸங்கினி ஹ்ருதாராமேऽக
ஜீர்ணச்சதா
ஸ்ரஸ்தா பக்தி லதாச்சடா விலஸிதா: புண்ய
ப்ரவாள ச்ரிதா:
தீப்யந்தே குணகோரகா ஜப வச: புஷ்பாச்ச ஸத்வாஸநா
ஞானாநந்தஸுதா மரந்தலஹரீ ஸம்வித்பலாப்யுந்நதி: ]

**शम्भुध्यानवसन्तसंगिनि**-ஈச்வர த்யானமாகிற வஸந்
காலத்தோடுகூடிய, **हृदारामे**-ஹிருதயமாகிய உத்யானத்தி(
**अघजीर्णच्छदाः**-பாபமாகிற இலைச்சருகுகள், **स्रस्ताः**-உதிர்ந்தன

**विलसिताः**-பிரகாசமுள்ள, **पुण्यप्रवालश्रिताः**-புண்யமாகிற இளந்தளிர்களுடன் கூடியதும், **गुणकोरकाः**குணங்களாகிற மொட்டுகளுடையதும், **सद्वासनाः**-நல்ல வாஸனையை உடையதும், **जपवचःपुष्पाश्च**-மந்திரோச்சாரணமாகிற புஷ்பங்களுடன் கூடியதுமான, **भक्तिलताच्छटाश्च**-பக்தியாகிய அனேகம் கொடிகளும், **ज्ञानानन्दसुधामरन्दलहरी**-ஞானம் ஆநந்தம் இவைகளாகிற அமிருதம் புஷ்பத்தேன் இவைகளின் பெருக்கும், **संवित्फलाभ्युन्नतिः**-பிரம்மஞானமாகிய பழத்தின் உயர்வும், **दीप्यन्ते**-பிரகாசிக்கின்றன.

*இதயமென்னும் தோட்டத்தில், தியானமென்னும் வசந்த காலத்தில், பாபமென்னும் பழைய இலைகளை உதிர்த்து, தகுதியென்னும் துளிர்களையும், சீலமென்னும் மொட்டுகளையும், திவ்ய நாமங்கள் என்னும் அலர்ந்த மலர்களையும், நல்ல வாசனைகள் என்னும் இனிய கந்தங்களையும், ஆனந்தம், ஞானம் என்னும் தேனையும், பிரம்மானந்தமென்னும் பழத்தையும் கொண்ட கொடிகள் அழகாகவும் அளவற்றும் உள்ளன.*

*இங்கு பக்தி நிறைந்த இதயத்தின் கவிதைச்சித்திரம் அமைகின்றது. இதயமென்னும் பூங்காவில் பக்தியென்னும் கொடி செடிகள் வளர்கின்றன. பருவமும் பொருத்தமானதாகின்றது, அதுவும் தியானமென்னும் வசந்தகாலம். அழகான மலர்கள் இனிய பழங்கள் இவைகளின் பெருத்த விளைவு உறுதியாக உள்ளது நற்சொற்கள், நற்பணிகள், நல்ல சிந்தனைகளே அவைகள்.* (47)

**नित्यानन्दरसालयं सुरमुनिस्वान्ताम्बुजाताश्रयं**
**स्वच्छं सद्द्विजसेवितं कलुषहृत्सद्वासनाविष्कृतम् ।**
**शंभुध्यानसरोवरं व्रज मनोहंसावतंस स्थिरं**
**किं क्षुद्राश्रयपल्वलभ्रमणसंजातश्रमं प्राप्स्यसि ॥ ४८ ॥**

நித்யானந்த ரஸாலயம் ஸுரமுனி ஸ்வாந்தாம்பு ஜாதாச்ரயம்
ஸ்வச்சம் ஸத்த்விஜ ஸேவிதம் கலுஷஹ்ருத்
ஸத்வாஸநாவிஷ்க்ருதம் |

ஶம்பு த்யான ஸரோவரம் வ்ரஜ மனோஹம்ஸாவதம்ஸ
ஸ்த்திரம்
கிம் க்ஷுத்ராச்ரய பல்வல ப்ரமண ஸஞ்ஜாத
ச்ரமம் ப்ராப்ஸ்யஸி ||

**मनोहंसावतंस**-மனமாகிய உயர்ந்த ஹம்ஸமே, **नित्यानन्द रसालयं**-சாச்வதமான ஆனந்தமாகிற தீர்த்தத்திற்கு இருப்பிடமாயும், **सुरमुनिस्वान्ताम्बुजाताश्रयं**-தேவர்கள் முனிகள் இவர்களின் மனமாகிற தாமரை மலருக்கு ஆச்ரயமாயும், **स्वच्छं**-வேறு சிந்தனைகளில்லாததும் (சுத்தமாயும்), **सद्द्विजसेवितं**-ஸத்பிராம்மணர்களால் (உயர்ந்த ஹம்ஸங்களால்) ஸேவிக்கப்பட்டதும், **कलुषहृत्**-பாபத்தை (அழுக்கைப்)போக்குவதும், **सद्वासनाविष्कृतं**-நல்ல கர்மாக்களின் வாஸனையால் (நறுமணத்தால்) பிரகாசிக்கப்பட்டதும், **स्थिरं**-நாசமற்றதுமான (வற்றாததுமான), **शंभुध्यानसरोवरं**-ஈச்வரன் தியானமான சிறந்த குளத்தை, **व्रज**-அடைவாய். **किं**-ஏன், **क्षुद्राश्रय पल्वलभ्रमणसंजातश्रमं**-அற்பதேவதைகளின் ஆச்ரயமாகிற சிறு குட்டையில் சுற்றுகிற சிரமத்தை, **प्राप्स्यसि**-அடைகிறாய்

ஹம்ஸங்களில் சிறந்ததான மனமே! என்றைக்கும் ஆனந்தமானதும், தேவர்கள், ரிஷிகள் இவர்களின் இதயகமலங்கள் வளர்வதும், அறிவாளிகளாலும், நல்லவர்களாலும், நாடப்படுவதும், (ஹம்ஸங்கள்) நல்ல கந்தங்களை வீசுவதும், பாபமென்னும் அழுக்கை நீக்கக்கூடியதுமான சிவத்தியானம் என்னும் குளத்திற்குச் செல். இழிந்தோருக்குச் சேவை செய்யும் கலங்கிய குட்டைகளில் அலைந்து ஏன் வீணாக நீ களைத்துப்போகிறாய்?

இங்கும் மனது ராஜஹம்ஸம் என்று அழைக்கப்படுகின்றது அதற்குத் தகுந்த இடம் சிவத்தியானம் என்னும் குளமே. அது சிறுமனதும், வன்னெஞ்சும் படைத்த இழியோர்களை நாடுதலென்னும் அழுக்குக் குட்டைக்குச் சென்று தன்னை தாழ்த்திக் கொள்வது சரியல்ல.

அல்பர்களாயும் சிறியவர்களாயுமுள்ளவர்களின் ஆதரவை நாடித் திரிதல் மீண்டு இழிக்கப்படுகின்றது. (48

आनन्दामृतपूरिता हरपदाम्भोजालवालोद्यता
स्थैर्योपघ्नमुपेत्य भक्तिलतिका शाखोपशाखान्विता ।
उच्चैर्मानसकायमानपटलीमाक्रम्य निष्कल्मषा
नित्याभीष्टफलप्रदा भवतु मे सत्कर्मसंवर्धिता ॥ ४९ ॥

ஆனந்தாம்ருதபூரிதா ஹர பதாம்போஜாலவாலோத்யதா
ஸ்த்தைர்யோபக்னமுபேத்ய பக்தி லதிகா
ஶாகோபஶாகாந்விதா ।
உச்சைர் மாநஸ காய மாந படலீமாக்ரம்ய நிஷ்கல்மஷா
நித்யாபீஷ்ட பலப்ரதா பவது மே ஸத்கர்ம
ஸம்வர்த்திதா ॥

आनन्दामृतपूरिता–ஆநந்தமாகிற அமிருதத்தால் நிரப்பப் பட்டதும, हरपदाम्भोजालवालोद्यता–ஈசுவரனின் திருவடிக் கமலமாகிற பாத்தியிலிருந்து கிளம்பியதாயும், स्थैर्योपघ्नमुपेत्य–ஸ்திரத்தன்மையான கொழுக்கொம்பையடைந்து, शाखोपशाखान्विता–பெருங்கிளை சிறுகிளைகளுடன் கூடியதும், उच्चैर्मानसकायमानपटलीं–உயர்ந்த மனமாகிற பந்தலை, आक्रम्य–அடைந்து, निष्कल्मषा–தோஷமற்றதும், सत्कर्मसंवर्धिता–ஸத்கர்மாக்களால் (உரமிட்டு) விருத்தியடைந்திருக்கிறதுமான भक्तिलतिका-பக்தியாகிய கொடியானது, मे–எனக்கு, नित्याभीष्टफलप्रदा–சாச்வதமான இஷ்டபலத்தை அளிக்கக் கூடியதாக, भवतु–ஆகட்டும்.

ஆனந்தமென்னும் நீரால் வளர்க்கப்பட்டதும், சிவனடித் தாமரைகளினின்று முளைத்ததும், வேர்களும் சல்லிவேர்களும் விட்டு திடமென்னும் நடுமரத்தை சுற்றிக்கொண்டுள்ளதும், பழுதற்ற பரந்த மனமென்னும் பந்தலில் படர்ந்ததுமான இந்த பக்தியென்னும் கொடி நான் எப்பொழுதும் நாடுகின்ற பழத்தை எனக்குக் கொடுக்கட்டும்

47வது சுலோகத்தில் பக்தி கொடியுடன் உவமிக்கப்பட்டது. இங்கு அந்த பக்திக்கொடியை எப்படி வளர்த்து விளைவைப் பெறுவதென்பது சொல்லப்படுகின்றது. அது இறைவனடியி லிருந்து முளைக்கட்டும். திட சித்தம் என்னும் கோலைப்பற்றி

நிற்கட்டும். மனம் முழுதும் பரவி அதை மூடிக்கொள்ளட்டும். இவ்விதம் தூய பக்தி நற்செய்கைகளால், மோக்ஷமென்னும் விடுதலைக்கு வழிவிடும் ஞானமென்னும் பழக்கைத்கொடுக்கட்டும்.

**संध्यारम्भविजृम्भितं श्रुतिशिरःस्थानान्तराधिष्ठितं**
**सप्रेमभ्रमराभिराममसकृत्सद्वासनाशोभितम् ।**
**भोगीन्द्राभरणं समस्तसुमनःपूज्यं गुणाविष्कृतं**
**सेवे श्रीगिरिमल्लिकार्जुनमहालिङ्गं शिवालिङ्गितम् ॥ ५० ॥**

ஸந்த்யாரம்ப விஜ்ரும்பிதம் ச்ருதி ஶிரஸ்ஸ்தானந்த
ராதிஷ்டிதம்
ஸப்ரேம ப்ரமராபிராமமஸக்ருத் ஸத்வாஸநாஶோபிதம் ।
போகீந்த்ராபரணம் ஸமஸ்த ஸுமந: பூஜ்யம்
குணாவிஷ்க்ருதம்
ஸேவே ஸ்ரீகிரி மல்லிகார்ஜுந மஹாலிங்கம்
ஶிவாலிங்கிதம் ।

**संध्यारम्भविजृम्भितं**-ஸந்தியாகால ஆரம்பத்தில் நர்த் தனத்தினால் பிரகாசிக்கிறவரும், (ஸந்தியா காலத்தில் மலருகிறதும்), **श्रुतिशिरस्स्थानान्तराधिष्ठितं**-உபநிஷத்துக்களால் அறியக்கூடியவரும், (காது சிரஸு இந்த இடங்களிலிருப் பதும்), **सप्रेमभ्रमराभिरामं**-பிரியத்துடன்கூடிய ப்ரமராம்பிகைக்கு இசைந்தவரும், (பிரியத்துடன்கூடிய வண்டுகளுக்கு இசைந்ததும்), **असकृत्**-அடிக்கடி, **सद्वासनाशोभितं**-நல்ல எண்ணத்தால் (நறுமணத்தால்) சோபிக்கப்பட்டவரும் **भोगीन्द्राभरणं**-ஸர்ப்பங்களை ஆபரணங்களாக உடையவரும் (இன்பமுள்ளவர்களுக்கு ஆபரணமாயும்), **समस्तसुमनःपूज्यं** எல்லா தேவதைகளாலும் பூஜிக்கத்தக்கவரும், (எல்லா புஷ்பங்களிலும் உயர்ந்ததாயும்), **गुणाविष्कृतं**-நல்ல குணங் களால் பிரகாசிப்பவரும், (நார்களால் பிரகாசிப்பதுமான) **शिवालिङ्गितं** - அம்பிகையுடன் கூடியவருமான, **श्रीगिरि मल्लिकार्जुनमहालिङ्गं** - மலையிலிருக்கிற மல்லிகையுடன்கூடிய மருதமரத்துக்கொப்பான ஸ்ரீசைலத்திலிருக்கும் மல்லிகா

ஸ்ரீ சைலத்துள்ள மல்லிகார்ஜுனர் என்னும் பெருலிங்கத்தை நான் வணங்குகின்றேன். (அழகான மலையில் மல்லிகைக்கொடிகளால் சுற்றப்பட்ட அர்ஜுனமரம்) அவர் பார்வதி அம்மையாரால் அணைக்கப்படுகின்றார். (மங்களகரமானது) மாலையில் விசித்திரமாக நர்த்தனம் செய்கின்றார். (மாலை நேரத்தில் அதிகமாக மலர்கின்ற) வேதாந்தத்தால் நிலைக்கப்பட்டவர் (அவைகளின் மலர்கள் காதுகளிலும், தலையிலும் அணியப்படுகின்றன.) பிரமராம்பிகை தேவியார் அன்பு செய்ய அருகிருக்கும் அவர் (தம்மைச்சுற்றி ஆவலுடன் தேனீக்கள் ஊதிநிற்க) தவசிகளின் தியானத்தில் பிரகாசிக்கின்றவர் (எப்பொழுதும் இனிய மணத்தைக்கமழும்) பாம்புகளை அணிகளாக அணிபவர். (போகத்தை நாடுபவர்களுக்கு உதவும்) எல்லா தேவர்களாலும் வணங்கப்படுவர் (பூமரங்களில் சிறந்ததான) சீலத்தையே புறத்திடுபவர் (தன் சிறந்த தன்மையால் நன்றாக அறியப்படுவது.)

இதிலும் அடுத்த சுலோகத்திலும் ஸ்ரீசைல சிவலிங்கம் புகழப்படுகின்றது. அது ஆந்திரதேசத்தில் அமையும் சிறந்த சிவ க்ஷேத்திரம். அங்கு லிங்கத்தின் பெயர் மல்லிகார்ஜுனன். அம்மையாரின் பெயர் பிரமராம்பிகையார். அர்ஜுனம் ஒரு மரத்திற்கும் பெயர். இங்கு சொற்கள் இரட்டுற மொழிதல் என்ற அலங்காரத்தில் அமைகின்றன. (50)

भृङ्गीच्छानटनोत्कटः करिमदग्राही स्फुरन्माधवा-
ह्लादो नादयुतो महासितवपुः पञ्चेषुणा चादृतः ।
सत्पक्षः सुमनोवनेषु स पुनः साक्षान्मदीये मनो-
राजीवे भ्रमराधिपो विहरतां श्रीशैलवासी विभुः ॥ ५१ ॥

ப்ருங்கீச்சா நடனோத்கட: கரிமத க்ராஹீ ஸ்புரன்மாதவா
ஹ்லாதோ நாத யுதோ மஹாஸிதவபு:
பஞ்சேஷுணா சாத்ருத: ।
ஸத்பக்ஷ: ஸுமனோவனேஷு ஸ புந: ஸாக்ஷான் மதீயே மனோ
ராஜீவே ப்ரமராதிபோ விஹரதாம் ஸ்ரீசைலவாஸீ விபு: ॥

**विभुः**—நாநாவிதமான தோற்றமுடையவரும், **भृङ्गीच्छानटनोत्कटः**—பிருங்கி மகரிஷியின் இச்சைப்படி நடனம் செய்வதில் (பெண்வண்டின் இச்சையை அனுஸரிப்பதில்)

ஆசையுள்ளவரும், **करिमदग्राही** கஜாஸுரன் கர்வத்தை அடக்குகிறவரும், (யானையின் மதஜலத்தை பானம் செய்கிறதும்), **स्फुरन्माधवाह्लादः**–பிரகாசிக்கிற விஷ்ணுவினிடம் பிரீதியுடையவரும் (பிரகாசமான வஸந்தகாலத்தில் பிரியமுடையதும்), **नादयुतः**–ப்ரணவநாதத்துடன் கூடியவரும் (ரீங்காரத்துடன் கூடியதும்), **महासितवपुः**–சுத்த வெண்மையான சரீரத்துடன் கூடியவரும் (மிகவும் கருமையான உருவத்துடன் கூடியதும்), **पञ्चेषुणा**–மன்மதனால், **आदृतः** ஆதரவு செய்யப்பட்டவரும் (ஆதரவு செய்யப்பட்டது மன்மதனின் மலராகிய வில்லுக்கு வண்டுகள் நாண்கயி **सुमनोवनेषु**–தேவதைகளைக் காப்பாற்றுவதில் (புஷ்போத்யானங்களில்), **सत्पक्षः**–விசேஷ விருப்பமுடையவரும் (விசே விருப்பமுடையதும் நல்ல இரக்கைகளுள்ளதும்) **श्रीशै वासी च**–ஸ்ரீசைலத்திலிருக்கிறவருமான (மலையிலிருக்கிற மான), **सः**–அந்த, **भ्रमराधिपः**–பிரமராம்பிகையின் பர்த் வான மல்லிகார்ஜுனேச்வரர், (உயர்ந்த வண்டு), **साक्षात** பிரத்யக்ஷமாக, **पुनः**–மறுபடியும், **मदीये मनोराजीवे**–என் ம மாகிற தாமரை புஷ்பத்தில், **विहरताम्**–விளையாடட்டு

ஸ்ரீசைலத்தில் வதியும் எங்கும் பரந்துள்ள பிரமராம்பி யின் தலைவ, (மலையில் வசிதது எங்கும் சுற்றியலையும் தே பிருங்கி மகரிஷியின் விருப்பப்படி நர்த்தனம் செய்கின்றவ (ராணி ஈயின் வழிசெல்லும் தேனீ) யானை (அசுரன்) அழித்தவரே (யானையின் மதத்தைப் பருகுகின்ற) பிரகா பொருந்திய மகாவிஷ்ணுவுடன் இனிதமைபவரே (வசந்தகால மகிழும்) ஓமென்னும் நாதத்துடன் அமைந்தவரே (ரீங்காரத் உண்டாக்கும் தேனீயே) பிரகாசமுள்ள மேனியைபெற்றவ (நீலவர்ண உடம்பைப பெற்ற தேனீ) மன்மதனுக்கு சு கொடுப்பவனே (காமனுக்கு துணைசெய்வது) நல்ல காப்பாற்ற முனைந்து நிற்பவர் (பூங்காக்களில் காணப்படுப அழகிய சிறகுகள் பெற்றவை) அணித்தே அமைபவனே (கண் நிற்பது) அவர் என் மனதென்னும், தாமரையில் திகழ்வார இதிலும் இருபொருட் சொற்களே உள்ளன. ஸ்ரீசைலநாதருக் தலையாய தேனீக்கும் சொற்கள் பொருந்துகின்றன,

பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்கள் மிகவும் புனிதமானவை. (1) ஸௌராஷ்டிரத்திலுள்ள சோமநாத் (2) ஸ்ரீ சைலம் மல்லிகார்ஜுனம் (3) உஜ்ஜெயினியிலுள்ள மஹாகாலம் (4) ஓங்காரத்திலுள்ள பரமேசுவரர் (5) இமயத்திலுள்ள கேதாரம் (6) தாகினியிலுள்ள பீமசங்கரர் (7) வாரணசியிலுள்ள விச்வேச்வரர் (8) கோதாவரியின் ஆரம்பத்திலுள்ள திரியம்பகம் (9) சிதா பூமியிலுள்ள வைத்தியநாதர் (10) தாருகவனத்திலுள்ள நாகேசர் (11) ஸேதுபந்தனத்திலுள்ள ராமேசர் (12) சிவாலயத்திலுள்ள குஸுமேசர் இம்மூர்த்திகளின் நாமங்களை பக்தர்கள் சொல்லுவதாலேயே மங்களமும், புண்ணியமும் அவர்களுக்கு உண்டாகின்றது. (51)

कारुण्यामृतवर्षिणं घनविपद्ग्रीष्मच्छिदाकर्मठं
विद्यासस्यफलोदयाय सुमनःसंसेव्यमिच्छाकृतिम् ।
नृत्यद्भक्तमयूरमद्रिनिलयं चञ्चज्जटामण्डलं
शंभो वाञ्छति नीलकंधर सदा त्वां मे मनश्चातकः ॥

காருண்யாம்ருத வர்ஷிணம் கனவிபத் க்ரீஷ்மச்சிதா கர்மடம்
வித்யா ஸஸ்ய பலோதயாய ஸுமந:
ஸம்ஸேவ்யமிச்சாக்ருதிம் ।
ந்ருத்யத் பக்த மயூரமத்ரிநிலயம் சஞ்சஜ்ஜடா மண்டலம்
ஶம்போ வாஞ்ச்சதி நீலகந்தர ஸதா த்வாம் மே
மநச்சாதக: ॥

नीलकन्धर–கருமையான கழுத்தையுடையவரே (கரு மேகமே), शंभो–ஸுகத்தைக் கொடுக்கக்கூடியவரான ஈச, मे मनश्चातक:–என் மனமாகிற சாதக பக்ஷி, कारुण्यामृतवर्षिणं–கருணையாகிற அமிருதத்தை வர்ஷிப்பவரும் (கருணையால் ஜலத்தைப்பொழிகிறதும்). घनविपद्ग्रीष्मच्छिदाकर्मठं–அதிக ஆபத்தாகிற உஷ்ணத்தைப்போக்குவதில் திறமையுள்ளவரும் (கோடைகாலத்தின் தாபத்தைப்போக்குவதில் திறமையுள்ளதும், विद्यासस्यफलोदयाय–ஞானமாகிற பயிரின் பிரம்மானந்த ரூபமான பலத்தின்பொருட்டு, सुमनस्संसेव्यं–தேவதைகளாலும், மகான்களாலும், விவசாயிகளாலும் ஸேவிக்கத்தக்கதும், इच्छाकृति–இஷ்டம்போல் ரூபமுடைய

வரும், **नृत्यद्भक्तमयूरं**-நர்த்தனம் செய்யும் பக்தர்களாகிற மயிலுடன் கூடியவரும் (நர்த்தனம் செய்யும் பிரீதியுள்ள மயில்களையுடையதும்), **अद्रिनिलयं**-மலையிலிருப்பதும், **चञ्च-ज्जटामण्डलं**-அசைந்துகொண்டிருக்கும் ஜடாபாரத்தையுடையவருமான (சலிக்கும்படியான மின்னலையுடையதுமான), **त्वां**-உம்மை, **सदा**-எப்பொழுதும், **वाञ्छति**-விரும்புகிறது

மங்களத்தைக் கொடுப்பவனே! நீலகண்டா! (நீர் நிறைந்த கருமேகமே) கருணையென்னும் தேனைப்பொழிகின்ற உன்னை என் மனமாகிய சாதக பக்ஷி சதா நாடி நிற்கின்றது. (மழையைப் பொழிகின்ற மேகமே) பேரின்னல்களையும் விலக்கவல்லவனே (எரியும் சூட்டை அகற்ற வல்லமை படைத்துள்ளது) அற வென்னும் பழத்தைப்பெற தவசிகளால் நாடப்படுபவனே (பெரு விளைவைப்பெற விவசாயிகளால் வேண்டப்படுவது) எவ்வுருவை யும் கொள்ள வல்லாய் (பல்லுருவுகளையும் தோற்றுகின்றது ஆடுகின்ற அடியவர்களால் சூழப்படுபவனே (ஆடும் மயிலிற் உகந்ததாவது) மலைமீது வசிக்கின்றவனே (மலையுச்சியிலிருப்பது அசையும் சடைகளை உடையவனே (மின்னலால் தொடரப்படுவது

இந்த சுலோகத்திலும் இரட்டுற மொழிதலுள்ளது. சிவனு மழைமேகமும் இணைக்கப்படுகின்றார்கள். நீலகண்டன் என் சொல்லிற்கு நீலக்கழுத்துடைய பிரான், மழைமேகம் என்ற இ பொருளுண்டு. மேகத்தினின்று விழும் மழைத்துளிகளையே பரு உயிர் வாழ்வது சாதகப்பக்ஷி அதனாலே அது மழையையே நா நிற்கின்றது. அதுவே போன்று பக்தன் தன் மனம் இறைவ நாடி நிற்பதாகச் சொல்லுகின்றான். மழை மேகத்தைக்கா மயில் தோகையை விரித்தாடி மகிழ்ச்சியடைகின்றது இறைவ தரிசனம் பெற அடியார்கள் ஆனந்தத்தால் ஆடுகின்றார்க மேலிருந்து விழும மழையானது, சூட்டைத்தணித்து, மண்ணை வளம்படுத்துகின்றது, அதனால் உலகில் உயிர் வாழ்கின்ற பரம்பொருளாகும் சிவபெருமான் எல்லா துக்கங்களையும்போக் தன்னின்று வரும் பேரருளால் பெரும் பயனை ஆத்மாவிற் கூட்டுகின்றான். (

**आकाशेन शिखी समस्तफणिनां नेत्रा कलापी नता-**
**नुग्राहिप्रणवोपदेशनिनदैः केकीति यो गीयते ।**

श्यामां शैलसमुद्भवां घनरुचिं दृष्ट्वा नटन्तं मुदा
वेदान्तोपवने विहाररसिकं तं नीलकण्ठं भजे ॥ ५३ ॥

ஆகாசேன சிகீ ஸமஸ்த பணிநாம் நேத்ரா கலாபீ நதா-
ஜனுக்ராஹி ப்ரணவோபதேச நிநதை: கேகீதி யோ
கீயதே ।
ச்யாமாம் சைல ஸமுத்பவாம் கநருசிம் த்ருஷ்ட்வா
நடந்தம் முதா
வேதாந்தோபவநே விஹார ரஸிகம் தம் நீலகண்டம்
பஜே ॥

आकाशेन-ஆகாயத்தினுல், शिखी-கொண்டையுடையவர் समस्तफणिनां नेता-எல்லா நாகங்களுக்கும் அரசனுன ஆதி சேஷனுல், कलापी-ஆபரணத்தையுடையவர். (தோகைகளுடன்கூடியது), नतानुग्राहि-வணங்கியவர்களுக்கு அருள் செய்யும், प्रणवोपदेशनिनदैः-ப்ரணவ உபதேசத்திலுண்டான நாதத்தினுல், यः-எவர், केकीति गीयते-கேகாத்வனியுடன் கூடியவரென்று சொல்லப்படுகிருரோ, श्यामां-யௌவனத்துடன்கூடிய (கருமையான), शैलसमुद्भवां-மலையிலுண்டான घनरुचिं-விசேஷ காந்தியுடைய பார்வதியை(மேககாந்தியை) दृष्ट्वा-பார்த்து, मुदा-மகிழ்ச்சியால், नटन्तं-நர்த்தனம் செய்கிறவரும், वेदान्तोपवने-வேதாந்தமாகிற உத்யானத்தில், विहाररसिकं-விளையாடுவதில் பிரியமுள்ள, तं नीलकण्ठं भजे-அந்த கருமையான கழுத்தையுடைய ஈசுவரனுகிற மயிலை ஸேவிக்கிறேன். (இதுவும் மயிலுக்கும் ஈசுவரனுக்கும் சிலேஷை)

*ஆகாயத்தைக்கொண்டையாகவும், ஸர்ப்பராஜனை அணியாகவும் பெற்று, அடியார்களை உய்விக்கவுள்ள ஓம் என்ற பிரணவ சப்தத்தைச் சொல்லும்பொழுது கேகா என்ற ஓசையை உண்டாக்குகின்ருர். மேகத்தைப்போன்ற உடலைப்பெற்று வேதாந்தத்தில் தவழ்ந்து, மலைமகளாகும் பார்வதியைக் காண மகிழும் நீலகண்டபெருமானை நான் வாழ்த்துகின்றேன்.*

*இதிலும் பின் சுலோகங்களிலும், நர்த்தன சுந்தரமூர்த்தத்தைப் புகழ்கின்ருர், இங்கு சிவபெருமான் மயிலுடன்*

ஒப்பாக்கப்படுகின்றூர் இந்த விச்வரூப மயிலுக்கு ஆகாயமே முடி, பேடை பார்வதி, நர்த்தன அவை வேதாந்தம், ஸர்ப்பங்களே அணிகள், பிரணவமே குறி ஒலி.

இங்கு நீலகண்டன் என்பது நீலகண்டனையும், நீலக்கழுத்துடைய மயிலையும் குறிக்கின்றது. (53)

संध्या घर्मदिनात्ययो हरिकराघातप्रभूतानक-
ध्वानो वारिदगर्जितं दिविषदां दृष्टिच्छटा चञ्चला ।
भक्तानां परितोषबाष्पविततिर्वृष्टिर्मयूरी शिवा
यस्मिन्नुज्ज्वलताण्डवं विजयते तं नीलकण्ठं भजे ॥ ५४ ॥

ஸந்த்யா கர்ம திநாத்யயோ ஹரிகராகாதப்ரபூதாநக
த்வாநோ வாரித கர்ஜிதம் திவிஷதாம்
த்ருஷ்டிச்சடா சஞ்சலா ।
பக்தாநாம் பரிதோஷ பாஷ்பவிததிர் வ்ருஷ்டிர் மயூரீ சிவா
யஸ்மின்னுஜ்வல தாண்டவம் விஜயதே தம்
நீலகண்டம் பஜே ॥

**सन्ध्या**–ஸந்தியாகாலம், **घर्मदिनात्ययः**–கிரீஷ்ம காலத்தின் முடிவு (மழைகாலம்), **हरिकराघातप्रभूतानकध्वानः**–மஹா விஷ்ணுவின் கையாலடிக்கப்பட்ட படகமென்ற வாத்தியத்தின் பெரிய த்வனி **वारिदगर्जितं**–மேகநாதம், **दिविषद दृष्टिच्छटा**-தேவதைகளின் பார்வைக்கூட்டம், **चञ्चला**-மின்னல் **भक्तानां**-பக்தர்களுடைய, **परितोषबाष्पविततिः**–ஆனந்தக் கண்ணீர், **वृष्टिः**-மழை, **शिवा**–அம்பிகை, **मयूरी**–பெண் மயில் **यस्मिन्**–எந்த ஈசுவரனிடத்தில் (எந்த மயிலினிடத்தில்) **उज्ज्वलताण्डवं**–பிரகாசமான நர்த்தனம், **विजयते**–பிரகாசிக்கிறதோ, **तं नीलकण्ठं**–அந்த நீலகண்டனை மயிலை, **भजे**· ஸேவிக்கிறேன்.

விஷ்ணு பறையடிப்பதாலுண்டாகும் ஓசை மேகங்களின் உருமலாகவும் (இடியாகவும்) தேவர்களின் பார்வையாகு மொளி மின்னலாகவும் அடியார்களின் ஆனந்தக்கண்ணீர் மழை

யாகவும், பார்வதிதேவியார் பேடையாகவும் அமர, கோடையின் இறுதியில் மாலைப்பொழுதில் நீலகண்டனுடைய நர்த்தனம் நடை பெறுகின்றது. நான் அவரை வணங்குகின்றேன்.

சிவபெருமான் மாலையில் செய்யும் அபூர்வ நர்த்தனத்தின் ஓவியம் இங்குள்ளது. மயிலின் உபமானம் இங்கும் நீடிக்கப்பெறு கின்றது. மயில் ஆடும்பொழுது இடிக்கும் மேகம், மின்னல், மழை பேடை இவை உடனிருப்பவை. இறைவனின் விச்வநர்த்தனத் திற்கு, விஷ்ணுவின் பறை, அதைப்பார்க்கும் தேவர்களின் கூரொளி நோக்கு, அடியார்களின் ஆனந்தக்கண்ணீர், உமா தேவியார் இவர்கள் புடைசூழுகின்றன. (54)

आद्यायामिततेजसे श्रुतिपदैर्वेद्याय साध्याय ते
विद्यानन्दमयात्मने त्रिजगतः संरक्षणोद्योगिने ।
ध्येयायाखिलयोगिभिः सुरगणैर्गेयाय मायाविने
सम्यक्ताण्डवसंभ्रमाय जटिने सेयं नतिः शंभवे ॥ ५५ ॥

ஆத்யாயாமித தேஜஸே ச்ருதிபதைர் வேத்யாய
ஸாத்யாய தே
வித்யாநந்தமயாத்மனே த்ரிஜகத:
ஸம்ரக்ஷணோத்யோகினே ।
த்யேயாயாகில யோகிபி: ஸுரகணைர் கேயாய மாயாவினே
ஸம்யக் தாண்டவ ஸம்ப்ரமாய ஜடினே ஸேயம் நதி:
ஶம்பவே ॥

**आद्याय**–உலகத்திற்கு முந்தியவரும், **अमिततेजसे**–அள வில்லாத தேஜஸ்ஸையுடையவரும், **श्रुतिपदैर्वेद्याय**–வேதவாக் கியங்களால் அறியச்கூடியவரும், **साध्याय**–பக்தர்களால் உபாஸிக்கக்கூடியவரும், **विद्यानन्दमयात्मने**–ஞானனந்தரூபி யாயும், **त्रिजगतः संरक्षणोद्योगिने**-மூவ்வுலகங்களையும் காற்கும் முயர்ச்சியுடையவரும், **अखिलयोगिभिः**–ஸமஸ்தமான யோகி களாலும், **ध्येयाय**–தியானம் செய்யத்தக்கவரும், **सुरगणैः**– தேவ ஸமூகங்களால், **गेयाय**–கானம் செய்யத்தகுந்தவரும், **मायाविने**–மாயையை ஸ்வாதீனமாகக்கொண்டவரும், **सम्यक्**–

**ताण्डवसंभ्रमाय**—சிலாக்கியமாக நர்த்தனம் செய்வதில் வேக முள்ளவரும், **जटिने**—ஜடைகளுடன் கூடியவரும், **शम्भवे**-க்ஷேமத்தையுண்டுபண்ணுகிறவருமான, **ते**—உமக்கு, **सेयं नतिः**—இந்த நமஸ்காரம் இருக்கட்டும்.

*சடாதாரியே, முழுமுதற்காரணமே, எல்லையற்ற ஒளியே, வேத நூல்களால அறியப்படுபவனே! மூன்று உலகங்களையும் காக்கத்துணிந்தவனே! யோகிகளின் தியானப்பொருளே! தேவர்களின் கூட்டங்களால் புகழப்படுபவனே! மாயையைக் கையாளுபவனே! சிறந்த நர்த்தனத்தில் ஈடுபடுபவனே. சம்புவே உனக்கு என் நமஸ்காரங்கள்.*

*சம்புவின் நர்த்தனத்தினின்றே பிரபஞ்சம் தோன்றுகிறது அதனாலேயே உலகம் நிலைக்கப்படுகின்றது அதனாலேயே உலகம் கரைக்கவும் படுகின்றது. அது உண்மையை மறைக்கவும் அருளைப்பொழியவும் செய்கின்றது. சிவனது ஐம்பணிகள் நர்த்தனத்தின் ஐம்பகுதிகளாகும், சிருஷ்டி (உளவாக்கல்) ஸ்திதி (நிலைத்தல்) ஸம்ஹாரம் (அழித்தல்) திரோதானம் (மறைத்தல்) அநுக்ரஹம் (அருளுதல்) நர்த்தனமே மாயை. அதனாலே அவர் மாயாவி என்றழைக்கப்படுகின்றார். சிவனே பல்லுயிருக்கும் நிலைக்களன். அவைகளின் மூலம். அவர் ஸத், சித், ஆனந்த மானவர். அவர் வேதங்களால் அறியப்படுபவர். அவரே பரம இலட்சியம். அவரையே யோகிகள் தியானம் செய்கின்றார்கள் தேவர்கள் அவர் புகழைப்பாடுகின்றார்கள் அவர் விசேஷ நர்த்தனம் ஆபூர்வமானது அதுவே அனைவரையும் ஆக்கவும் காக்கவும் உள்ளது.* (56)

नित्याय त्रिगुणात्मने पुरजिते कात्यायनीश्रेयसे
सत्यायादिकुटुम्बिने मुनिमनःप्रत्यक्षचिन्मूर्तये ।
मायासृष्टजगत्त्रयाय सकलाम्नायान्तसंचारिणे
सायंताण्डवसंभ्रमाय जटिने सेयं नतिः शंभवे ॥ ५६ ॥

நித்யாய த்ரிகுணாத்மநே புரஜிதே காத்யாயநீ ச்ரேயஸே
ஸத்யாயாதிகுடும்பிநே முனிமந: ப்ரத்யக்ஷ
சின்மூர்த்தயே

மாயா ஸ்ருஷ்ட ஜகத்த்ரயாய ஸகலாம்நாயாந்த
ஸஞ்சாரிணே
ஸாயம் தாண்டவ ஸம்ப்ரமாய ஜடிநே ஸேயம்
நதி: ஶம்பவே ll

**नित्याय**-நாசமற்றவரும், **त्रिगुणात्मने**-முக்குண ரூபியாயும் (பிரம்ம விஷ்ணு ருத்ர ரூபியானவரும்), **पुरजिते**-த்ரிபுரர்களை ஜயித்தவரும் (ஸ்தூலம் ஸூக்ஷ்மம், காரணம் என்ற முப்புரங்களை ஜயித்தவரும்), **कात्यायनीश्रेयसे**-பார்வதியின் தவத்தின் பயனும், **सत्याय**-முக்காலங்களிலும் அழிவற்றவரும், **आदिकुटुम्बिने**-முதல் தம்பதிகளின் ரூபத்தையுடையவரும், **मुनिमनःप्रत्यक्षचिन्मूर्तये**-ரிஷிகளின் மனதுக்கு நேரில் புலப்படக்கூடிய ஞானரூபியாயும், **मायासृष्टजगत्त्रयाय**-தன் மாயையினால் உலகத்தைப்படைப்பவரும், **सकलाम्नायान्त-संचारिणे**-ஸகல உபநிஷத்துக்களால் அறியக்கூடியவரும், **सायं ताण्डवसंभ्रमाय**-ஸாயங்காலத்தில் நர்த்தனம் செய்வதில், பரபரப்புள்ளவரும், **जटिने**-ஜடாதரராயும், **शम्भवे**-ஸுகத்திற்குக் காரணருமான ஈச்வரன் பொருட்டு, **सेयं नतिः**-அப்படிப்பட்ட இந்த நமஸ்காரம் இருக்கட்டும்.

சம்பு, சடைகளை அணிந்தவனே, என்றுமுள்ளவனே, மூன்று குணங்களையும் பெற்றவனே, முப்புரங்களை வென்றவனே, உமையாருக்கு ஒன்றும் மதிப்பு உள்ளவனே, ஸத்தியமே முழுமுதலே, தவசிகளால் மனதில் அநுபவிக்கப்படும் பேரானந்தமே, மாயையால் மூவுலகங்களையும் அமைத்தவனே! வேதாந்தநூல்களின் பொருளே! மாலை நர்த்தனம் செய்து கொண்டிருப்பவனே, உனக்கே என் நமஸ்காரங்கள் உரியதாகட்டும்.

இங்கும் சிவபெருமானின் மாலை நர்த்தனத்தின் சித்திரம் வரையப்படுகின்றது, மகாதேவன், திசைகளைக் குறிக்கும் சடைகளை உடையவன். என்றுமுள்ளவனே நர்த்தனம் செய்கின்றான். அவன் உமையருகே நின்று ஆடுவதால் உலகை மாயையால் சிருஷ்டிக்கின்றான். அவரே முதல் அப்பர். பார்வதியை அம்மையாகவும், மஹேசுவரரை அப்பராகவும் சொல்லும் சுலோகமும் உண்டு. “மாதா ச பார்வதீதேவீ பிதா

தேவோ மஹேசுவர: ( **माता च पार्वतीदेवी पिता देवो महेश्वरः** (அம்மையப்பரே உலகிற்கெல்லாம் அம்மையப்பர் என்றுணர்க அவர் எங்கும் இருந்து, எதற்கும் மூலமாகவும், பெற்றோ களாகவும் இருந்தாலும், அவரை அடைவது எளிதன்று. ஞான களுக்கும் தவசிகளுக்குமே அவர் விளங்குபவர், அவ வேதாந்தத்தால் அறியலாம். (56

**नित्यं स्वोदरपूरणाय सकलानुद्दिश्य वित्ताशया**
**व्यर्थं पर्यटनं करोमि भवतः सेवां न जाने विभो ।**
**मज्जन्मान्तरपुण्यपाकबलतस्त्वं शर्व सर्वान्तर-**
**स्तिष्ठस्येव हि तेन वा पशुपते ते रक्षणीयोऽस्म्यहम् ॥**

நித்யம் ஸ்வோதர பூரணாய ஸகலானுத்திச்ய வித்தாசயா
வ்யர்த்தம் பர்யடனம் கரோமி பவத: ஸேவாம்
ந ஜானே விபோ
மஜ்ஜன்மாந்தர புண்ய பாக பலதஸ்த்வம் சர்வ ஸர்வாந்தர
ஸ்திஷ்டஸ்யேவ ஹி தேன வா பசுபதே தே
ரக்ஷணீயோஸ்ம்யஹம் ||

**पशुपते**–அஞ்ஞானிகளைக்காப்பாற்றுகிறவரே ஹே ஈ வரா, **पशुपते**–ஆத்மாக்களின் பதியே! **नित्यं**–எப்பொழுதும் **स्वोदरपूरणाय**–தன் வயிற்றை நிரப்புவதற்கு, **वित्ता शया**–பணத்திலுசையால், **सकलानुद्दिश्य**–எல்லோரையும் உத்தேசித்து **व्यर्थं**–வீணாக, **पर्यटनं करोमि**–அலைகிறேன் **विभो**–ஸர்வவியாபக, **भवतः सेवां न जाने**–உம்முடைய ஸேவையை அறியவில்லை. **शर्व**–பக்தர்களின் பாபங்களை போக்குகிறவரே, **मज्जन्मान्तरपुण्यपाकबलतः**-என் அநேக ஜன் புண்ணிய பலத்தால், **सर्वान्तरः**–அந்தர்யாமியாக, **त्वं**–நீ **तिष्ठस्येव**–இருக்கிறீர். **तेन वा**–அதினாலேயாவது, **अहं**–நான் **ते रक्षणीयोऽस्मि**–உன்னால் காப்பாற்றக்கூடியவனாகிறேன்.

ஆன்மாக்களின் தலைவனே! எங்கும் பரந்துள்ளவனே சிவனே, செல்வம் திரட்ட பொருளை நாடவும், வயிற்றை நிறை கவும் வீணாக அலைவதையே காண்கின்றேன். உன் ஸேவையில்

அமர எனக்குத் தெரியவில்லை. எனது பூர்வ புண்ணியத்தின் பயனுய் நீ ஆளுபவனுய் என்னுள் அமர்ந்துள்ளாய், ஆகையால் என்னைக் காப்பாற்றுவதும் உன் பொறுப்பே ஆகின்றது,

இந்தப் பாவில், இழியோருக்குச் சேவை செய்து அவர்கள் தயவைப் பெறுவது வீணென்பது பன்முறையும் சொல்லப் படுகின்றது. அவர்கள் கொடுப்பதாலும் பெறுவதாயினும் அதனுல் பயனில்லை. அவர்களின் கொடை அவர்களுக்கும் அதைப் பெறுபவர்களுக்கும் நன்மை செய்வதில்லை, ஆனுலும் பெரும் பாலானவர்கள், பணவாசையால் அதிகாரமும் செல்வமும் பெற்று ள்ளோர்களைச் சுற்றியே ஆட்டம் போடுகின்றுர்கள். அது மயக்கத் தால் ஆவது. இறைவன் கொடுத்துள்ள திறனையும் பொழுதையும் இப்படியா வீண்செய்வது? பூர்வபுண்ணிய பயனுல் இந்நிலையிலும் சிலர் தேவனிருப்பதை உணர்கின்றுர்கள். அவர்கள் நிறைவுடைய வழி அவர்களுக்கு முன்னுல் திறந்து கிடக்கின்றது அவர்கள் வழியை பிடித்துக்கொண்டால் அவர்கள் காப்பாற்றப்படுவார்கள்

एको वारिजबान्धवः क्षितिनभोव्याप्तं तमोमण्डलं
भित्त्वा लोचनगोचरोऽपि भवति त्वं कोटिसूर्यप्रभः ।
वेद्यः किं न भवस्यहो घनतरं कीदृग्भवेन्मत्तम-
स्तत्सर्वं व्यपनीय मे पशुपते साक्षात्प्रसन्नो भव ॥ ५८॥

ஏகோ வாரிஜ பாந்தவ: க்ஷிதி நபோ வ்யாப்தம்
தமோ மண்டலம்
பித்த்வா லோசந கோசரோऽபி பவதி த்வம்
கோடிஸூர்யப்ரப: ।
வேத்ய: கிம் ந பவஸ்யஹோ கநதரம்
கீத்ருக் பவேன்மத்தமஸ்
தத்ஸர்வம் வ்யபநீய மே பசுபதே ஸாக்ஷாத்
ப்ரஸந்நோ பவ ॥

पशुपते-ஜீவர்களின் தலைவா, वारिजबान्धवः-சூரியன், एकः-ஒருவனுகவே, क्षितिनभोव्याप्तं-பூமி ஆகாயம் இவைகளில் வியாபித்த, तमोमण्डलं-இருள் கூட்டத்தை, भित्त्वा-நாசம் செய்து, लोचनगोचरोपि-கண்ணுக்குப் புலப்படுபவனுகவும், भवति-ஆகிருன். कोटिसूर्यप्रभः-கோடிஸூர்யர்களுக்கு ஸம

மான காந்தியையுடைய, त्वं-நீர், वेद्यः किं न भवसि-ஏன் அறியக்கூடியவராக இல்லை? अहो-ஆச்சர்யம்! घनतरं-மிகவும் கெட்டியான, मत्तमः-என் அஞ்ஞானம், कीदृग्भवेत्-எவ்வளவு? तत्-ஆகையால், सर्वं-எல்லாவித மான அஞ்ஞான இருளையும், व्यपनीय-போக்கடித்து, मे-எனக்கு, साक्षात्प्रसन्नो भव-நேராக அனுக்ரகம் செய்யவேணும்.

ஆன்மாக்களின் தலைவ! காரிருளை நீக்கி, மண்ணிலும் விண்ணிலும் பரவுகின்றது கதிரவனொளி. ஆயின் உன் ஒளியோ கோடி சூரியர்களின் ஒளியிலும் பெரியது ஆயினும் நீ ஏன் வெளிப் படுத்திக்கொள்வதில்லை! என் இருட்டு (அஞ்ஞானம்) எவ்வளவு கடுமையானது! இதை முற்றுமாக அழித்தொழித்து எனக்கு முற்றுமாக விளங்குவாயாக!

பரம்பொருள் தானே ஒளிபெற்றது. அதை விளக்க வேறு ஒளி வேண்டப்படுவதன்று. மண்ணுலகில் சூரியன் தானே வெளிச்சமாய் விளங்குகின்றான். ஆத்மாவிற்கு எல்லையற்ற ஒளி உள்ளது. உலக வழக்கில் சொல்லுவதானால் ஆயிரம் சூரியர்களின் ஒளி அதற்கு உண்டென்று சொல்லலாம். ஆயினும் அது நமக்கு ஏன் வெளிப்படுவதில்லை. அது நமக்குப் புலனாவதில்லையென்று சொல்வதும் பிழையானதே. அது முற்றுமாக நமக்குப் புலனாவது மில்லை. அது வெளிப்பட்டும் வெளிப்படாமலும் இருப்பது இந்த மாற்றமான நிலை மாயை-அவித்யை-யால் ஏற்படுவது. பக்தன் இந்த மாயையை அகற்ற பரம்பொருளை வேண்டுகின்றான். (58

हंसः पद्मवनं समिच्छति यथा नीलाम्बुदं चातकः
कोकः कोकनदप्रियं प्रतिदिनं चन्द्रं चकोरस्तथा ।
चेतो वाञ्छति मामकं पशुपते चिन्मार्गमृग्यं विभो
गौरीनाथ भवत्पदाब्जयुगलं कैवल्यसौख्यप्रदम् ॥ ५९ ॥

ஹம்ஸ: பத்ம வநம் ஸமிச்சதி யதா நீலாம்புதம் சாதக:
கோக: கோகநத ப்ரியம் ப்ரதிதிநம் சந்த்ரம் சகோரஸ்தத॥
சேதோ வாஞ்ச்சதி மாமகம் பசுபதே சின்மார்க
ம்ருக்யம் விபோ
கௌரீநாத பவத்பதாப்ஜ யுகளம் கைவல்ய
ஸௌக்யப்ரதம் ॥

**पशुपते**-மூடர்களையும் காக்கிறவரே. **विभो**-ஸர்வ வியாபக, **गौरीनाथ**-பார்வதீபதே. **यथा**-எவ்விதம், **हंसः**-அன்னபக்ஷி, **पद्मवनं**-தாமரையோடையையும், **चातकः**-சாதகபக்ஷி, **नीलाम्बुदं**-கருமேகத்தையும், **कोकः**-சக்ரவாக பக்ஷி, **कोकनदप्रियं**-ஸூரியனையும், **चकोरः**-சகோர பக்ஷி, **चन्द्रं**-சந்திரனையும், **प्रतिदिनं**-தினந்தோறும், **समिच्छति**-விரும்புகிறதோ, **तथा**-அவ்விதம், **मामकं चेतः**-என் மனம், **चिन्मार्गमृग्यं**-உபநிஷத்துக்களால் தேடத்தக்கதும், **कैवल्यसौख्यप्रदं**-மோக்ஷஸுகத்தையளிக்கிறதுமான, **भवत्पदाब्जयुगलं**-உம்முடைய இருபாதகமலங்களை, **वाञ्छति**-ஆசைப்படுகிறது.

ஆத்மாக்களின் இறைவனே ? எங்கும் பரந்து இருப்பவனே ! பார்வதி தேவியின் கணவா ! ஹம்ஸம் தாமரைக்குளத்தை நாடுவதைப்போலவும், சக்ரவாகப் பறவை சூரியனை நாடுவதைப் போலவும், சகோரப்பறவை சந்திரனை நாடுவதைப்போலவும், அறிவு வழியில் தேடப்படுவதும், பூர்ணமென்னும் ஆனந்தத்தைக் கொடுப்பதுமான உன் திருவடிகளை என் மனம் நாடி நிற்கின்றது.

பக்தனின் நாட்டத்தை விளக்க சில உபமானங்கள் தரப்படுகின்றன. மேலே குறிக்கப்பட்ட இணைகளில் ஒன்றின்றி ஒன்றில்லை. ஒன்றையொன்று பற்றி நிற்பவை. ஹம்ஸமும் குளமும், சாதகமும் மழை மேகமும், சக்ரவாகமும் சூரியனும், சகோரமும் சந்திரனும்; இங்கு நான்கு வகைப்பறவைகள் குறிக்கப்படுகின்றன. ஒவ்வொரு பறவையும் ஒவ்வொன்றை நாடி நிற்கின்றது. ஹம்ஸம் தாமரைத்தண்டைத் தின்று உயிர்வாழ்வது. சாதகப்பறவையோ மழைத்துளிகளைப்பருகி உயிர் வாழ்வது. சக்ரவாகப்பறவைகள் இரவில் துணை பிரிந்து நிற்பன. அவை சூரியனொளியை நாடிக்கூடுவன. சகோரப் பறவை சந்திரன் கிரணங்களைப்பருகி உயிர் வாழ்வதாகக் கொள்ளப்படுகின்றது. அதேவிதம் பக்தனின் இதயம் இறைவன் அடிகளை நம்பியே வாழ்வது. (59)

**रोधस्तोयहृतः श्रमेण पथिकश्छायां तरोर्वृष्टितो**
**भीतः स्वस्थगृहं गृहस्थमतिथिर्दीनः प्रभुं धार्मिकम् ।**
**दीपं संतमसाकुलश्च शिखिनं शीतावृतस्त्वं तथा**
**चेतः सर्वभयापहं व्रज सुखं शंभोः पदाम्भोरुहम् ॥ ६० ॥**

ரோதஸ்தோய ஹ்ருத: ஸ்ரமேண பதிகச்சாயாம்
தரோர் வ்ருஷ்டிதோ
பீத: ஸ்வஸ்த்த க்ருஹம் க்ருஹஸ்த்தமதிதிர் தீந:
ப்ரபும் தார்மிகம்
தீபம் ஸந்தமஸாகுலச்ச ஸிகிநம் ஸீதாவ்ருதஸ்த்வம் ததா
சேத: ஸர்வபயாபஹம் வ்ரஜ ஸுகம் ஸம்போ:
பதாம்போருஹம் ]

**चेतः**–மனமே! **यथा**–எவ்விதம், **तोयहृतः**–ஜலத்தின் வேகத்தினால் இழுக்கப்பட்டவன், **रोधः**-கரையையும், **पथिकः** வழிப்போக்கன், **श्रमेण**-களைப்பினால், **तरोः**–மரத்தின், **छायां** நிழலையும், **वृष्टितः भीतः**–மழையினின்றும் பயந்தவன் **स्वस्थगृहं**–நல்ல கிருஹத்தையும், **अतिथिः**-அதிதி (விருந்தாளி **गृहस्थं**–கிருஹஸ்தனையும் (கிருஹஸ்தாச்ரமத்திலிருக்கும் புருஷனையும்), **दीनः**–எளியவன், **धार्मिकं प्रभुं**–தர்மசிந்தனை உள்ள தனவந்தனையும், **संतमसाकुलः**–நல்ல இருளால் கலங்கியவன், **दीपं**–தீபத்தையும், **शीतावृतः**-குளிரால் வருந்தியவன், **शिखिनं च**–அக்னியையும். (அடைகிறானோ), **तथा**-அப்படி, **त्वं**-நீ, **सर्वभयापहं**-ஸகல பயத்தையும் போக்கடிக்கக் கூடிய, **सुखं**–சுகத்தையுண்டுபண்ணக் கூடிய, **शंभोः**-ஈசுவரனின், **पदाम्भोरुहं**–பாதாரவிந்தத்தை, **व्रज**–அடைவாய்.

தண்ணீரால் அடித்துக்கொண்டு போகப்பட்டவன் கரையேற முயலுவதைப்போலும், களைத்துப்போன வழிப்போக்கன் மரத்து நிழலை நாடுவதைப் போலவும், மழைக்குப் பயப்படுபவன் வீட்டிற்குள் நுழைய முயலுவதைப்போலவும், விருந்தாளி ஒரு இல்லறத்தானை நாடுவதைப் போலவும், எளியவன் செல்வம் நிறைந்த கொடையாளியைத் தேடுவதைப் போலவும், இருட்டில் அவதிப்படுபவன் விளக்கை நாடுவதைப் போலவும், பனியால் நடுங்குபவன் நெருப்பை வேண்டுவதைப் போலவும், ஏ மனமே, பயத்தை யெல்லாம் விரட்டியடிக்கும் சம்புவின் திருவடிகளை நாடியடைவாயாக.

ஆத்மா புகலிடம் தேடி இறைவனடிகளை அடைவ... மேலும் உதாரணங்கள் கொடுக்கின்றார். இவ்வடுக்குகளில் தேடுபவனும் தேடப் படுபவனும் உள்ளார்கள். வாழ்க்கையில் பல ஆபத்துக்களினின்றும் காப்பாற்றப்படவேண்டியவர்களும்

காப்பாற்றுபவர்களும் உள்ளார்கள். நீரால் இழுத்துப் போகப் படுபவன் கரை சேர்ந்தால் ஆபத்தினின்று தப்புகின்றான். களைத்துப்போன வழிப்போக்கன் மரத்தின் நிழலை நோக்கியே போவான். மழையால் நனைபவன் நனையாதிருக்க இடத்தைத் தேடுகிறான். பசியுள்ளவன் பசியைப்போக்க ஒரு இல்லறத் தானிடம் வருகிறான். செல்வமும் கொடையுமுள்ளவனை எளிய வர்கள் சூழுகின்றார்கள். இருட்டில் திகைப்பவனுக்கு விளக்கு வேண்டியதாகின்றது. பனியால் நடுங்குபவன் நெருப்பின் சூட்டை நெருங்குகின்றான். பயத்தினின்று விடுபட விரும்புபவன் இறைவனிடம் சரண்புகவேண்டும். பயத்தினின்று விடுபட விரும்பாதவன் யார்? (60)

अङ्कोलं निजबीजसंततिरयस्कान्तोपलं सूचिका
साध्वी नैजविभुं लता क्षितिरुहं सिन्धुः सरिद्वल्लभम् ।
प्राप्नोतीह यथा तथा पशुपतेः पादारविन्दद्वयं
चेतोवृत्तिरुपेत्य तिष्ठति सदा सा भक्तिरित्युच्यते ॥ ६१ ॥

அங்கோலம் நிஜ பீஜ ஸந்ததிரயஸ்காந்தோபலம் ஸூசிகா
ஸாத்வீ நைஜ விபும் லதா க்ஷிதிருஹம் ஸிந்து:
ஸரித்வல்லபம் ।
ப்ராப்நோதீஹ யதா ததா பசுபதே: பாதாரவிந்தத்வயம்
சேதோவ்ருத்திருபேத்ய திஷ்டதி ஸதா
ஸா பக்திரித்யுச்யதே ॥

इह–இவ்வுலகில், निजबीजसन्ततिः–தன் விதைகளின் கூட்டம், अंकोलं–அழிஞ்சிமரத்தையும், सूचिका–இரும்புக் கம்பி, अयस्कान्तोपलं–அயக்காந்தக் கல்லையும், साध्वी–பதிவிரதை, नैजविभुं–தன் கணவனையும், लता–கொடி, क्षितिरुहं–மரத்தையும், सिंधुः–நதி, सरिद्वल्लभं–ஸமுத்திரத்தை யும், यथा–எவ்விதம், प्राप्नोति–அடைகிறதோ, तथा–அவ்விதம், चेतोवृत्तिः–மனதின் வியாபாரம், पशुपतेः–ஈசுவரனின், पादारविन्दद्वयं–இரு திருவடித்தாமரைகளை, उपेत्य–அடைந்து, सदा–எப்பொழுதும், तिष्ठति–இருக்கிறது (என்ற), सा–அது, भक्तिरिति उच्यते–பக்தி என்றுசொல்லப் படுகிறது.

அங்கோல மரத்தின் விதைகள் அடிமரத்தை நாடியே விழுவதைப்போலவும், இரும்பு ஊசி காந்தத்தைப் பற்றிக்கொள்வதைப்போலவும், கற்புடை மனைவி கணவனைப்பற்றிக்கொள்வதைப்போலவும் கொடி அயலிலுள்ள மரத்தில் பிணைந்துகொள்வதைப்போலவும், ஆறு கடலை நோக்கி ஓடுவதைப்போலவும், மனது இறைவனடியை விரைந்து பற்றிக்கொண்டு அங்கு நிலைப்பதுவே பக்தியாகும்.

சென்ற இரண்டு சுலோகங்களும் இதற்கு முன்னுரை. இதில் பக்தி விரிக்கப்படுகின்றது. இங்குள்ள உபமானங்கள் உயிருள்ளவும் இல்லவுமாகின்றன. இங்கு கீழுள்ளதிற்கு மேலுள்ள ஒரு துணை வேண்டப்படுவது. ஒரு இலட்சியத்தில் எப்படி விடாத பற்று இருக்கவேண்டுமென்பதற்கு இந்த ஒப்புமைகள் கொடுக்கப்படுகின்றன. கடவுளிடத்து இந்த ஒருமைப்பாடு அமைவதே பக்தியாகின்றது. (61)

आनन्दाश्रुभिरातनोति पुलकं नैर्मल्यतश्छादनं
वाचाशङ्खमुखे स्थितैश्च जठरापूर्तिं चरित्रामृतैः ।
रुद्राक्षैर्भसितेन देव वपुषो रक्षां भवद्भावना-
पर्यङ्के विनिवेश्य भक्तिजननी भक्तार्भकं रक्षति ॥ ६२ ॥

ஆநந்தாச்ருபிராதநோதி புளகம் நைர்மல்யதச்சாதநம்
வாசாஶங்கமுகே ஸ்திதைச்ச ஜடராபூர்திம் சரித்ராம்ருதை: ।
ருத்ராக்ஷைர் பஸிதேன தேவ வபுஷோ ரக்ஷாம் பவத்பாவனா
பர்யங்கே விநிவேச்ய பக்தி ஜனனீ பக்தார்பகம் ரக்ஷதி ॥

**देव**–ஹே தேவனே, **भक्तिजननी**–பக்தியாகிற தாய், **भक्तार्भकं**–பக்தனாகிற குழந்தையை, **भवद्भावनापर्यङ्के**–உமது த்யானமாகிற கட்டிலில், **विनिवेश्य** - படுக்கவைத்து, **आनन्दाश्रुभिः** ஆனந்தக்கண்ணீரால், **पुलकं**–மயிர்க்கூச்சலையும், **नैर्मल्यतः**- சுத்தத்தன்மையால், **छादनं**–வஸ்திரம் போர்த்துவதையும், **वाचाशंखमुखे स्थितैः**வேதவாக்யங்களாகிற சங்கின் முகத்திலிருக்கிற, **चरित्रामृतैः**–சரித்திரமாகிற பாலால், **जठरापूर्तिं** வயிற்றை நிரப்புவதையும், **रुद्राक्षैः भसितेन**-ருத்திராக்ஷங்களாலும் விபூதியாலும், **वपुषो रक्षां**–சரீரத்தைக் காப்பாற்றுவதையும், **आतनोति**-செய்கிருள். **रक्षति**–காப்பாற்றுகிருள்,

இறைவ! பக்தியென்னும் தாய் பக்தனென்னும் குழந்தையை காப்பாற்றுகிருள். அவனை ஆனந்தம் என்னும் தண்ணீரால் (கண்ணீரால்) குளிப்பாட்டியும் (உத்சாகப்படுத்தியும்) அவனை தூய்மையென்னும் உடையால் போர்த்தியும், சிவபுராண மென்னும் அமிர்தத்தை ஊட்டியும் (சங்குகொண்டு வாக்கை,) அவனுக்கு உருத்திராக்ஷ மாலை விபூதி அணிவித்தும், உனது தியானம் என்னும் தொட்டிலில் தூங்க வைக்கிருள்.

இங்கு பக்தி ஒரு தாயுடன் உவமிக்கப்படுகின்றது. பக்தன் குழந்தையாகின்ருன். பக்தி இறையன்பை உள்ளும் புறமும் அமைக்கின்றது. பக்தனுடலை ருத்திராக்ஷமும் விபூதியும் அலங்கரிக்கின்றன. உடனுள்ள பக்தர்கள் சிவபுராணங்களைச்சொல்ல பக்தன் அவைகளைக்கேட்டு மகிழ்கின்ருன். அவன் கண்கள் நின்றும் நீர் வடிகின்றது. அவன் மனது தூய்மையை அடைகின்றது. அவன் தியானத்தில் தன்னை இழந்தவனுகின்ருன்.

நாரத பக்தி சூத்திரம் (60) தொண்டையடைக்க தழுதழுத்து பேசுதல், கண்களில் நீர் சொரிதல், மெய்சிலிர்த்து நிற்றல், இவைகள் பெற்றவர் தங்கள் குடும்பங்களையும் உலகத்தையும் புனிதப்படுத்துகின்ருர்கள். (62)

मार्गावर्तितपादुका पशुपतेरङ्गस्य कूर्चायते
गण्डूषाम्बुनिषेचनं पुररिपोर्दिव्याभिषेकायते ।
किंचिद्भक्षितमांसशेषकबलं नव्योपहारायते
भक्तिः किं न करोत्यहो वनचरो भक्तावतंसायते ॥ ६३ ॥

மார்காவர்திதபாதுகா பஶுபதேரங்கஸ்ய கூர்சாயதே
கண்டூஷாம்பு நிஷேசனம் புரரிபோர் திவ்யாபிஷேகாயதே ।
கிஞ்சித்பக்ஷித மாம்ஸ ஶேஷ கபளம் நவ்யோபஹாராயதே
பக்தி: கிம் ந கரோத்யஹோ வநசரோ
பக்தாவதம்ஸாயதே ॥

**मार्गावर्तितपादुका**–வழியில் அடிக்கடி உபயோகப்படுத்தப்பட்ட செருப்பு, **पशुपतेः**–ஈசுவரனின், **अङ्गस्य**–அவயவத்திற்கு, **कूर्चायते**–புருவங்களின் மத்தியம் போலிருக்கிறது. **गण्डूषाम्बुनिषेचनं**–எச்சில் ஜலம், **पुररिपोः**–திரிபுரர்களுக்குச்

சத்துருவான சிவனுக்கு, दिव्याभिषेकायते–கங்காஜலத்தி அபிஷேகம் போல் ஆகிறது. किञ्चिद्भक्षितमांसशेषकबलं- சிறிது கடித்து மீதியான மாம்ஸம், नव्योपहारायते–புதிதான நைவேத்யமாகிறது. वनचरः–காட்டிலிருக்கும் வேடன், भक्तावतंसायते–உயர்ந்த பக்தனாகிறான். भक्तिः किं न करोति–பக்தியானது எதைத்தான் செய்யாது! अहो–ஆச்சரியம்.

காட்டில் அலைந்ததால் தேய்ந்த செருப்பு இறைவனின் திருமேனியில் இருகண்களுக்குமிடையே இடுகுறியாக அமைந்தது. முப்புரமெரித்த செம்மலிற்கு வாயாற் கொணரப்பட்ட நீர் தெய்வீக அபிஷேகமாயிற்று ஏற்கனவே வாயால் மெல்லப் பட்ட ஊன் (இறைச்சி) புனிதமான நிவேதனமாயிற்று. பக்தி எதைச்செய்யாது! வேடன் பக்தர்களில் தலைசிறந்தவனாகின்றான்.

இங்கு சங்கரர் கண்ணப்பருக்குத் தலைசிறந்த பக்தனென்று வணக்கம் செலுத்துகின்றார். முரட்டு வேடன் இறைவனை தன் வழியில் வணங்குகின்றான். அவனுக்கு சாஸ்திரங்கள் தெரியாது. பூஜை முறைகளை அவன் கற்றிலன். பூஜைக்கு வேண்டிய புறத் தூய்மை கடுகளவும் அவனிடமில்லை. கோயில் பூசாரி அவனது முரட்டு பூஜாவிதியை ஒரு அபசாரமாகவே கொண்டார். ஆயின் அது இறைவனுக்கு சிறந்த பூஜைமுறையாயிற்று. கண்ணப்பன் ஒரு கண்ணை இறைவனுக்குக் கொடுத்துவிட்டு மறுகண்ணும் கொடுக்கத் தயாராகும்பொழுது இறைவனே அவனைக் கண்ணப்பன் என்று அழைத்தார். பக்தியில் கண்ணப்பனுக்குச் சிறந்தவர் யார். அவனே பக்தர்களில் முதன்மையானவன். மாணிக்கவாசகர்,

**கண்ணப்ப னொப்ப தோரன்பின்மை கண்டபின்**
**என்னப்ப னென் னொப்பி லென்னையு மாட்கொண்டருளி**
**வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்**
**சுண்ணப் பொன்னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ.**

என்று (திருக்கோத்தும்பீ–4) பாடியுள்ளார்.

ஷோமருஸ் "பெரிய புராணத்தில் கண்ணப்பன், காட்டில் பூஜையற்ற ஒரு சிவலிங்கத்தைக் கண்டு தன்னையும் உலகையும் மறந்து, அந்த லிங்கத்தின் சேவையில் அமர்ந்தான். அதற்காக தன் கண்களையும் அர்ப்பணித்தான்" என்று குறிக்கின்றார். (63)

वक्षस्ताडनमन्तकस्य कठिनापस्मारसंमर्दनं
भूभृत्पर्यटनं नमत्सुरशिरःकोटीरसंघर्षणम् ।
कर्मेदं मृदुलस्य तावकपदद्वन्द्वस्य किं वोचितं
मच्चेतोमणिपादुकाविहरणं शंभो सदाऽङ्गीकुरु ॥ ६४ ॥

வக்ஷஸ்தாடநமந்தகஸ்ய கடிநாபஸ்மார ஸம்மர்தனம்
பூப்ருத் பர்யடனம் நமத்ஸுர ஶிர:கோடீர ஸங்கர்ஷணம் ।
கர்மேதம் ம்ருதுளஸ்ய தாவக பதத்வந்த்வஸ்ய கிம் வோசிதம்
மச்சேதோ மணி பாதுகா விஹரணம் ஶம்போ
ஸதாங்கீகுரு ॥

**शम्भो**–சம்புவே, **अन्तकस्य**–யமனுடைய, **वक्षस्ताडनं**–மார்பில் உதைப்பது, **कठिनापस्मारसंमर्दनं**–கடினமான அபஸ்மாரமென்பவனை மிதிப்பது, **भूभृत्पर्यटनं**–மலையில் ஸஞ்சரிப்பது, **नमत्सुरशिरःकोटीरसंघर्षणं**-வணங்கும் தேவதைகளின் சிரஸ்ஸிலுள்ள கிரீடத்தில் உரைவது, **इदं कर्म**-இந்தக்காரியம் **मृदुलस्य**–மிருதுவான, **तावकपदद्वन्द्वस्य**-தங்கள் இரு திருவடிகளுக்கு, **किं वोचितं**–தகுந்ததுதானா ? **मच्चेतोमणिपादुकाविहरणं**-என் மனமாகிற ரத்னபாதுகையால் ஸஞ்சரிப்பதை, **सदा अङ्गीकुरु**–எப்பொழுதும் ஏற்றுக்கொள்ளும்.

யமனுடைய மார்பில் உதைத்துக்கொண்டு அபஸ்மாரத்தை காலில் மிதித்துக்கொண்டு, கைலாய மலையில் திரிந்துகொண்டு, வணங்கிய தேவர்களின் முடிகளில் உறைந்துகொண்டு நிற்பவை உன் பாதங்கள். இது முறையா? மணிகள் பொதிந்த என் இதயத்தைச் செருப்பாயணிந்து செல்வாயாக ஓ சம்போ !

பக்தன் இறைவனுக்குத் தன் மனதைச் செருப்பாகக் கொடுக்கிறான். சிவன் பாதங்கள் கடுமையான வேலைகளைச் செய்யவேண்டியிருக்கின்றது ஆகையால் பாதங்களுக்குச் சரியான காப்பு இருக்கவேண்டும்.

இறைவன் தன் பாதங்களுக்குக் கொடுக்கும் சில கடுமையான அலுவல்கள்:—

1. மார்க்கண்டேயர் பதினாறுவருஷங்களே வாழப்பிறந்தவர் குறித்தகாலம் நெருங்க அவன் பெற்றோர்கள் இரங்கி வாடினார் கள். அப்பையன் தான் யமனை வென்றுவிடுவதாக பெற்றோர் களிடம் உறுதி கூறினான். கோயிலிற்குச் சென்று சிவலிங்கத்தை வணங்க ஆரம்பித்தான். மார்க்கண்டேயனது உயிரைப்பற்றிவர யமன் தன் தூதர்களை அனுப்பினான். ஆனால் அவர்கள் சிவலிங்க மிருக்கும் கர்ப்பகிருகத்தில் நுழையக்கூடவில்லை. பிறகு யமனே நேரில் வந்தான். லிங்கத்தினின்றும் சிவபெருமான் எழுந்து யமனை மார்பில் உதைத்தார். யமன் இறந்துபட்டான். சிவபெருமான் தன்னருளால் அவனை உயிர்ப்பித்தார். மார்க்கண்டேயன் யமனை வென்று சிரஞ்ஜீவியானான்.

யமனுடைய மார்பில் வெறுங்காலுடன் உதைப்பது கடின மான வேலைதான். சுந்திரர் 7-61-4ல் உதைத்தகோடும் தோழில் என்ற பாவில் இதைக்குறித்துள்ளார்.

2. தாருகாவன யாகத்தில் வெளித்தோன்றியவைகளில் அபஸ்மாரமும் ஒன்று, அது தீய நடுக்கமுள்ள குறளை அதுவும் சிவனைப்பழிக்க, சிவபெருமான் பாதத்தால் அதை நசுக்கி நலித் தார். சிவன் தன் கால் கட்டைவிரலைக்கொண்டு அதன் முதுகெலும்பை மிதிக்க அது உடைந்துபட்டது. நர்த்தன சிவனாகும் நடராஜன் உருவத்தில் அபஸ்மாரம் சிவபெருமான் அடிக்கீழ் படுத்துக்கிடப்பதாக அமைகின்றது.

அபஸ்மாரம் என்பது ஒரு வலிப்பு. அது இயற்கை பிரக்ஞையை இழக்கச் செய்து, நடுங்குகின்றவர்களுக்கு பெரும் வலியைக்கொடுக்கின்றது அபஸ்மாரம் மாயை, அக்ஞானம் இதைக்குறிப்பது. அதை அகற்றுவது எளிதன்று. ஆகையால் கடினம் என்ற சொல் கையாளப்படுகின்றது.

3. சிவபெருமான் உறைவிடம் கைலையங்கிரி. சிவனடிகள் அங்கு கடும்பாறைகளில் நடக்கவேண்டியுள்ளன.

4. தேவர்கள் சிவனடிகளை வணங்கவரும்பொழுது ஒருவரை யொருவர் முந்தி வருகின்றார்கள். தங்கள் ஆர்வத்தில் அவர்கள் தாங்கள் சிவபெருமானுக்கு இழைக்கும் தொல்லையை அறிவ தில்லை. அவர்களது முடிகளுடன் உறைவது பாதங்களுக்கு கடின மானதன்றோ? (இந்நூல் சு. 17)

இறைவனடிகள் விடாது இக்கடின அலுவல்களைச் செய்ய வேண்டியுள்ளது. பக்தன் தன் மனதைச் செருப்பாக இறைவனுக்குக் கொடுக்கின்றான். அதுவும் நன்றாகவும் அழகாகவும், சிவனால் அணியத்தகுந்ததாகவும் உள்ளது. (64)

**वक्षस्ताडनशङ्कया विचलितो वैवस्वतो निर्जराः**
**कोटीरोज्ज्वलरत्नदीपकलिकानीराजनं कुर्वते ।**
**दृष्ट्वा मुक्तिवधूस्तनोति निभृताश्लेषं भवानीपते**
**यच्चेतस्तव पादपद्मभजनं तस्येह किं दुर्लभम् ॥ ६५ ॥**

வக்ஷஸ்தாடந ஶங்கயா விசலிதோ வைவஸ்வதோ நிர்ஜரா:
கோடீரோஜ்ஜ்வலரத்ன தீப கலிகா நீராஜனம் குர்வதே ।
த்ருஷ்ட்வா முக்தி வதூஸ்தநோதி
நிப்ருதாச்லேஷம் பவாநீபதே
யச்சேதஸ்தவ பாதபத்ம பஜனம் தஸ்யேஹ
கிம் துர்லபம் ॥

**भवानीपते**–பார்வதீபதே, **यच्चेतः**–எவன் மனது, **तव**–உம்முடைய, **पादपद्मभजनं**–தாமரை போன்ற திருவடிகளை ஸேவிக்கிறதாக உள்ளதோ (அவனை) **दृष्ट्वा**–பார்த்து **वैवस्वतः**–யமன், **वक्षस्ताडनशङ्कया**–மார்பில் அடி ஏற்படுமென்ற எண்ணத்தால், **विचलितः**- ஓடிவிட்டான். **निर्जराः** தேவதைகள், **कोटीरोज्ज्वलरत्नदीपकलिकानीराजनं कुर्वते**-தங்கள் கிரீடங்களில் பிரகாசிக்கின்ற தீபம் போன்ற ரத்னங்களின் ஒளிகளால் ஆரத்தி செய்கிறார்கள். **मुक्तिवधूः**–முக்தியாகிய பெண், **निभृताश्लेषं तनोति**–காடாலிங்கனம் செய்கிறாள். **तस्य**– அவனுக்கு, **इह**–இவ்வுலகில், **किं दुर्लभं**–எதுதான் அடையமுடியாதது !

*பார்வதியின் தலைவ ! எவன் மனது உன்னை பூஜிக்கின்றதோ அவனால் சாதிக்கக்கூடாததென்ன ? அவனைப் பார்த்தாலே, யமன் ஓடிவிடுகின்றான். தேவர்கள் முடிகளிலுள்ள ஒளிவிடும் மணிகளைக்கொண்டு அவனுக்கு விளக்கெடுக்கின்றார்கள் (ஆலத்தி) முக்தி யென்னும் மணப்பெண் அவனை இறுக அணைத்துக்கொள்கிறாள்.*

யமனை வென்றவன் மார்க்கண்டேயன் ஒருவனேயன்று. ஒவ்வொரு பக்தனும் சாவின்மையைப் பெற்றுவிடுகின்றான் அழிவற்ற தேவர்களின் நிலையினும் உயர்ந்தது பக்தனின் நிலை தேவர்களும் பக்தர்களைப் பாராட்டுகின்றார்கள். அவ்வழி தாம் சிவனையே வணங்குவதாகவும் கொள்கின்றார்கள். அவர்கள் தலை குவிந்து பக்தன் முன்பு செல்லும்பொழுது, அவர்கள் முடிமணிகள் ஆலத்தி போன்றமைகின்றன. சிவனுக்கு பக்தி செய்வதால் பக்தன் மோக்ஷமென்னும் பயனைப்பெறுகின்றான். (65)

**क्रीडार्थं सृजसि प्रपञ्चमखिलं क्रीडामृगास्ते जना**
**यत्कर्माचरितं मया च भवतः प्रीत्यै भवत्येव तत् ।**
**शम्भो स्वस्य कुतूहलस्य करणं मच्चेष्टितं निश्चितं**
**तस्मान्मामकरक्षणं पशुपते कर्तव्यमेव त्वया ॥ ६६ ॥**

க்ரீடார்த்தம் ஸ்ருஜஸி ப்ரபஞ்சமகிலம்
க்ரீடா ம்ருகாஸ்தே ஜநா
யத்கர்மா:சரிதம் மயா ச பவத: ப்ரீத்யை பவத்யேவ தத்
ஶம்போ ஸ்வஸ்ய குதூஹலஸ்ய கரணம்
மச்சேஷ்டிதம் நிச்சிதம்
தஸ்மான் மாமக ரக்ஷணம் பஶுபதே கர்தவ்யமேவ
த்வயா|

**शम्भो**–மோக்ஷஸுகத்தையளிக்கக்கூடியவரே, **पशुपते**-அக்ஞானிகளையும் காப்பாற்றுகிற ஈச, **अखिलं-प्रपञ्चं**–உலகம் பூராவையும், **क्रीडार्थं सृजसि**-விளையாட்டிற்காகப் படைக்கிறீர். **ते**–உமக்கு, **जनाः**–ஜனங்கள், **क्रीडामृगाः**–விளையாட்டு மிருகங்கள், **मया च**–என்னாலும், **यत्कर्म**–எந்தக்காரியம், **आचरितं**-செய்யப்பட்டதோ, **तत्**–அது, **भवतः**-உம்முடைய, **प्रीत्यै एव भवति**-பிரீதிக்காகவே ஆகிறது. **मच्चेष्टितं**–என் செய்கை, **स्वस्य कुतूहलस्य करणं**–உன் ஸந்தோஷத்திற்குக் காரணம் (என்பது), **निश्चितं**–தீர்மானம், **तस्मात्**–ஆகையால் **त्वया**–உம்மால், **मामकरक्षणं कर्तव्यमेव**–என்னைக் காப்பாற்றுவது செய்யத்தகுந்ததே.

சம்பூ, நீயே உலகை விளையாட்டாகப் படைக்கின்றாய். அதிலுள்ள மக்கள் உன் விளையாட்டு பொம்மைகள் நான் எதைச் செய்தாலும் அது உனது ஆனந்தத்திற்காகத்தான். நான் செய்பவையெல்லாம் உன் ஆனந்தத்திற்காக என்பது உறுதி. ஆத்மாக்களின் தலைவ, எனது பாதுகாப்பு உந்தன் பொறுப்பாகின்றது.

இறைவன் விளையாட்டாக உலகைப்படைக்கின்றான். சிருஷ்டியை விளையாட்டென்பதினால் முயற்சியின்றி ஆவது என்பது பொருள். குயவன் பானை வனைவதைப்போலும், பால் தயிராக மாறுவது போலுமன்று சிருஷ்டி முயற்சியற்றதென்றால் அது மாற்றம், (விவர்த்தம்) என்பதாகின்றது. இறைவனுக்கு உலகைப்படைப்பதில் சுயநலம் ஒன்றுமில்லை. அவருக்கு அதனால் இலாபமடையும் நோக்கமில்லை. "இறைவனுக்கு சாதிக்கப்பட வேண்டுவதுமில்லை. அவரால் சாதிக்கப்பட வேண்டுவதும் ஒன்றுமில்லை", (நானவாப்தம், அவாப்தவ்யம்-கீதை 3–22)

பிரம்ம சூத்ரம் (2–1 33) "லோகவத்து லீலா கைவல்யம்" பிரம்மனின் சிருஷ்டி யென்பது வெறும் விளையாட்டு. மண்ணுலகில் விளையாட்டு உள்ளதைப்போல. இந்த சூத்திரத்திற்கு விளக்கம் கொடுக்கும்பொழுது ஆதிசங்கரர், 'மன்னர்களும் அமைச்சர்களும் எதற்கும் சம்பந்தமில்லாமல் பேசுவதைப்போன்றது' என்கிறார். சிருஷ்டி வேலை இயற்கையாக மூச்சுவாங்குவது விடுவதைப் போன்று முயற்சியற்றது. அவைகளுக்கு பயனுமில்லை. மனிதன் விளையாட்டுக்களிலாவது இரகசியமான உள்நோக்கம் அமையலாம். இறைவனின் சிருஷ்டிப்பணியில் அதுவும் காணுவதற்கில்லை. சிருஷ்டியைப்பற்றி கூறும் வேதங்கள், மாயை, பெயர்–உரு, உலகம் என்ற பகுதியில் அமைவதையும் நாம் நினைப்பில் வைத்துக்கொள்ளவேண்டும்.

படைப்பு இறைவன் திருவிளையாட்டானால் அதிலுள்ளவர் பொம்மைகளாக வேண்டும். அவர்கள் செய்வதெல்லாம் அ திருவுள்ளப்படியாகவேண்டும். பக்தன் இதை அறிந்து, செயலை யெல்லாம் இறைவனுக்கு அர்ப்பணம் செய்கின்ற நான் செய்வது எதுவானாலும் ஓ சம்பூ, அது உனக்கே அர்ப்ப ஆகட்டும்.

बहुविधपरितोषबाष्पपूरस्फुटपुलकाङ्कितचारुभोगभूमिम् ।
चिरपदफलकाङ्क्षिसेव्यमानां परमसदाशिवभावनां प्रपद्ये ॥

ப்ஹுவித பரிதோஷ பாஷ்பபூர ஸ்புட புளகாங்கித
சாரு போக பூமிம் ।
சிரபத பல காங்க்ஷி ஸேவ்யமாநாம் பரம ஸதாசிவ
பாவநாம் ப்ரபத்யே ॥

**बहुविधपरितोषबाष्पपूरस्फुटपुलकाङ्कितचारुभोगभूमिं**-பலவித மான ஆனந்தபாஷ்பப் பெருக்குக்கும், தெளிவான மயிர்க் கூச்சலுக்கும் அனுபவ ஸ்தானமாயும், **चिरपदफलकाङ्क्षिसेव्यमानां**-சாச்வதமான ஸ்தானத்தை அபேக்ஷிக்கிறவர்களா ஸேவிக்கக்கூடியதாயுமிருக்கிற, **परमसदाशिवभावनां**-உயர்ந் ஈசுவர த்யானத்தை, **प्रपद्ये**-சரணம் அடைகிறேன்.

*நிலையான வாழ்வு என்னும் பலனை நாடுகின்றவர்களா அலங்கரிக்கப்பட்டு சுகபோகத்திற்கு அழகாக அமையும் நாட்டில் ஆனந்தக்கண்ணீரும், மெய்சிலிர்ப்பும் அமைகின்றன. அ நாடாகும் பரம சதாசிவன் தியானத்தில் புக நான் அவனை சரண் வேண்டுகின்றேன்.*

*சிவத்தியானம் விளைவுள்ள வளம் மிக்க நாடாகச் சொல்ல படுகின்றது. அந்த வயலிலிருந்து மோக்ஷமாகும் விடுதலை பெற படுகின்றது.* (67

अमितमुदमृतं मुहुर्दुहन्तीं विमलभवत्पदगोष्ठमावसन्तीम् ।
सदय पशुपते सुपुण्यपाकां मम परिपालय भक्तिधेनुमेकाम् ॥

அமிதமுதம்ருதம் முஹுர் துஹந்தீம் விமலபவத்பத
கோஷ்டமாவஸந்தீம்
ஸதய பசுபதே ஸுபுண்ய பாகாம் மம பரிபாலய
பக்தி தேனுமேகாம் ।

**सदय**-தயவுடன் கூடியவரே, **पशुपते**-விருஷபத்திற் நாத, **अमितमुदमृतं** - எல்லையில்லாத பிரம்மாநந்தமாகி பாலை, **मुहुः**-அடிக்கடி, **दुहन्तीं**-கறக்கிறதாயும், **विमलभवत्पदगोष्ठमावसन्तीं**-சுத்தமான உம்முடைய பாதங்களாகிற தொழு வத்தில் வஸிக்கிறதாயும், **सुपुण्यपाकां**-புண்யத்தின் பலனு மான, **मम भक्तिधेनुमेकां**-என்னுடைய பக்தியாகிற ஒ பசுவை மாத்திரம், **परिपालय**-காப்பாற்றும்.

ஆத்மாக்களின் இறைவ! கருணையாகும் ஒருவனே! நல்வினையின் பயனாகும் பக்தியென்னும் பசுவைக் காப்பாற்றுவாயாக, அது வேண்டும்பொழுதும் அளவில் பால் கொடுக்கின்றது. அது உனது திருவடி யென்னும் குற்றமற்ற மாட்டுக்கொட்டத்தில் உள்ளது.

இங்கு பக்தி ஒரு பழுதற்ற பசுவாக சித்தரிக்கப்பட்டுள்ளது. அது இறைவனின் பாதுகாப்பிற்குத் தகுதியானது என்று சொல்லப்படுகின்றது. குறைவற்றுக்கொடுக்கும் காமதேனுவைப் போன்றமைவது பக்தி. இறைவனடிகளிலேயே அது தங்குகின்றது. (68)

**जडता पशुता कलङ्किता कुटिलचरत्वं च नास्ति मयि देव ।**
**अस्ति यदि राजमौले भवदाभरणस्य नास्मि किं पात्रम् ॥**

ஜடதா பஶுதா களங்கிதா குடிலசரத்வம் ச நாஸ்தி
மயி தேவ ।
அஸ்தி யதி ராஜமௌளே பவதாபரணஸ்ய நாஸ்மி
கிம் பாத்ரம் ॥

**जडता**–மூடத்தனம் (ஜலமாயிருக்குந்தன்மை), **पशुता**–விவேகமில்லாமை, **कलङ्किता**–களங்கத்துடனிருப்பது (தோஷத்தோடு கூடியிருப்பது) **कुटिलचरत्वं च**–வக்ரமாக ஸஞ்சரிப்பது (நேர்மையற்றிருப்பது) (இவை), **मयि नास्ति**–என்னிடமில்லை. **देव**–பிரகாசமானவரே, **राजमौले**–சந்திரனை சிரஸ்ஸில் அணிந்த ஈச்வரா, **अस्ति यदि**–இருக்கிறதானல் **भवदाभरणस्य**-உன் ஆபரணத்திற்கு, **पात्रं नास्मि किं**-பாத்திரமாக மாட்டேனு?

இறைவ, சோம்பல், வெறி, அசுத்தம், தீயவழி செல்லும் வக்கரம் (தீயபோக்கு) இவைகள் என்னிடமில்லை. அவைகள் இருந்தாலும், சந்திரசூட, நானும் உன் அணியாகத்தொண்டாற்ற தகுதியுள்ளவனில்லையா?

பக்தன் தான் இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படத் தகுதியுள்ளவன் என்று சொல்லுகின்றான். அவன் பக்தனயிருப்பதுவே அவன் குற்றமற்றிருப்பதற்குச்சான்று. பக்தனுக்கு, அறிவு,

இரக்கம், தூய்மை, நேர்மை முதலியவைகள் உண்டு. இவைகளை அவன் பெற்றிருக்காவிட்டாலும், எதிரான குற்றங்களையே பெற்றிருந்தாலும், சிவனுக்கு அவனை மறுக்க நியாயமில்லை. ஏனெனில் மனிதனுமல்லாத அசுத்தமான தோல்களையும், மாலையும், எருதையும், பிறையையும், பாம்புகளையும் அவர் ஏற்றுக்கொண்டிருக்கின்றார்.

பிறைச்சந்திரனுக்கு இப்பல குற்றங்களும் உண்டு என்று கொள்ளலாம். அதையே சிவபெருமான் தலையணியாக அணிந்து கொண்டிருக்கின்றார். பக்தன் தன்னையும் ஏற்றுக்கொள்ள ஏன் வேண்டக்கூடாது? உண்மையிலேயே பக்தனிடம் பிறையின் குறைபாடும் இல்லை.

சிவன் பிறையை தலையணியாக ஏற்றுக்கொண்ட விவரம் பல வகையாக உள்ளது. ஒன்று: தக்ஷன் படைப்பு வேலையில் தலைமையானவன், பாரபக்ஷமின்றி நடத்தவேண்டுமென்ற நிபந்தனையுடன் சந்திரனுக்கு தன் பெண்களையெல்லாம் மணம் செய்வித்தான். ஆயின் சந்திரன் ரோஹிணியிடம் அதிக அன்பு காட்டினன். மற்றப்பெண்கள் பிணங்கிக்கொண்டு தகப்பனாரிடம் முறையிட்டார்கள். தக்ஷன் கடுங்கோபமடைந்து சந்திரன் தினம் ஒன்றாகத் தன் கலைகளை இழந்து நிற்கவேண்டுமென்று சபித்தான். சந்திரன் சிவனைச் சரண்புகுந்தான். சிவபெருமான் அதை ஏற்றுக்கொண்டு தலையில் அணிந்துகொண்டார். இறைவனருளால் சந்திரன் தினம் ஒன்றாகத் தன் கலைகளைப்பெறலானான். இறைவன் தக்ஷனின் சாபம் நிற்கவேண்டுமென்று கொண்டார். அவர் கலைகள் தேயவும் வளரவும் அருள் செய்தார்.

மற்றொரு கதைப்படி சந்திரன் தன் ஆசிரியரின் மனைவியை காதலித்ததினால் அந்த சாபம் வந்ததாம். (69)

अरहसि रहसि स्वतन्त्रबुद्ध्या वरिवसितुं सुलभः प्रसन्नमूर्तिः।
अगणितफलदायकः प्रभुर्मे जगदधिको हृदि राजशेखरोऽस्ति॥

அரஹஸி ரஹஸி ஸ்வதந்த்ர புத்த்யா வரிவஸிதும்
ஸுலப: ப்ரஸன்ன மூர்த்தி:
அகணித பலதாயக: ப்ரபுர் மே ஜகததிகோ ஹ்ருதி
ராஜசேகரோऽஸ்தி

**प्रसन्नमूर्तिः**-அனுக்ரஹம் செய்யக்கூடிய ரூபத்தையுடையவரும், **अगणितफलदायकः**-எல்லையில்லாத பலனைக்கொடுப்பவரும், **प्रभुः**-முத்தொழில்களிலும் சக்தராயும், **जगदधिकः**-உலகத்தைக் காட்டிலும் மேலானவருமான, **राजशेखरः**-சந்திரனை சிரஸில் உடைய ஈசன் (சக்ரவர்த்தி), **मे हृदि अस्ति** என் மனதில் இருக்கிறார். (ஆனதால்) **अरहसि**-வெளியிலும், **रहसि**-மனதிற்குள்ளேயும், **स्वतन्त्रबुद्ध्या** - தன்னுடையதென்ற புத்தியால், **वरिवसितुं सुलभः**-ஸேவிப்பதற்கு ஸுலபமாக இருக்கிறார்.

*வெளிப்படையாகவும் இரகசியமாகவும், அவருடன் சுதந்திர மனதுடன் வாழ்வது சுலபமானது. அவன் உரு கம்பீரமானது, அவர் அளவற்ற பயனைக்கொடுக்கவல்லவர். உலகினும் உயர்ந்தவர், இதயத்தில் வசிக்கும் அந்தப் பிறையணிந்த ஒருவர்.*

*இறைவன் எல்லையற்றும் எங்கும் உள்ளவர். அவர் உலகத்தினும் உயர்ந்தவர் (ஜகததிகர்) ஆயின் இதயத்துள்ளும் வசிப்பவர். அவருடன் வசிப்பது எளிதானதாகவேண்டும். ஆயின் அவனருளை உணர ஆரம்பிக்காதவர்களுக்கு அது மிகவும் கடினமானதாகவேண்டும். அவரே கருணை. அவரே மோக்ஷத்தைக் கொடுப்பவர்.*

*அரஹஸி 'புறத்துலகில்' ரஹஸி 'உள்ளுள்ள இதயத்தில்.' ஜகததிக என்பதற்கு ஜகததிப என்ற பாடபேதமும் உண்டு. (70)*

**आरूढभक्तिगुणकुञ्चितभावचाप-**
**युक्तैः शिवस्मरणबाणगणैरमोघैः ।**
**निर्जित्य किल्बिषरिपून्विजयी सुधीन्द्रः**
**सानन्दमावहति सुस्थिरराजलक्ष्मीम् ॥ ७१ ॥**

ஆரூட பக்தி குண குஞ்சித பாவ சாப
யுக்தை: ஶிவ ஸ்மரண பாண கணைரமோகை: I
நிர்ஜித்ய கில்பிஷரிபூன் விஜயீ ஸுதீந்த்ர:
ஸாநந்தமாவஹதி ஸுஸ்திர ராஜலக்ஷ்மீம் II

**सुधीन्द्रः**-சிறந்த புத்திமான், **आरूढभक्तिगुणकुञ्चितभावचापयुक्तैः**-உண்டாயிருக்கிற பக்தியாகிற நாண் கயிறால்

வளைக்கப்பட்ட புத்தியாகிய வில்லில் தொடுக்கப்பட்ட **अमोघैः**-வீணுகாத, **शिवस्मरणबाणगणैः**-சிவ ஸ்மரணமாகிற அம்புக்கூட்டங்களால், **किल्बिषरिपून्**-பாபமாகிற சத்ருக்களை **निर्जित्य**-ஜயித்து, **विजयी**-ஜயத்துடன் கூடியவனுக, **सानन्दं**-ஆநந்தத்துடன், **सुस्थिरराजलक्ष्मीं**-ஸ்திரமானபிரம்மாதி தேவர்களுக்கு அதிபரான ஈச்வரனின் ஸாரூப்யமுக்தியை (ஸ்திரமான ராஜ்யத்தை), **आवहति**-அடைகிருன்.

*சிவ சிந்தனை யென்னும் பிழையாத அம்புகளை பக்தி யென்னும் நாணுல் கட்டப்பட்ட தியானமென்னும் வில்லில் அமைத்து ஊக்கிஞல் நல்ல மனதுடையவர், பகைவராகும் பாபங் களை வென்று நிலைத்த ஆனந்தத்தைப்பெறலாம்.*

*பக்தன் கைதேர்ந்த வேடனுக்கு உவமிக்கப்படுகின்ருன். ஒரு அரசன் பிறநாட்டைக் கைப்பற்ற, நேரிடையாகப் பகைவர் களுடன் சண்டை பிடிக்கவேண்டும். அப்படி செய்ய வலுவான வில்லும் கைத்திறனும் பெற்றிருக்கவேண்டும். பாபத்துடன் எழும் ஆத்மீகப் போரில் தியானம் வில்லாகவும் அம்பு சிவ சிந்தனை யாகவும், அமைகின்றன. பக்தன் இந்த ஆயுதத்தைத் திறமை யுடனும் நிச்சயமாகவும் கையாளவேண்டும். அவன் அஞ்ஞானத்தை வென்று பரம இலட்சியமாகும் மோக்ஷத்தை அடைகின்ருன்.* (71)

**ध्यानाञ्जनेन समवेक्ष्य तमःप्रदेशं**
**भित्त्वा महाबलिभिरीश्वरनाममन्त्रैः ।**
**दिव्याश्रितं भुजगभूषणमुद्वहन्ति**
**ये पादपद्ममिह ते शिव ते कृतार्थाः ॥ ७२ ॥**

த்யானுஞ்ஜநேந ஸமவேக்ஷ்ய தம: ப்ரதேஶம்
பித்வா மஹாபலிபிரீச்வர நாம மந்த்ரை: ।
திவ்யாச்ரிதம் புஜக பூஷண முத்வஹந்தி
யே பாத பத்மமிஹ தே ஶிவ தே க்ருதார்த்தா: ॥

**शिव**-ஈச்வர, **ध्यानाञ्जनेन**-தியானமாகிற கண்மையால், **समवेक्ष्य**-நன்கு பார்த்து, **महाबलिभिः**-அதிக ஸாமர்த்திய முடைய, **ईश्वरनाममन्त्रैः**-ஈசுவரனின் நாம மந்திரங்களால்

**तमःप्रदेशं**-இருளாயிருக்கிற இடத்தை, **भित्त्वा**-பிளந்து, **दिव्याश्रितं**-தேவதைகளால் ஆச்ரயிக்கப்பட்டதும், **भुजगभूषणं**-ஸர்ப்பங்களை ஆபரணமாயுடையதுமான, **ते पादपद्मं**-உம்முடைய திருவடித்தாமரையை, **इह**-இந்த ஜன்மாவில், **ये**-எவர்கள், **उद्वहन्ति**-உபாஸிக்கிறார்களோ **ते कृतार्थाः**-அவர்கள் பலனையடைந்தவர்கள்.

சிவனே, எவர் தேவர்களும் சரணடைகின்ற நின் திருவடிகளை -சர்ப்பங்களை அணிந்த – சேருகின்றார்களோ, தியானமென்னும் கண்மையால் உன் திருவுருவைக் காணுகின்றார்களோ, இறைவன் திருநாமம் சாற்றி அவிசொரிந்து, காரிருளைக் கடந்து போகின்றார்களோ, அவர்களே வாழ்வின் பெரும் பயனைப்பெற்றவர்கள்.

புதையலை நாடுபவர்கள் அது கண்ணிற்குப் புலனாக மந்திரித்த கண் இமையை ட்டுக்கொண்டு அதைத்தேடுகின்றார்கள், அப்பொழுதே அவன் சரியான இடத்தைத் தோண்டமுடியும். பிறகு புதையலைக்காக்கும் தெய்வங்களுக்கு பூசை செய்து தான் வேண்டும் புதையலை அடைகின்றான்.

இங்கு பெறப்படவேண்டும் பொருள் இறைவன் திருவடிகள். கண்மை தியானம், தோண்டப்படவுள்ள கடும் மண் அஞ்ஞானம், அவிசுகள் சிவநாமங்கள். (72)

भूदारतामुदवहद्यदपेक्षया श्री-
भूदार एव किमतः सुमते लभस्व ।
केदारमाकलितमुक्तिमहौषधीनां
पादारविन्दभजनं परमेश्वरस्य ॥ ७३ ॥

பூதாரதாமுதவஹத் யதபேக்ஷயா ஸ்ரீ
பூதார ஏவ கிமத: ஸுமதே லபஸ்வ ।
கேதாரமாகலித முக்தி மஹௌஷதீநாம்
பாதாரவிந்த பஜனம் பரமேச்வரஸ்ய ॥

**सुमते**-ஓ நல்ல புத்தியே, **यदपेक्षया**-எவருடைய பாதாரவிந்தத்தைப் பார்ப்பதின் பொருட்டு, **श्रीभूदार एव**-லக்ஷ்மீ பூமிதேவிகளுக்கு பர்த்தாவான விஷ்ணுவே, **भूदारतां**-

வராஹாவதாரத்தை, **उद्वहत्** **किम्**-வகித்தாரல்லவா! **अतः** ஆகையினால், **आकलितमुक्तिमहौषधीनां**-விருப்பப்பட்ட மோக்ஷமாகிய ஒஷதிகளுக்கு, **केदारं**-உற்பத்தி ஸ்தானமான **परमेश्वरस्य**-பரமேச்வரனுடைய, **पादारविन्दभजनं लभस्व**-பாதாரவிந்தத்தையடைவாய்.

*ஓ நல்லமனதே! இலக்குமி, பூதேவி இவர்களின் கணவனும் விஷ்ணுவே ஒரு பன்றியின் உருவை எடுத்துக்கொண்டு தேடிய திருவடிகளை, எல்லோராலும் வேண்டப்படுகின்ற விடுதலை யென்னும் மருந்துச்செடியை (மூலிகையை) வளர்க்கும் நிலமாகும் சிவனடிகளை வணங்க முயல்வாயாக ஒருவன் வேறெதைச் செய்வது ?*

*இங்கும் விவசாயத்தொழிலுவமை கொடுக்கப்படுகின்றது. இறைவன் திருவடிகள் வளமிக்க வயல்கள்; அவைகளிலே மோக்ஷத்தின் மூலிகை வளர்கின்றது.*

*இறைவனடிகளைப் புகழும்பொழுது, விஷ்ணு சிவனடிகளை அடையச் செய்த முயற்சி வீணனது குறிப்பிடப்படுகின்றது.* (73)

आशापाशक्लेशदुर्वासनादि-
भेदोद्युक्तैर्दिव्यगन्धैरमन्दैः ।
आशाशाटीकस्य पादारविन्दं
चेतःपेटीं वासितां मे तनोतु ॥ ७४ ॥

*ஆஶா பாஶ க்லேஶ துர்வாஸனாதி*
*பேதோத்யுக்தைர் திவ்ய கந்தைரமந்தை:* ।
*ஆஶா ஶாடீகஸ்ய பாதாரவிந்தம்*
*சேத: பேடீம் வாஸிதாம் மே தநோது* ॥

**आशाशाटीकस्य**-திக்குகளை வஸ்திரமாக உடைய ஈச்வரனின், **पादारविन्दं**-திருவடியானது, **आशापाशक्लेशदुर्वासनादिभेदोद्युक्तैः**-கயிற்றுக்கொப்பான ஆசை, ஐந்து விதமான கிலேசங்கள், கெட்டபழக்கம் முதலியவைகளை நாசம் செய்வதில் அக்கரையுள்ள, **अमन्दैः**-அதிகமான, **दिव्यगन्धैः**-

உயர்ந்த வாஸனைகளால், **मे चेतःपेटीं**—என் மனமாகிற பெட்டியை, **वासितां तनोतु**—நல்ல மணமுடையதாகச் செய்யட்டும்.

*ஆசை, மயக்கம், க்ரோதம் என்ற நாற்றங்களை அகற்றும் இனிய தெய்வீக வாசனைகளை, சீலங்களையே திசையாகக் கொள்ளும் சிவபெருமானது திருவடிகள் எனது இதயத்தில் நிறைவிக்கட்டும்.*

*இங்கு மனது ஒரு மூடிய பெட்டிக்கு உவமிக்கப்படுகிறது. அது மயக்கம், ஆசைகள், க்ரோதம் முதலிய நாற்றங்கள் நிறைந்துள்ளது. இறைவன் அதைத்திறந்து அதில் நல்ல மணங்களைப் புகுத்த வேண்டப்படுகிறார்.* (74)

कल्याणिनं सरसचित्रगतिं सवेगं
सर्वेङ्गितज्ञमनघं ध्रुवलक्षणाढ्यम् ।
चेतस्तुरङ्गमधिरुह्य चर स्मरारे
नेतः समस्तजगतां वृषभाधिरूढ ॥ ७५ ॥

கல்யாணினம் ஸரஸ சித்ர கதிம் ஸவேகம்
ஸர்வேங்கிதக்ஞமநகம் த்ருவ லக்ஷணாட்யம் I
சேதஸ்துரங்கமதிருஹ்ய சர ஸ்மராரே
நேத: ஸமஸ்த ஜகதாம் வ்ருஷபாதிரூட II

**वृषभाधिरूढ**—விருஷபாரூடரே, **स्मरारे**-மன்மதனை எரித்தவரே, **समस्तजगतां नेतः**—எல்லா உலகங்களுக்கும் நாயக, **कल्याणिनं**—மங்களகரமாயும் (கல்யாண லக்ஷணங்களுடன் கூடியதும்) **सरसचित्रगतिं**—இனிமையான நாநாவித கதி விசேஷங்களுடன் கூடியதும், **सवेगं**—வேகத்துடன் கூடியதும், **सर्वेङ्गितज्ञं**—எல்லா விதமான அபிப்ராயங்களையும் அறிந்துகொள்கிறதும், **अनघं**—தோஷமற்றதும், **ध्रुवलक्षणाढ्यं**-சுழி முதலான ஸ்திரமான லக்ஷணங்களுடையதும் (ஈசனிடம் நிலைத்திருப்பது என்ற லக்ஷணமுள்ளதுமான) **चेतस्तुरङ्गं**—என் மனமாகிய குதிரையில், **अधिरुह्य**—ஏறி, **चर**—ஸஞ்சாரம் செய்யுங்கள்.

காமத்தை அழிப்பவனே! உலகங்களுக்கெல்லாம் தலைவ! எருதில் ஏறுபவனே! மங்களகரமானதும், வேகமாகச் செல்லக் கூடியதும், அழகான பலவித நடைகளுடன் கூடியதும் குறிகளை எல்லாம் அறிவதும், எவ்வகை பழுதற்றதும் நிலையான குணங்கள் பெற்றதுமான எனது மனமென்னும் குதிரைமீது செல்வாயாக!

சிவனே உலகங்களுக்கெல்லாம் மாபெருந்தலைவன். அவனே காமத்தை அழிக்க வலல பெருந்தலைவன். புராணங்கள், மன்மதன் சிவனால் எரிக்கபபட்டதாகச் சொல்கின்றன. சிவன் வேண்டப்படும் இடங்களுக்குச் செல்லவேண்டியவர். அவர் ஆன்மாக்களைக் கரையேற்றவல்லவர். அவர் எருதேறி இதை எப்படிச்செய்வது? அது மெதுவாகச் செல்வதன்றோ? அவர் பணியில் வேகமாகச் செல்லும் குதிரையாகும் தன் மனதை அமர்த்துகின்றான் அதில் அவர் சவாரி செய்து அதைத் தன் பணிக்கு ஏவட்டும்.

சிவபெருமான் காமனை (மன்மதனை) அழித்த விருத்தாந்தம் இது: தக்ஷன் ஒருயாகம் செய்து, அதறகு தன் மருகனாகும் சிவ பெருமானை அழைக்கவில்லை. தாக்ஷாயணி – சிவபெருமானின் துணைவி–அழைபபில்லாமல் அங்கு சென்று அவமதிக்கப்பட்டாள் அதை சகிக்காது தாக்ஷாயணி யாக நெருப்பில் பாய்ந்து தற்கொலை செய்துகொண்டாள். இதை அறிந்த சிவபெருமான் அந்த யாகத்தை அழிக்கச்செய்தார். தாக்ஷாயணியே பார்வதி யாகப் (ஹிமவானின் புதல்வியாகப்) பிறந்தாள். மீண்டும் தன் தலைவனையடைய அவள் அருந்தவம் மேற்கொண்டாள். ஆனால் சிவபெருமானோ தியானத்தில் அமர்ந்து தன்னை மறந்திருந்தார். தாரகாசுரனால் தொல்லைபட்ட தேவர்கள், சிவபெருமானின் திருக் குமாரனாலேயே அவன் அழிக்கப்படுவானென்றுகொண்டு காம தேவனை பார்வதியினிடம் சிவனுக்கு ஆர்வமுண்டாக்க அனுப்பினார்கள். மன்மதன் சிவனது தியானத்தைக்குலைக்க, சிவபெருமான் தனது நெற்றியிலுள்ள மூன்றாவது கண்ணைத் திறந்து மன்மதனைப் பார்த்து எரித்துவிட்டார், அதனின்று சிவனுக்கு காமாரி, ஸ்மராரி என்ற பெயர்கள் ஏற்பட்டன. (75)

भक्तिर्महेशपदपुष्करमावसन्ती

कादम्बिनीव कुरुते परितोषवर्षम् ।

**संपूरितो भवति यस्य मनस्तटाक-**
**स्तज्जन्मसस्यमखिलं सफलं च नान्यत् ॥ ७६ ॥**

*பக்திர் மஹேஶ பத புஷ்கரமாவஸந்தீ*
*காதம்பினீவ குருதே பரிதோஷ வர்ஷம் ।*
*ஸம்பூரிதோ பவதி யஸ்ய மநஸ்தடாக ஸ்தஜ்ஜன்ம*
*ஸஸ்யமகிலம் ஸபலம் ச நாந்யத் ॥*

**भक्तिः**-பக்தியானது, **महेशपदपुष्करमावसन्ती** – ஈச்வரன் பாதங்களாகிற ஆகாயத்திலிருந்து கொண்டு, **कादम्बिनीव**– மேகவரிசைபோல், **परितोषवर्षं**–ஆனந்தப் பெருக்கை, **कुरुते**– செய்கிறது (உண்டு பண்ணுகிறது). **यस्य**–எவனுடைய, **मनस्तटाकः**-மனமாகிற குளம், **संपूरितो भवति**-நிரம்பப் படுகிறதோ, **अखिलं**–ஸமஸ்தமான, **तज्जन्मसस्यं**–அவன் ஜன்மாவாகிற பயிர், **सफलं**–பயனுடன் கூடியது. **अन्यत्**– மற்றது, **नच**–பயனில்லை.

பரம்பொருளாகும் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் பக்தியென்னும் மேகமானது ஆனந்த மழையைப் பொழிகின்றது. எவன் மனது இந்த ஆனந்த வெள்ளத்தால் நிறைந்துவிடுகின்றதோ அவன் முழுதாய வாழ்வின் பயனை அடைகின்றான். மற்றவர்கள் அல்ல.

இங்கும் உழவுத்தொழில் உவமிக்கப்படுகின்றது. ஈசுவர பக்தி நிறைந்த மனதே இறுதிப்பயனை (மோக்ஷத்தை) அடைகின்றது. (76)

**बुद्धिः स्थिरा भवितुमीश्वर पादपद्म-**
**सक्ता वधूर्विरहिणीव सदा स्मरन्ती ।**
**सद्भावनास्मरणदर्शनकीर्तनादि**
**संमोहितेव शिवमन्त्रजपेन विन्त्ते ॥ ७७ ॥**

*புத்தி: ஸ்த்திரா பவிதுமீச்வர பாத பத்ம*
*ஸக்தா வதூர்விரஹிணீவ ஸதா ஸ்மரந்தீ ।*
*ஸத்பாவநா ஸ்மரண தர்ஶன கீர்த்தநாதி*
*ஸம்மோஹிதேவ ஶிவ மந்த்ர ஜபேந விந்தே ॥*

**ईश्वर**–செய்வது, செய்யாமலிருப்பது, வேறு விதமாகச் செய்வது, இவைகளில் ஸாமர்த்தியமுள்ள ஈச்வர, **विरहिणी वधूरिव**–கணவனைப் பிரிந்த ஸ்திரீபோல, **पादपद्मसक्ता**–உம்முடைய பாதாரவிந்தத்தில் ஈடுபட்டு, **सदा स्मरन्ती**–எப்பொழுதும் ஸ்மரித்துக் கொண்டிருக்கிற, **बुद्धिः**–மனமானது, **शिवमन्त्रजपेन**–சிவ என்ற மந்திரஜபத்திஞல், **संमोहितेव**–மோஹத்தை அடைந்தது போல, **स्थिरा भवितुं**–நிலையாயிருப்பதற்கு, **सद्भावनास्मरणदर्शनकीर्तनादि**-நிலையாக உள்ள பாதாரவிந்தத்தின் தியானம், ஸ்மரிப்பது, பார்ப்பது, நாமாவை உச்சரிப்பது இவைகளைப்பற்றி **विन्ते**–விசாரிக்கிறது.

*இறைவ! கணவனைப்பிரிந்து நிற்கும் பெண்ணைப்போல இறைவனடிகளைப்பற்றி நிற்கும் மனது சதா அவனையே நினைக்கின்றது. சிவ மந்திரத்தை அடிக்கடி ஜபிப்பதால் அது தன்னை நல்ல சிந்தனைகள், நினைவு, பார்வை, பாடுதல் இவைகளில் ஈடுபடுத்திக்கொள்கின்றது.*

*பக்தனின் மனது கணவனைப் பிரிந்துள்ள மனைவியுடன் உவமிக்கப்படுகின்றது. மனது இறைவனைவிட்டுப் பிரிந்திருப்பதைப் பொறுப்பதில்லை. அதில் பிற சிந்தனைகளுக்கு இடமில்லை. சதா சிவனையே சிந்திக்கின்றது நோக்கு, பேச்சு நினைவு எல்லாம் சிவனைப் பற்றிக்கொள்ளவே செய்கின்றன.* (77)

**सदुपचारविधिष्वनुबोधितां**
**सविनयां सुहृदं सदुपाश्रिताम् ।**
**मम समुद्धर बुद्धिमिमां प्रभो**
**वरगुणेन नवोढवधूमिव ॥ ७८ ॥**

**ஸதுபசார விதிஷ்வநுபோதிதாம்**
**ஸவிநயாம் ஸுஹ்ருதம் ஸதுபாச்ரிதாம் ।**
**மம ஸமுத்தர புத்திமிமாம் ப்ரபோ**
**வரகுணேன நவோடவதூமிவ ॥**

**प्रभो**-ஸர்வசக்தியோடு கூடிய ஈச, **सदुपचारविधिषु**-ஸாதுவான உம்முடைய திருவடிகளின் உபசரணை விஷயத்தில், **अनुबोधितां**-சிக்ஷிக்கப்பட்டதாயும், **सविनयां**-வணக்கத்துடன் கூடியதாயும், **सुहृदं**-நல்ல மனமுள்ளதும், **सदुपाश्रितां**-நல்லோர்களை அண்டியதுமான, **मम इमां बुद्धिं**-என்னுடைய இந்தபுத்தியை, **वरगुणेन**-சிறந்த குணோபதேசத்தினால், **नवोढवधूमिव**-புதிதாக விவாஹமான ஸ்திரீயைப் போல், **समुद्धर**-சீராகச்செய்யுங்கள்.

நற்சேவையில் பயிற்றப்பட்டதும், பணிவுபெற்றதும், நல்ல சிந்தனைபெற்று அதையே இறுதியாகக்கொள்வதாகும் எனது அறிவை, இறைவ, உயர்த்துவாயாக. மணைபுகும் மணமகளுக்கு சிறப்புச்செய்வதைப்போல இதற்கும் சிறப்புச் செய்வாயாக

சென்ற பாட்டில் கொடுக்கப்பட்ட மணப்பெண் உவமையே இங்கும் கொடுக்கப்படுகின்றது. சிறப்புகள் பெற்ற மணப்பெண் அறிவு. அதற்கு இறைவனின் மணமகளாவதற்காகும் தகுதிகளெல்லாம் உள்ளன. அவன் வந்து இப்பெண்ணைக் கைப்பற்றுவானாக! (78)

नित्यं योगिमनःसरोजदलसंचारक्षमस्त्वत्क्रमः
शंभो तेन कथं कठोरयमराड्वक्षःकवाटक्षतिः ।
अत्यन्तं मृदुलं त्वदङ्घ्रियुगलं हा मे मनश्चिन्तय-
त्येतल्लोचनगोचरं कुरु विभो हस्तेन संवाहये ॥ ७९ ॥

நித்யம் யோகி மநः ஸரோஜ தள ஸஞ்சார க்ஷமஸ்த்வத்க்ரமः
ஶம்போ தேந கதம் கடோர யமராட்வக்ஷः கவாட க்ஷதி: I
அத்யந்தம் ம்ருதுளம் த்வதங்க்ரி யுகளம் ஹா மே மநச்சிந்தயத்-
யேதல்லோசன கோசரம் குரு விபோ ஹஸ்தேன ஸம்வாஹயே II

**शम्भो**-ஈச்வரா, **त्वत्क्रमः**-உம்முடைய பாத வின்யாஸமானது, **नित्यं**-எப்பொழுதும், **योगिमनस्सरोजदलसंचारक्षमः**-யோகிகளின் தாமரையிதழ்போன்ற மனதில் ஸஞ்சரிப்

பதற்குத் தகுந்தது, **तेन**-அதனால், **कथं**-எப்படி, **कठोरयमराड्वक्षःकवाटक्षतिः**-கெட்டியான யமராஜனுடைய கதவுத் தாப்பாள் போன்ற மார்பினில் உதைப்பது? **हा**-கஷ்டம், **अत्यन्तं मृदुलं**-மிகவும் மெதுவான, **त्वदंघ्रियुगलं**-உமது இரு திருவடிகளை, **मे मनः चिन्तयति**-என் மனம் தியானம் செய்கிறது **विभो**-ஈச்வர, **एतत्**-இந்த உம்முடைய திருவடியை, **लोचनगोचरं कुरु**- (என்) கண்ணுக்குப் புலப்படும்படி செய். **हस्तेन संवाहये**-என் கையினால் பிடிக்கிறேன்.

*ஓ சம்பூ, யோகிகளின் மனத்தாமரைகளில் நடந்து பழகியவை உன் திருவடிகள்! அவை எப்படி யமனின் மார்பில் உதைத்தன? உனது திருவடி மெல்லியது. என் மனது கலங்குகின்றது. அவைகளை நான் பார்க்க அருள் செய்வாய். அவைகளை என் கைகளால் ஏற்றுக்கொள்கின்றேன்.*

*64வது சுலோகத்தில் சிவனது திருவடிகள் ஏற்கும் கடிய வேலைகள் குறிப்பிடப்பட்டன. யமனை உதைப்பது அவைகளில் ஒன்று. யமனது மார்பு ஒரு கடினமான கதவு. எதிரிடையாக யோகிகளின் மனது மெல்லியது. அவையே சிவபெருமானுக்கு உகந்தவை. அத்தகைய அடிகள் யமனை உதைக்கும்பொழுது நொந்திருக்குமன்றோ? பக்தன் இறைவனது புனித அடிகளை தடவிக்கொடுக்கத் தனக்குக் காட்டவேண்டுமென்கிறான்.* (79)

**एष्यत्येष जनिं मनोऽस्य कठिनं तस्मिन्नटानीति मद्रक्षायै गिरिसीम्नि कोमलपदन्यासः पुराभ्यासितः ।**
**नो चेद्दिव्यगृहान्तरेषु सुमनस्तल्पेषु वेद्यादिषु**
**प्रायः सत्सु शिलातलेषु नटनं शंभो किमर्थं तव ॥ ८० ॥**

ஏஷ்யத்யேஷ ஜனிம் மனோऽஸ்ய கடினம்
தஸ்மிந்நடானீதி மத்-
ரக்ஷாயை கிரிஸீம்னி கோமள பதந்யாஸ: புராऽப்யாஸித: ।
நோ சேத் திவ்ய க்ருஹாந்தரேஷு ஸுமனஸ்தல்பேஷு
வேத்யாதிஷு
ப்ராய: ஸத்ஸு ஶிலாதலேஷு நடனம் ஶம்போ
கிமர்த்தம் தவ ॥

**शम्भो**-ஸுகத்தையுண்டு பண்ணக்கூடிய பரமேச்வர, **एषः**-இவன், **जनिमेष्यति**-பிறப்பான், **अस्य मनः**-இவன் மனம் **कठिनं**-மிகவும் கெட்டியானது, **तस्मिन्नटानि**-அதில் நர்த்தனம் செய்வேன், **इति**-என்று, **मद्रक्षायै**-என்னைக்காப்பதின் பொருட்டு, **गिरिसीम्नि**-மலைபிரதேசத்தில், **कोमलपदन्यासः**-மெதுவான கால் ஸஞ்சாரம், **पुराऽभ्यासितः**-முன்னாலேயே அப்யாஸம் செய்யப்பட்டதா? **नोचेत्**-இல்லாவிடில் **दिव्यगृहान्तरेषु**-உயர்ந்த கிருஹங்களும், **सुमनस्तल्पेषु**-மலர்களால் செய்யப்பட்ட படுக்கைகளும், **वेद्यादिषु**-திண்ணை முதலியவைகளும், **प्रायस्सत्सु** - பெரும்பாலும் இருக்கும் பொழுது, **शिलातलेषु**-கல்பிரதேசங்களில், **तव**-உமக்கு, **नटनं किमर्थं**-நர்த்தனம் எதற்கு?

*இது பிறக்கவே போகின்றது; இதன் மனது கடினமானது. நான் இதில் நடனம் செய்யவேண்டும் என்று கொண்டு, இமயத்தின் கடும்பாறைகளில் நடந்து பயிற்சிகொண்டுள்ளாய், இல்லையேல் தெய்வீக வீடுகளும், மலர்ப்படுக்கைகளும், தாழ்வாரங்களும் வேண்டியவை இருக்க நீ ஏன் பாறைகளில் நடனஞ் செய்கின்றாய்?*

*முன் சுலோகத்தில் இறைவனது மெல்லிய அடிகள் யமனது கடுமையான மார்பை எப்படி உதைத்தது என்று வியக்கின்றார். இந்தப்பாட்டில் பக்தன் தன் மனமும் கடினமானதென்பதை அறிகின்றான். இறைவன் அது கடினமானதென்றுகொண்டு அதில் புகாமலும் போகலாம். ஆயின் இப்படி இறைவன் சமாதானம் கொடுப்பது இறைவனுக்குக் கூடுவதன்று. இறைவன் அந்த ஆத்மா பிறக்கப்போகின்றதையும் கன்னெஞ்சு படைத்திருக்கும் என்பதையும் அதில் தான் தாண்டவம் செய்யவேண்டியதென்பதும் அறிவார். அதை அறிந்தே இறைவன் பாறைகள் மிகும் இடத்தையே இடமாகக்கொண்டு பாறைகளில் நடந்து வருகின்றார். வேறெதற்காக மலைக்காட்டை அவர் இருப்பிடமாகத் தேர்ந்துள்ளார்? அவருக்கு வேறு வாழிடம் கிடைக்கவில்லையா? தேவர்கள் இதயத்தும், தவசிகள் இதயத்தும் அவிசொரியும் யாகசாலைகளிலும் வேண்டிய இடங்கள் உள்ளனவே? (80)*

कंचित्कालमुमामहेश भवतः पादारविन्दार्चनैः
कंचिद्ध्यानसमाधिभिश्च नतिभिः कंचित्कथाकर्णनैः ।
कंचित्कंचिदवेक्षणैश्च नुतिभिः कंचिद्दशामीदृशीं
यः प्राप्नोति मुदा त्वदर्पितमना जीवन्स मुक्तः खलु ॥

கஞ்சித் காலமுமாமஹேஶ பவத: பாதாரவிந்தார்ச்சனை:
கஞ்சித் த்யாந ஸமாதிபிச்ச நதிபி: கஞ்சித் கதாகர்ணனை: ।
கஞ்சித் கஞ்சிதவேக்ஷணைச்ச நுதிபி: கஞ்சித்தஶாமீத்ருஶீம்
ய: ப்ராப்னோதி முதா த்வதர்பித மனா ஜீவன் ஸ
முக்த: கலு ॥

**उमामहेश**–பார்வதியுடன் கூடிய மஹேச, **कञ्चित्कालं**–சிலகாலம், **भवतः पादारविन्दार्चनैः**–உம்முடையபாதாரவிந்தார்ச்சனைகளாலும், **कञ्चित्**–சிலகாலம், **ध्यानसमाधिभिश्च**–தியானம் ஸமாதி இந்த யோகாப்யாஸங்களாலும், **कञ्चित्**–கொஞ்ச காலம், **नतिभिः**–நமஸ்காரங்களாலும், **कञ्चित्कथाकर्णनैः**–சில காலம் கதைகளைக்கேட்பதாலும், **कञ्चिदवेक्षणैश्च**–சில காலம் பார்வையாலும், **कञ्चित्**–சிலகாலம், **नुतिभिः**–துதிப்பதாலும், **मुदा**–ஸந்தோஷத்தால், **त्वदर्पितमनाः**–உன்னிடம் அர்பணம் செய்யப்பட்ட மனமுள்ள, **यः**–எவன், **ईदृशीं दशां**–இந்த நிலைமையை, **प्राप्नोति**–அடைகிறுனே, **सः**–அவன், **जीवन् मुक्तः खलु**–ஜீவித்துக் கொண்டே முக்தியடைந்தவனில்லையா.

உமாதேவியின் துணைவரே, சிறுபொழுது, உனது மலரடிகளைப் பூஜித்துக்கொண்டும், சிறுகாலம் தியானத்திலமர்ந்தும், ஏகாக்ரமாக இருந்தும், சிறுபொழுது நமஸ்காரம் செய்தும், சிறுபொழுது உன் திருவுருவை தரிசனம் செய்தும், சிறுபொழுது உன் புகழைப்பாடியும், ஆனந்தத்து அமரும் நிலையைப்பெற்று தன் மனதை உனக்கு ஒப்படைத்தவனே ஜீவன் முக்தன்.

பக்தி பழுக்கும்பொழுது ஜீவன் முக்தியைக் கொடுக்கின்றது. அது வாழ்விலேயே விடுதலை. பக்தியின் பயன் கண்ணிற்குப் புலனுகாததொன்றல்ல. அதன் பயன் இப்பொழுதே இங்கேயே கிடைக்கவுள்ளது. மனது இறைவனிடம் ஒப்படைக்கப்படும் பொழுது மனது இருப்பது நின்றுவிடுகின்றது. அது 'அமனீ

பாவ' மாகின்றது. மனதே ஆத்மாவைப் பிணைப்பது, மனதே விடுதலையையும் கொடுக்கின்றது. புறபொருள்களைப் பற்றும் மனது உலகுடன் ஆத்மாவைப் பிணைக்க, இறைவனைப்பற்றும் மனது விடுதலை செய்கின்றது. (81)

बाणत्वं वृषभत्वमर्धवपुषा भार्यात्वमार्यापते
घोणित्वं सखिता मृदङ्गवहता चेत्यादि रूपं दधौ ।
त्वत्पादे नयनार्पणं च कृतवांस्त्वद्देहभागो हरिः
पूज्यात्पूज्यतरः स एव हि न चेत्को वा तदन्योऽधिकः ॥

பாணத்வம் வ்ருஷபத்வமர்த்தவபுஷா
பார்யாத்வமார்யாபதே
கோணித்வம் ஸகிதா ம்ருதங்க வஹதா
சேத்யாதி ரூபம் ததௌ ।
த்வத்பாதே நயனார்ப்பணம் ச
க்ருதவாம்ஸ்த்வத்தேஹ பாகோ ஹரிஃ
பூஜ்யாத் பூஜ்யதர: ஸ ஏவ ஹி ந சேத் கோ வா
ததந்யோ'திக: ॥

आर्यापते-பார்வதீ பதியான ஈச்வர, हरिः-விஷ்ணு, बाणत्वं-பாணமாயிருப்பது, वृषभत्वं-விருஷபமாயிருப்பது, अर्धवपुषा-பாதிசரீரத்தால், भार्यात्वं-பத்னியாயிருக்கும் தன்மை, घोणित्वं-வராஹாவதாரமெடுப்பது, सखिता-நண்பனுயிருப்பது, मृदङ्गवहता-மிருத்ங்கம் வாசிப்பது, इत्यादिरूपं दधौ-இது முதலான ரூபத்தையடைந்தார். त्वत्पादे - உன் திருவடியில், नयनार्पणं च कृतवान्-கண்ணையும் அர்ப்பணம் செய்தார். त्वद्देहभागः-உன் சரீரத்தில் பங்குபெற்ற, स एव-அவர்தான், पूज्यात्पूज्यतरः-பூஜ்யாளான பிரம்மாதி தேவர்களைக்காட்டிலும் உயர்ந்தவர், न चेत्-இல்லாவிடில், को वा तदन्योऽधिकः - அவரைக் காட்டிலும் வேறு யார்தான் மேலானவன் ?

தேவியின் கணவா ! ஹரியானவர், அம்பாகவும், எருதாகவும், உடலைப்பகிர்ந்துகொள்ளும் மனைவியாகவும், பன்றியாகவும், ஒரு நண்பனுகவும், பறையறிபவனுகவும் பல்லுருக்களைகொண்டு ஒரு

சமயம் தன் கண்ணையும் உமது திருவடிகளில் சமர்ப்பித்தார். சிவபெருமானின் ஒரு பாதியாகுபவரே மிகவும் வணங்கத்தக்கவர், அவரினும் மிகுந்தவர் யார்?

இங்கு ஹரிஹர மூர்த்தம் விளக்கப்படுகின்றது. விஷ்ணு (ஹரி) சிவனுடன் பல வழிகளில் இணைக்கப்படுகின்றார், (1) விஷ்ணு திரிபுரம் எரிக்க சிவன் கை அம்பானார். (2) அவர் சிவ வாகனமாகும் எருதுவாகின்றார். (3) அவர் உடலின் பாதியாகி அவர் மனைவியானார். (4) அவர் சிவனடிகளைக் கண்டறிய ஒரு பன்றியானார். (5) அவர் சிவனுக்குத் துணை நிற்க மோஹினி வேடம் கொண்டார். (a) அச்சமயம் தேவர்களே அமிருதத்தை பெறவும், அசுரர்களுக்கு அது இல்லாமல் போகவும் செய்தார். (b) சிவபெருமானால் தான் தொடுபவர்கள் சாம்பலாக மாய வரம் பெற்ற பஸ்மாசுரனை அழிக்கும் பொழுதும் அவர் அவ்வுருக் கொண்டார். (6) சிவபெருமான் நடனம் செய்யும்பொழுது விஷ்ணு மத்தளம் கொட்டுகின்றார். (7) ஒரு சமயம் அவர் சிவனை பூஜை செய்துகொண்டிருக்க ஆயிரத்திற்கு ஒரு தாமரை மலர் குறைவாக இருப்பதைக்கண்டு அதற்குப்பதிலாகத் தன் கண்ணையே கொடுத்தார்.

ஹரி, ஹரனுக்கு மிகவும் நெருங்கியவர், அவர் பிறதேவர்களினும் உயர்ந்தவர். (82)

जननमृतियुतानां सेवया देवतानां
न भवति सुखलेशः संशयो नास्ति तत्र ।
अजनिममृतरूपं साम्बमीशं भजन्ते
य इह परमसौख्यं ते हि धन्या लभन्ते ॥ ८३ ॥

ஜனன ம்ருதி யுதானாம் ஸேவயா தேவதாநாம்
ந பவதி ஸுகலேஶ: ஸம்ஶயோ நாஸ்தி தத்ர ।
அஜநிமம்ருதரூபம் ஸாம்பமீஶம் பஜந்தே
ய இஹ பரம ஸௌக்யம் தே ஹி தன்யா லபந்தே ॥

**जननमृतियुतानां**–பிறப்பு இறப்பு இவைகளுடன் கூடிய, **देवतानां**–தேவதைகளின், **सेवया**–ஸேவையால், **सुखलेशः**–ஸ்வல்ப ஸுகம்கூட, **न भवति**–உண்டாகிறதில்லை, **तत्र**–

அது விஷயத்தில், **संशयः नास्ति**-ஸந்தேஹமில்லை, **ये**-எவர்கள், **इह**-இவ்வுலகில், **अजनिं**-பிறப்பில்லாதவரும், **अमृतरूपं**-இறப்புமில்லாத ரூபத்தையுடையவருமான, **साम्बमीशं**-பார்வதியுடன் கூடிய பரமேச்வரனை, **भजन्ते**-ஸேவிக்கிறார்களோ, **ते धन्याः**-அந்த புண்யவான்கள், **परमसौख्यं लभन्ते**-மேலான ஸுகத்தை (முக்தி ஆனந்தத்தை) அடைகிறார்கள்.

பிறப்பு இறப்பென்னும் சுழலிலுள்ள தேவர்களைப் பூஜிப்பதால் சுகத்தின் சிற்றளவும் நாம் பெறுவதில்லை. இது ஒரு ஸந்தேகமற்ற முடிவு. என்றுமிருப்பவரும், பிறப்பில்லாதவருமான பார்வதியாரின் தலைவனை வணங்குபவர்களே பாக்கியசாலிகள். அவர்களே பேரானந்தத்தை அடைகின்றார்கள்.

சாதாரணமாகும் ஒரு உண்மை இங்கு சொல்லப்படுகின்றது. சிறுதெய்வங்களையும் உபதெய்வங்களையும் வழிபடுவது பயனற்றது. அது நமது இறுதி இலட்சியமாகும் நிறைவைப் பெற உதவாது. என்றுமுள்ளவரான சிவபெருமானே ஆத்மாவைக் காப்பாற்றிப் பேரானந்தத்தைக்கொடுக்கவல்லவர்.

शिव तव परिचर्यासंनिधानाय गौर्या
भव मम गुणधुर्यां बुद्धिकन्यां प्रदास्ये ।
सकलभुवनबन्धो सच्चिदानन्दसिन्धो
सदय हृदयगेहे सर्वदा संवस त्वम् ॥ ८४ ॥

ஶிவ தவ பரிசர்யா ஸந்நிதாநாய கௌர்யா
பவ மம குணதுர்யாம் புத்தி கன்யாம் ப்ரதாஸ்யே ।
ஸகல புவன பந்தோ ஸச்சிதானந்த ஸிந்தோ
ஸதய ஹ்ருதயகேஹே ஸர்வதா ஸம்வஸ த்வம் ॥

**शिव**-மங்களகரமானவரே, **सकलभुवनबन्धो**-எல்லா உலகிற்கும் பந்துவானவரே, **सच्चिदानन्दसिन्धो**-ஸத்யம் ஞானம் ஆனந்தம் இவைகளுக்கு ஸமுத்திரமானவரே, **सदय** தயவுடன் கூடியவரே, **भव**-உலகத்தைப் படைக்கிற ஈச்வர **गौर्या**-பார்வதியுடன் கூட, **तव**-உமக்கு, **परिचर्यासंनिधानाय**-

பக்கத்தில் இருந்து ஏவல் செய்வதற்கு, **गुणधुर्यां**-நல்ல குணங்கள் நிறைந்த, **मम**-என்னுடைய, **बुद्धिकन्यां**-புத்தியாகிற கன்னிகையை, **प्रदास्ये**-கொடுக்கிறேன், **त्वं**-நீர், **हृदयगेहे**-ஹ்ருதயமாகிற கிருஹத்தில், **सदा**-எப்பொழுதும், **संवस**-வாஸம் செய்யும்.

ஓ சிவ, ஓ பவ, உலகங்களுக்கெல்லாம் நண்ப! பேரானந்த அநுபவக்கடலே! கருணை வள்ளலே! பல சிறப்புக்களைப் பெற்றுள்ள எனது மனமென்னும் மணமகளை, கௌரியுடன் உனக்குப் பணிவிடை செய்யக்கொடுக்கின்றேன். நீ எப்பொழுதும் என் இதயம் என்னும் வீட்டில் அமர்வாயாக.

பக்தன் தனது மகளாகும் மனதை இறைவன் திருப்பணிவிடைக்குக் கொடுக்கின்றான். மனது பார்வதியாருடன் அமைந்து, அவருடன் சிவபெருமானுக்குப்பணிவிடை செய்யட்டும். இறைவன் இதயத்தையே தன் இருப்பிடமாக வைத்துக் கொள்ளட்டும். அவர் எப்பொழுதும் அதிலிருக்கட்டும். அதை விட்டுப்போகவே வேண்டாம். (84)

जलधिमथनदक्षो नैव पातालभेदी
न च वनमृगयायां नैव लुब्धः प्रवीणः ।
अशनकुसुमभूषावस्त्रमुख्यां सपर्यां
कथय कथमहं ते कल्पयानीन्दुमौले ॥ ८५ ॥

ஜலதி மதன தக்ஷோ நைவ பாதாள பேதீ
ந ச வநம்ருகயாயாம் நைவ லுப்தः ப்ரவீண: ।
அசன குஸுமபூஷா வஸ்த்ர முக்யாம் ஸபர்யாம்
கதய கதமஹம் தே கல்பயாநீந்துமௌளே ॥

**इन्दुमौले**-சந்திரனை சிரஸில் அணிந்த ஈசுவர, **अहं**-நான் **जलधिमथनदक्षः नैव**-ஸமுத்திரத்தைக் கடைவதில் ஸாமர்த்தியமுள்ளவனல்ல, **पातालभेदी न च**-பாதாளலோகத்தைப் பிளக்கிறவனுமல்ல, **वनमृगयायां**-காடுகளில் வேட்டையாடுவதில், **प्रवीणः लुब्धः नैव**-சிறந்த வேடனுமல்ல, **ते**-உமக்கு **अशनकुसुमभूषावस्त्रमुख्यां सपर्यां**-ஆஹாரம், புஷ்பம், ஆபரணம்

வஸ்திரம் முதலான பூஜையை, कथं-எப்படி, कल्पयानि-செய்வேன்?, कथय-சொல்லும்.

பிறை சூடிய பெருமானே! எனக்குக் கடல் கடையத்திற னில்லை. பாதாளலோகத்தை உடைக்கவும் தெரியாது. நான் திறமை மிக்க வேடனுமன்று இந்நிலையில் நான் உன்னை எப்படிப் பூஜிப்பது? எந்த நிவேதனங்களைப் படைப்பது (விஷத்தை)? மலர் (சந்திரன்), அணி (பாம்புகள்), வஸ்திரம் (யானையின் தோல்) முதலியவைகளை எப்படித்திரட்டுவேன்? எனக்குச்சொல்வாயாக!

பக்தனுக்கு இறைவனை வணங்கும் வழிகள் விளங்கவில்லை. இறைவனுக்கு வேண்டுபவைகளை பக்தன் எப்படிப் பெறுவது? விஷமே சிவபெருமானின் நிவேதனம். பாற்கடலைக் கடைந்தா லன்றி சிவனுணவாகும் ஹாலகாலத்தைப் பெறுவதெப்படி? பாம்புகளே இறைவன் அணிகள். அவைகளைப்பெற நாகலோகத் திற்குப் போகவேண்டும். சிவபெருமானின் வஸ்திரம், யானையின் தோல், புலித்தோல் இவை. இவைகளைப்பெற ஒருவன் வேட்டைத்திறன் பெற்றவனாகவேண்டும். சாதனங்கள் ஒன்றையும் பெறாத பக்தன் தான் அவைகளைப் பெறவில்லையாகையால் தான் இறைவனுக்கு எதை சமர்ப்பிப்பது என்று கேட்கின்றான். (85)

पूजाद्रव्यसमृद्धयो विरचिताः पूजां कथं कुर्महे
पक्षित्वं न च वा किटित्वमपि न प्राप्तं मया दुर्लभम् ।
जाने मस्तकमङ्घ्रिपल्लवमुमाजाने न तेऽहं विभो
न ज्ञातं हि पितामहेन हरिणा तत्त्वेन तद्रूपिणा ॥ ८६ ॥

பூஜா த்ரவ்யஸம்ருத்தயோ விரசிதா: பூஜாம் கதம் குர்மஹே
பக்ஷித்வம் ந ச வா கிடித்வமபி ந ப்ராப்தம் மயா துர்லபம் ।
ஜாநே மஸ்தகமங்க்ரி பல்லவமுமா ஜாநே ந தேஹம் விபோ
ந ஞாதம் ஹி பிதாமஹேன ஹரிணா தத்வேன தத்ரூபிணா ॥

उमाजाने-பார்வதீபதியான மகேச்வர, पूजाद्रव्यसमृद्धयः-பூஜைக்கு உரிய பதார்த்தங்களின் நிறைவுகள், विरचिताः-சேகரிக்கப்பட்டன, पूजां-பூஜையை, कथं कुर्महे-எப்படிச் செய்வோம்? मया-என்னால், दुर्लभं-அடைய முடியாத, पक्षित्वं-பக்ஷியாயிருக்கும் தன்மை, न च प्राप्तं-அடையப்பட

வில்லை. **किटित्वमपि वा**–வராஹத்தன்மையாவது, **न प्राप्तं**–அடையப்படவில்லை. **विभो**–ஸர்வ வியாபகமான ஈசுவர, **अहं**-நான், **ते**– உம்முடைய, **मस्तकं**–சிரஸ்ஸையும், **अंघ्रिपल्लवं**-துளிர்போன்ற பாதத்தையும், **न जाने**-அறியவில்லை. **तत्त्वेन**-உண்மையாக, **तद्रूपिणा**–அந்த ஹம்ஸபக்ஷி - வராகங்களின் ரூபத்தையுடைய, **पितामहेन हरिणा**–பிரம்மாவாலும் விஷ்ணுவாலும், **न ज्ञातं हि**–அறியப்படவில்லையன்றோ.

*பார்வதியின் துணைவா! பூஜா சாமக்ரிகளை சேகரித்தாய் விட்டது. ஆயின் எப்படி பூஜை செய்வது? நான் ஒரு வராஹத்தின் சிறப்போ, ஒரு பறவையின் சிறப்போ பெறவில்லையே. எங்கும் பரந்து உள்ளானே, நான் முடியையோ திருவடிகளையோ பார்க்கவில்லை. பிரம்மாவினாலும் விஷ்ணுவினாலும் கூட அவைகளைப் பார்க்கக்கூடவில்லை.*

*சிவனை பூஜிக்கவேண்டிய சாமான்களை சேகரித்துவிட்டாலும் கூட எப்படிப் பூஜையைச் செய்வது? சிவனுடைய முடியையும் அடியையும் பார்ப்பது கூடுவதில்லை. பிரம்மா விஷ்ணு இவர்களாலேயும் அவை பார்க்கப்படவில்லை. பூஜையை எப்படிச் செய்வது?* (86)

**अशनं गरलं फणी कलापो**
**वसनं चर्म च वाहनं महोक्षः ।**
**मम दास्यसि किं किमस्ति शंभो**
**तव पादाम्बुजभक्तिमेव देहि ॥ ८७ ॥**

அஶனம் கரளம் பணீ கலாபோ
வஸனம் சர்ம ச வாஹனம் மஹோக்ஷ: ।
மம தாஸ்யஸி கிம் கிமஸ்தி ஶம்போ
தவ பாதாம்புஜ பக்திமேவ தேஹி ॥

**शम्भो**–க்ஷேமத்தை உண்டுபண்ணுகிறவரே, **अशनं**-ஆஹாரம், **गरलं**–காலகூட விஷம்; **कलापः**–ஆபரணம், **फणी**–ஸர்ப்பம், **वसनं**–வஸ்திரம், **चर्म**-தோல், **वाहनं**–வாகனம், **महोक्षः**–பெரிய எருது; **मम**-எனக்கு, **किं दास्यसि**- எதைக் கொடுப்பீர்? **किमस्ति**-என்ன இருக்கிறது? **तव**–உம்முடைய

**पादाम्बुजभक्तिमेव देहि**-பாதாரவிந்தத்தில் பக்தியையே கொடுங்கள்.

ஓ சம்பூ, உனக்கு உணவு விஷம், அணி பாம்பு, வஸ்திரம் தோல், வாகனம் எருது. நீ எதை எனக்குக்கொடுப்பாய்? மேலும் அங்குள்ளதெது? நினது திருவடியில் பக்தியை மட்டும் கொடுப்பாயாக!

85ம் பாட்டில் பக்தன் அவருக்கு உகந்த விஷத்தையும், பாம்புகளையும், தோல்களையும் எப்படிக்கொடுக்கமுடியும் என்று கேட்கிறான். இந்த சுலோகத்தில் சிவன் தனக்குத் தரக்கூடிய பொருள் எது என்று கேட்கிறான். சிவனிடம் இருக்கும் விஷம் முதலியவை பக்தனுக்கு பயன்படுவனவன்று. பக்தன் பரமன் திருவடியில் பக்தி செய்வதையே வேண்டுகின்றான்.

இது நிந்தாஸ்துதி என்ற வகையில் அமைகின்றது, புகழை இகழாகச் சொல்வது. (87)

**यदा कृताम्भोनिधिसेतुबन्धनः**
**करस्थलाधःकृतपर्वताधिपः ।**
**भवानि ते लङ्घितपद्मसंभव-**
**स्तदा शिवार्चास्तवभावनक्षमः ॥ ८८ ॥**

யதா க்ருதாம்போநிதி ஸேதுபந்தன:
கரஸ்தலாத:க்ருத பர்வதாதிப: ।
பவானி தே லங்கித பத்மஸம்பவ-
ஸ்ததா ஶிவார்சா ஸ்தவ பாவன க்ஷம: ॥

**शिव**-மங்களஸ்வரூப, **यदा**-எப்பொழுது, **कृताम्भोनिधिसेतुबन्धनः**-ஸமுத்திரத்தில் அணைகட்டுவதைச் செய்தவனாகவும், **करस्थलाधःकृतपर्वताधिपः**-கையால் (பூமியில்) கீழே இருக்கும்படி செய்யப்பட்ட விந்த்யமலையை உடையவனாகவும், **लंघितपद्मसंभवः**-பிரம்மாவைக் காட்டிலும் உயர்ந்தவனாகவும் இருப்பேனோ **तदा**-அப்பொழுது, **ते**-உனக்கு, **अर्चास्तवभावनक्षमः**-அர்ச்சனை, ஸ்தோத்திரம், தியானம் இவைகளைச் செய்யத்தகுதியுள்ளவனாக, **भवानि**-ஆவேன்,

கடல்மீது பாலம் கட்டினவனுகவோ (ராமனுகவோ), உள்ளங் கையால் விந்தியமலையை அழுத்தியவனுகவோ (அகஸ்திய ராகவோ), உலகங்களைப் படைத்து, வேதங்களை விளக்கிய தாமரையில் பிறந்த பிரம்மனுகவோ ஆனலல்லது உன்னைப் பூஜிக்க என்றல் முடியுமா? அப்பொழுதே உன்னைப் பூஜிக்கவும் உன் புகழைப்பாடவும், உன் தியானத்தில் அமரவும் கூடும்!

சாவிற்குட்பட்ட மனிதனுக்கு சிவனைப் பூஜிக்கவும் அவர் புகழைச்சொல்லவும், அவரை தியானிக்கவும் கூடுவதில்லை. இவைகளைச் செய்ய ராமசந்திரனுகவும், அகஸ்தியராகவும், பிரம்மனுகவும் இருக்கவேண்டும். ஸ்ரீராமசந்திரர் இலங்கைக்குப் பாலம் கட்டியவர். ராமேசுவரத்தில் சிவனைப் பூஜை செய்தார். அகஸ்தியர் (குறுகிய உருவம் பெற்றவர்) விந்தியபர்வதத்தின் அகந்தையை அகற்ற, அதைத் தன் உள்ளங்கையால் அழுத்தி வைத்தார். அவர் சிவன் புகழைப் பாட வல்லவர். சிவனை தியானிப்பதால் ஒருவன் பிரம்மாவினும் உயர்ந்தவனுக இருக்க வேண்டும். (88)

नतिभिर्नुतिभिस्त्वमीश पूजा-
विधिभिर्ध्यानसमाधिभिर्न तुष्टः ।
धनुषा मुसलेन चाश्मभिर्वा
वद ते प्रीतिकरं तथा करोमि ॥ ८९ ॥

நதிபிர் நுதிபிஸ்த்வமீஶ பூஜா-
விதிபிர் த்யான ஸமாதிபிர் ந துஷ்ட: ।
தனுஷா முஸலேன சாச்மபிர் வா
வத தே ப்ரீதிகரம் ததா கரோமி ॥

ईश-ஹேஈச்வர, यथा-எப்படி, त्वं-நீர், धनुषा-வில்லினுலாவது, मुसलेन-உலக்கையாலாவது; अश्मभिर्वा-கற்களினுலாவது तुष्टः-ஸந்தோஷிப்பீரோ, तथा-அவ்வாறு नतिभिः-நமஸ்காரங்களாலும், नुतिभिः-ஸ்தோத்திரங்களாலும், पूजाविधिभिः-பூஜை முறைகளாலும், ध्यानसमाधिभिः-தியான ஸமாதிகளாலும், न तुष्टः-ஸந்தோஷப்படமாட்டீர். (ஆகையால்) ते-உமக்கு, प्रीतिकरं वद-பிரியமான விஷயத்தைச் சொல்லும், तथा करोमि-அவ்விதம் செய்கிறேன்,

இறைவ! நமஸ்காரங்கள், உன் புகழ்பாடுதல், பூஜாவிதிகள், ஒருமைபட்ட மனம், தியானம் இவைகளால் உனக்கு திருப்தி உண்டாவதில்லை. ஒரு அம்பினுலும் கல்லாலும், தண்டத்தாலும் அடிக்கப்படுவதை நீ விரும்புகிருய் போலும். அப்படியானல் அதைச்சொல் உனக்கு எது உகந்ததோ அதைச்செய்கின்றேன்.

இந்தப்பாட்டும் நிந்தாஸ்துதி. சாதாரண பூஜை முறைகள் சிவனை திருப்தி செய்வதில்லை போலும்! எதற்காக அவர் முரட்டுச் செய்கைகளைப் பூஜையாக ஏற்றுக்கொண்டுள்ளார்? (1) அர்ச்சுனன் சிவனருளைப்பெற கடுந்தவம் செய்துகொண்டிருந் தான். சிவன் ஒரு வேடுவனுக வவன் முன்பு தோன்றினர். அவர்களிருவருக்குள்ளும், யார் அந்த ஒரு விலங்கைக்கொன்றது என்ற சண்டை உண்டாயிற்று- கைகலப்பு உண்டாக அர்ச்சுனன் சிவபெருமானை வில்லால் அடித்தான். சிவபெருமானுக்குப் பெரு மகிழ்ச்சி உண்டாயிற்று (2) தண்டமென்பது பாண்டியமன்னனின் பிரம்பைக் குறிக்கின்றது போலும்! மாணிக்கவாசகர் பிழையாக அரசனல் தண்டிக்கப்பட்டார். பாண்டியனுக்குப் பாடம் கற்பிக்க கரைகள் உடையும் வண்ணம் வைகையில் பெருவெள்ளம் வந்தது. மதுரையின் குடிமக்கள் அனைவரும் சேர்ந்து உடைப்புகளை அடைக்கவேண்டுமென்று பாண்டியன் உத்திரவிட்டான். ஆப்பம் விற்கும் ஒரு கிழவிக்கு ஆள்கிடைக்கவில்லை. இறைவனே பணி யாளாக வேடம் புனைந்து அக்கிழவியின் வேலையைத் தான் செய்வதாக ஒப்புக்கொண்டார். ஆயின் அவர் வேலையை ஒழுங்காகச் செய்யவில்லை. பிறர் வேலை செய்யாவண்ணம் அவர்கள் அக்கரையையும் அகற்றினர். அரசன் தணிக்கைக்கு வர, இந்தப் பணியாளனைப்பார்த்து, அவனைத் தன் பிரம்பால் தட்டினர். (3) சாக்கிய நாயனர் சமண அரசனின் கீழ் வாழ்ந்தவர். அவருக்கு முறையாக சிவனை பூசிப்பது கூடாததாக அவர் சிவ லிங்கத்தின் மீது கல்லெறிந்து இதயபூசை செய்தார். (89)

वचसा चरितं वदामि शंभो-
रहमुद्योगविधासु तेऽप्रसक्तः ।
मनसाकृतिमीश्वरस्य सेवे
शिरसा चैव सदाशिवं नमामि ॥ ९० ॥

வசஸா சரிதம் வதாமி ஶம்போ-
ரஹமுத்யோக விதாஸு தேऽப்ரஸக்த: ।

மநஸாக்ருதிமீச்வரஸ்ய ஸேவே
ஶிரஸா சைவ ஸதாஶிவம் நமாமி ||

**ते उद्योगविधासु**—உம்முடைய உயர்ந்தயோகத்தில், **अप्रसक्तः**—பழக்கமில்லாத, **अहं**-நான், **शम्भोः**—ஈசுவரனுடைய, **चरितं**—கதையை, **वचसा**-வார்த்தையால், **वदामि**-சொல்லுகிறேன், **मनसा**—மனதால், **ईश्वरस्य**—ஈசுவரனின், **आकृतिं**—ரூபத்தை, **सेवे**-தியானம்செய்கிறேன், **शिरसा चैव**—சிரஸ்ஸிலும், **सदाशिवं नमामि**—ஸதாசிவனை நமஸ்கரிக்கிறேன்.

*முயற்சியுடன் உன்னை தியானிக்க நான் பழக்கமடைந்தவனன்று. நான் சம்பூவின் கதைகளைச்சொல்வேன். சிவனுருவத்தை மனதில்கொண்டு வணங்குவேன். தலையால் சதாசிவனுக்கு வணங்குவேன். இவையே என்னால் செய்யக்கூடியவை.*

*ஒருவன் இதயத்தால் சிவனைப் பூஜை செய்யத் தகுதி பெற்றிருக்காவிட்டாலும் அவன் தயங்கவேண்டுவதில்லை. அவன் கீழ்ப்படிமுறைகளாலேயே பக்தி செய்யட்டும். அவன் படிப்படியாக மேலேறவே செய்வான்.* (90)

आद्याऽविद्या हृद्गता निर्गताऽऽसी-
द्विद्या हृद्या हृद्गता त्वत्प्रसादात् ।
सेवे नित्यं श्रीकरं त्वत्पदाब्जं
भावे मुक्तेर्भाजनं राजमौले ॥ ९१ ॥

ஆத்யாZவித்யா ஹ்ருத்கதா நிர்கதாZZஸீத்
வித்யா ஹ்ருத்யா ஹ்ருத்கதா த்வத்ப்ரஸாதாத் |
ஸேவே நித்யம் ஸ்ரீகரம் த்வத்பதாப்ஜம்
பாவே முக்தேர் பாஜனம் ராஜமௌளே ||

**राजमौले**—சந்திரனை சிரஸில் அணிந்தவரே, **त्वत्प्रसादात्**—உம்முடைய அனுக்ரஹத்தால், **आद्या**—ஆதிமுதலிருக்கிற **हृद्गता**—மனதிலுள்ள, **अविद्या**-அக்ஞானம், **निर्गतासीत्**-போய்விட்டது. **या**—எந்த ஞானம், **हृत्**—அக்ஞானத்தைப் போக்குமோ, **विद्या**—அந்த ஞானம், **हृद्गता**—ஹிருதயத்திலிருக்

கிறது. श्रीकरं-ஸம்பத்தை யுண்டுபண்ணுகிற, मुक्तेर्भाजनं-முக்திக்கு ஸாதனமான, त्वत्पदाब्जं-உம்முடைய பாதார விந்தத்தை, भावे-மனதில், नित्यं सेवे-எப்பொழுதும் தியானம்செய்கிறேன்.

*பிறைசூடும் பெருமானே! நினது திருவருளால் ஆதியற்று என்னிதயத்து நிலைபெற்ற மாயை அகன்றுவிட்டது. பிரம்ம ஞானம் அங்கு நிலைத்துவிட்டது. மங்களத்தைக் கொடுப்பதும், விடுதலைக்கு வழிவிடுவதுமாய உன் திருவடிகளை நான் தியானம் செய்து வணங்குகின்றேன்.* (91)

दूरीकृतानि दुरितानि दुरक्षराणि
दौर्भाग्यदुःखदुरहंकृतिदुर्वचांसि ।
सारं त्वदीयचरितं नितरां पिबन्तं
गौरीश मामिह समुद्धर सत्कटाक्षैः ॥ ९२ ॥

*தூரீக்ருதானி துரிதானி துரக்ஷராணி*
*தௌர்பாக்ய துக்க துரஹங்க்ருதி துர்வசாம்ஸி* ।
*ஸாரம் த்வதீய சரிதம் நிதராம் பிபந்தம்*
*கௌரீஶ மாமிஹ ஸமுத்தர ஸத்கடாக்ஷை:* ॥

गौरीश-கௌரீநாத, दुरक्षराणि-பிரம்மாவின் கெட்ட எழுத்தைக் குறிக்கின்ற, दुरितानि-பாபங்களால் உண்டான दौर्भाग्यदुःखदुरहंकृतिदुर्वचांसि-துரதிருஷ்டம், துக்கம், கெட்ட அஹங்காரம், கெட்ட வார்த்தை இவைகள், दूरीकृतानि-போக்கப்பட்டன. सारं-உயர்ந்த, त्वदीयचरितं-உன்சரித்திரத்தை, नितरां पिबन्तं-அதிகமாகக் குடிக்கிற (கேட்கிற) मां-என்னை, सत्कटाक्षैः-சிலாக்கியமான கடைக்கண் பார்வைகளால், इह-இந்த ஜன்மாவிலேயே, समुद्धर-கரையேற்றும்.

*கௌரியின் கணவ, துரதிர்ஷ்டம், கஷ்டம், கொடிய அகந்தை கொடுஞ்சொல் இவைகளெல்லாம் — பாபங்களால் தோன்றுபவை — துரத்தப்பட்டுள்ளன. நான் உனது புகழென்னும் இனிய புராணங்களைப் பருகி நிற்கின்றேன். கிருபை செய்து என்னையும் இங்கே காப்பாற்றுவாயாக!*

இறைவனருளாலேயே தீயவையெல்லாம் அகற்றப்படுகின்றன. தீயது, பாபம், கஷ்டம் இவையெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல அகன்றுவிடுகின்றன. (92)

सोमकलाधरमौलौ कोमलघनकंधरे महामहसि ।
स्वामिनि गिरिजानाथे मामकहृदयं निरन्तरं रमताम् ॥

ஸோமகலாதர மௌளௌ
கோமளகநகந்தரே மஹாமஹஸி ।
ஸ்வாமினி கிரிஜா நாதே
மாமக ஹ்ருதயம் நிரந்தரம் ரமதாம் ॥

**मामकहृदयं**-என் மனம், **सोमकलाधरमौलौ**-சந்திரகலையை சிரஸில் அணிந்தவரும், **कोमलघनकन्धरे**-அழகியமேகம் போல் நீலமான கழுத்தையுடையவரும், **महामहसि**-பெரிய ஒளி ரூபமாயும், **स्वामिनि**-லோக நாதனுமான, **गिरिजानाथे**-பார்வதீபதியிடத்தில், **निरन्तरं रमतां**-இடைவிடாமல் இன்புற்றிருக்கட்டும்.

கிரிஜாவின் கணவனும், பிறையைத்தலையில் அணிபவனும், மேகம்போன்ற நீலமாய கழுத்தைப்பெற்றவனும், பிரகாசத்தைப் பெற்ற உருபடைத்தவனுமான உன்னிடம் என் இதயம் அமர்ந்து மகிழட்டும்.

பக்தன் சிவனது அருட்செயல்கள் சிலவற்றைச்சொல்லி, அதன் பொருளை தியானிக்கின்றார். சிவனது உருவும் அவயவங்களும் அவரது செயலைக்குறிப்பிடுகின்றன. (93)

सा रसना ते नयने तावेव करौ स एव कृतकृत्यः ।
या ये यौ यो भर्गं वदतीक्षेते सदाऽर्चतः स्मरति ॥ ९४ ॥

ஸா ரஸநா தே நயனே
தாவேவ கரௌ ஸ ஏவ க்ருதக்ருத்ய: ।
யா யே யௌ யோ பர்கம்
வததீக்ஷேதே ஸதா஽ர்ச்சத: ஸ்மரதி ॥

**या**-எது, **सदा**-எப்பொழுதும், **भर्गं वदति**-சிவநாமாவைச் சொல்லுகிறதோ, **सा एव रसना**-அதுதான் நாக்கு, **ये**-

எவைகள், **भर्गं ईक्षेते**-(எப்பொழுதும்) ஈசுவரனைப்பார்க்கிறதுகளோ, **ते नयने**-அவைகள்தான் கண்கள், **यौ**-எவைகள், **भर्गं अर्चतः**-(எப்பொழுதும்) ஈசுவரனைப் பூஜிக்கின்றனவோ, **तावेव करौ**-அவைகள்தான் கைகள், **यः**-எவன், **भर्गं स्मरति**-(எப்பொழுதும்) ஈசனை ஸ்மரணம் செய்கிறானோ **स एव कृतकृत्यः**-அவன்தான் செய்யக்கூடியவைகளை செய்தவனாகிறான்.

எவனது நாக்கு சிவனையே பேசுகின்றதோ, கண்கள் சிவனையே பார்க்கின்றனவோ, கைகள் சிவனையே பூஜிக்கின்றனவோ எவன் அவனையே விடாது சிந்திக்கின்றானோ அவன் தன் இலட்சியத்தைப் பெற்றவனாகின்றான்.

முன்பு பல சுலோகங்களில் சொல்லப்பட்ட கருத்தே இங்கும் சொல்லப்படுகின்றது. புலன்களின் செயலும் மனதும் இறைவனையே நோக்கி அமைதல் வேண்டும். (94)

**अतिमृदुलौ मम चरणावतिकठिनं ते मनो भवानीश ।**
**इति विचिकित्सां संत्यज शिव कथमासीद्गिरौ तथा वेशः ॥**

அதிம்ருதுளௌ மம சரணா-
வதிகடிநம் தே மநோ பவானீஶ ।
இதி விசிகித்ஸாம் ஸந்த்யஜ
ஶிவ கதமாஸீத் கிரௌ ததா வேஶ: ॥

**भवानीश**-பார்வதீபதியான ஈச, **मम चरणौ**-என்கால்கள் **अतिमृदुलौ**-மிகவும் மென்மையானவைகள், **ते मनः**-உன் மனம், **अतिकठिनं**-மிகவும் முரடானது, **इति विचिकित्सां संत्यज**-என்ற ஸந்தேகத்தை விட்டுவிடு. **शिव**-மங்களரூபியே **तथा**- அவ்விதமான (கரடுமுரடான), **गिरौ**-மலையில், **कथं**-எப்படி, **वेश आसीत्**-பிரவேசம் ஏற்பட்டது.

பார்வதி தேவியின் கணவ! "எனது பாதங்கள் மிருதுவானவை. உனது இதயம் கடினமானது" என்ற எண்ணத்தை விட்டுவிடுவாயாக! சிவனே, நீ ஏன் மலையில் வசிப்பதை ஏற்றுக் கொண்டாய்?

இங்கும் முன்பு சொல்லிய கோரிக்கையே பக்தனல் வற்புறுத்தப்படுகின்றது. அவனது இதயம் மிகவும் கடினமானதென்றும் தன் பாதங்கள் மிருதுவானதெனவும் கொண்டு அதில் புக மறுப்பது கூடாது. (95)

**धैर्याङ्कुशेन निभृतं रभसादाकृष्य भक्तिशृङ्खलया ।**
**पुरहर चरणालाने हृदयमदेभं बधान चिद्यन्त्रैः ॥ ९६ ॥**

தைர்யாங்குசேன நிப்ருதம்
ரபஸாதாக்ருஷ்ய பக்தி ச்ருங்கலயா ।
புரஹர சரணாலானே
ஹ்ருதயமதேபம் பதாந சித்யந்த்ரை: ॥

**पुरहर**–முப்புரங்களையெரித்த ஈசுவர, **हृदयमदेभं** – மனமாகிய மதயானையை, **धैर्याङ्कुशेन**-தைரியமாகிற ஈட்டியால் **रभसात्**–வேகமாய், **आकृष्य** – இழுத்து, **भक्तिशृङ्खलया**–பக்தியாகிய சங்கிலியால், **चरणालाने**–திருவடிகளாகிற யானை கட்டும் ஸ்தம்பத்தில், **चिद्यन्त्रैः**–ஞானமாகிற உபாயங்களால் **निभृतं**–அசையாமல் இருக்கும்படி, **बधान**- கட்டும்.

முப்புரங்களை அழித்தவனே, என் இதயமென்னும் யானையை தங்கள் பாதமென்னும் கட்டுமுளையில் கட்டிவையுங்கள். அதை தைரியம் என்னும் வலிவுடன் வேகமாக இழுத்து பக்தி என்னும் தளையால் பிணித்து, அறிவென்னும் இயந்திரம் கொண்டு அது திரியாமல் அதைப்பிணைக்கவேண்டும்.

இதிலும் அடுத்த பாட்டிலும் இதயம் ஒரு யானையுடன் ஒப்பிடப்படுகின்றது. இந்த முரட்டு யானை பிடிக்கப்பட்டு கட்டுப்பாட்டில் வைக்கப்படவேண்டும். இறைவன் ஒருவனே அதைச் செய்யக்கூடும். (96)

**प्रचरत्यभितः प्रगल्भवृत्त्या मदवानेष मनःकरी गरीयान् ।**
**परिगृह्य नयेन भक्तिरज्ज्वा परम स्थाणु पदं दृढं नयामुम् ॥**

ப்ரசரத்யபித: ப்ரகல்ப வ்ருத்த்யா
மதவானேஷ மந:கரீ கரீயான் ।
பரிக்ருஹ்ய நயேன பக்தி ரஜ்ஜ்வா
பரம ஸ்த்தாணு பதம் த்ருடம் நயாமும் ॥

**परम**–அளவற்ற ரூபமுடையவரே. **मदवान्**-மதத்துடன் கூடிய, **गरीयान् एष मनःकरी**–மனமாகிற இந்தப் பெரிய யானை, **प्रगल्भवृत्त्या**–முரட்டு சுபாவத்தால், **अभितः**–நாலா பக்கங்களிலும், **प्रचरति**–அலைகிறது. **अमुं**–இந்த மத யானையை, **भक्तिरज्ज्वा**–பக்தியாகிற கயிறால், **परिगृह्य**-ஸ்வாதீனம்செய்து, **नयेन** – நயமாக, **दृढं**-கெட்டியாய், **स्थाणु पदं**-நிலையான இடத்தை **नय**–அடையச்செய்.

*தலைவர்க்கும் தலைவ! இந்த மனமென்னும் யானை மதம் பிடித்து, பலத்துடன் பல அட்டூழியங்களைச்செய்கின்றது. எல்லா திக்குகளிலும் திரிகின்றது. அதை பக்தி யென்னும் கயிற்றால் கட்டி, நயமாக நிலையான இடத்திற்கு இழுத்துச் செல்வாயாக!*

*மனமென்னும் யானை, முரடானது. தன் வழிச்செல்வது, பக்தியென்னும் தளையால் கட்டப்பட்டு, இறைவனடிகளுக்கு இழுத்துச் செல்லப்பட்டு அது நிலைநிறுத்தப்படவேண்டும். ஸ்தாணு என்பது சிவபெருமானின் பெயர்களில் ஒன்று.* (97)

**सर्वालङ्कारयुक्तां सरलपदयुतां साधुवृत्तां सुवर्णां**
**सद्भिः संस्तूयमानां सरसगुणयुतां लक्षितां लक्षणाढ्याम् ।**
**उद्यद्भूषाविशेषामुपगतविनयां द्योतमानार्थरेखां**
**कल्याणीं देव गौरीप्रिय मम कविताकन्यकां त्वं गृहाण ॥**

ஸர்வாலங்கார யுக்தாம் ஸரள பத யுதாம் ஸாது
வ்ருத்தாம் ஸுவர்ணாம்
ஸத்பி: ஸம்ஸ்தூயமாநாம் ஸரஸகுண யுதாம்
லக்ஷிதாம் லக்ஷணாட்யாம் ।
உத்யத் பூஷா விசேஷாமுபகத விநயாம்
த்யோதமாநார்த்த ரேகாம்
கல்யாணீம் தேவ கௌரீப்ரிய மம கவிதா
கந்யகாம் த்வம் க்ருஹாண ॥

**देव**–பிரகாசமானவரே, **गौरीप्रिय**–பார்வதியிடம் அன்பு கொண்ட பரமேச்வர, **सर्वालङ्कारयुक्तां**–உபமானம் முதலிய எல்லா அலங்காரங்களுடன் (எல்லாவிதமான அலங்காரங்களுடன்) கூடியதும், **सरलपदयुतां**-சுலபமாக அறியக்கூடிய

அர்த்தங்களுள்ள பதங்களையுடையதும் (மெதுவான நடையையுடையவளும்), **साधुवृत्ता**-சிறந்த விருத்தங்கள் உள்ளதும் (நல்ல நடத்தையுடையவளும்), **सुवर्णा**-நல்ல எழுத்துக்களுடன் கூடியதும் (நல்ல ரூபத்தையுடையவளும்), **सद्भिः संस्तूयमाना**-ஸாதுக்களால் கொண்டாடக் கூடியதும், **सरसगुणयुता**-சிருங்காரம் முதலிய ரஸங்களுடனும் சிறந்த குணங்களுடனும் கூடியதும், **लक्षिता**-ப்ரதிபாதனம் பண்ணக்கூடிய நாயகனையுடையதும் (கன்னிகையை அபேக்ஷிக்கிறவர்களால் நிச்சயிக்கப்பட்டவளும்.) **लक्षणाढ्या**-நல்ல லக்ஷணங்களையுடையதும், **उद्यद्भूषाविशेषा**-சப்தாலங்காரச் சிறப்புள்ளதும (ஒளியுள்ள ஆபரணமணிந்தவளும்), **उपगतविनया**-கவியின் அடக்கமுள்ளதும் (அடக்கமுள்ளவளும்), **द्योतमानार्थरेखा**-அனேக அர்த்தங்களால் பிரகாசிப்பதும் (பாக்ய ரேகைகளுடன் விளங்குபவளும்), **कल्याणी**-மங்களம் தருவதும் (மங்களரூபியாயும்) ஆன, **मम** என்னுடைய, **कवितकन्यका**-கவிதையாகிற கன்னிகையை **त्वं**-நீ, **गृहाण**-ஏற்றுக்கொள்.

கௌரியின் அன்ப, இறைவ, அலங்காரங்கள் நிறைந்து கம்பீர நடையுடனமர்ந்து, தவத்தில் பழக்கம் பெற்று, அழகு நிறைந்து சிறந்த மணமகளாக உள்ள என் கவிதை என்னும் பெண்ணை ஏற்றுக்கொள்வாயாக. அவளுக்கு நல்ல சீலங்களும் ஆபரணங்களும் உண்டு. அவள் பெண்மை நிறைந்து, கையில் நல்ல அதிர்ஷ்ட ரேகைகளையும் பெற்றிருக்கின்றாள். அவள் மங்களம் நிறைந்தவள்.

தகப்பன் தன் மகளைத் தான் தேர்ந்தெடுத்த மணமகனுக்குக் கொடுப்பதைப்போல கவி தன் கவிதையை இறைவனுக்கு ஒப்படைக்கின்றார். இந்த நூலிற்குப் பொருந்தும் சிறப்புகள்: எல்லா அலங்காரங்களும் (அணிகளும்) இதில் உள்ளன. சொற்கள் அழகாக அமைகின்றன, அரிய சந்தங்கள் வைக்கப் பட்டுள்ளன. அழகாக அமைந்திருப்பதால் புலவர்களின் புகழிற்கு உரியது. இதில் பல இரசங்களும் உள்ளன. அதன் பயனும் நோக்கும் அரியவை. பணிவையும் குறிக்கின்றது. ஆழ்ந்த கருத்துகளும் குறிப்பிடும் பொருள்களும் அமைகின்றன. படிப்போருக்கு மங்களத்தை உண்டாக்கவல்லது. (98)

इदं ते युक्तं वा परमशिव कारुण्यजलधे
गतौ तिर्यग्रूपं तव पदशिरोदर्शनधिया ।
हरिब्रह्माणौ तौ दिवि भुवि चरन्तौ श्रमयुतौ
कथं शंभो स्वामिन्कथय मम वेद्योऽसि पुरतः ॥ ९९ ॥

இதம் தே யுக்தம் வா பரமஶிவ காருண்ய ஜலதே
கதௌ திர்யக்ரூபம் தவ பத ஶிரோ தர்ஶனதியா ।
ஹரி ப்ரஹ்மாணௌ தௌ திவி புவி சரந்தௌ ச்ரமயுதௌ
கதம் ஶம்போ ஸ்வாமின் கதய மம வேத்யோऽஸி புரத: ॥

परमशिव-பரமேச்வர காருண்யजलधे-கருணைக்கடலே, तव-உம்முடைய, पदशिरोदर्शनधिया-கால், தலை இவைகளைப் பார்க்க வேண்டுமென்கிற கருத்தினால், तिर्यग्रूपं-வராஹம், பக்ஷி இந்த ரூபங்களை, गतौ-அடைந்த, तौ-அந்த, हरिब्रह्माणौ-விஷ்ணுவும் பிரம்மாவும், दिवि भुवि चरन्तौ-ஆகாயத்திலும் பூமியிலும் ஸஞ்சரித்துக்கொண்டு, श्रमयुतौ-சிரமத்தையடைந்தார்கள். इदं-இது, ते युक्तं वा-உமக்குத் தக்கதுதானா? शम्भो - மோக்ஷஸுகத்தையளிக்கிறவரே, स्वामिन्-ஸர்வலோக நாயக, मम पुरतः-என் முன்னாலே, कथं-எப்படி वेद्योऽसि-அறியக்கூடியவராகிறீர் ? कथय-சொல்லும்.

பரமாகிய சிவனே! கருணைக்கடலே, உனது அடிமுடிகளைக் காண பிரம்மா விஷ்ணுக்கள், மனிதனினும் தாழ்ந்த உருவங்களை எடுத்துக்கொண்டு, ஆகாயத்தில் தாவியும், நிலத்தைக்கீண்டியும் சென்று துன்புற்றார்கள். இது உனக்கு முறையா? ஓ சம்பூ, தலைவ! உடனடியாக நான் உன்னை தெரிந்துகொள்வதெப்படி ?

இங்கும் அடிமுடி காணாது விஷ்ணு பிரம்மா இவர்கள் திகைத்தது குறிக்கப்படுகின்றது. (99)

स्तोत्रेणालमहं प्रवच्मि न मृषा देवा विरिञ्च्यादयः
स्तुत्यानां गणनाप्रसङ्गसमये त्वामग्रगण्यं विदुः ।
माहात्म्याग्रविचारणप्रकरणे धानातुषस्तोमव-
द्धूतास्त्वां विदुरुत्तमोत्तमफलं शंभो भवत्सेवकाः ॥

ஸ்தோத்ரேணுலமஹம் ப்ரவச்மி ந ம்ருஷா தேவா
விரிஞ்சாதய:
ஸ்துத்யானும் கணனு ப்ரஸங்க ஸமயே
த்வாமக்ரகண்யம் விது: ।
மாஹாத்ம்யாக்ர விசாரணப்ரகரணே தாநாதுஷ ஸ்தோமவத்
தூதாஸ்த்வாம் விதுருத்தமோத்தம பலம்
ஶம்போ பவத்ஸேவகா: ॥

**शम्भो**-அழிவற்ற சுகத்தைக் கொடுக்கக்கூடிய ஈச்வர, **भवत्सेवकाः**-உம்முடைய பக்தர்களான, **विरिञ्चाद्यः**-பிரம்மா முதலிய, **देवाः**-தேவர்கள், **स्तुत्यानां गणनाप्रसङ्गसमये**-புகழத் தக்கவர்களை எண்ணும் ஸந்தர்ப்பம் நேரும்போது **त्वामग्रगण्यं विदुः**-உம்மைத்தான் முதல்வராக அறிகிறுர்கள். **माहात्म्याग्रविचारणप्रकरणे**-உயர்ந்த முத்தொழிலிலும் ஸாமர்த்திய மென்ற மகிமையை எண்ணுகிற ஸமயத்தில், **धानातुषस्तोमवत्** பொரியின் பதரின் குவியல்போல், **धूताः**-போக்கடிக்கப் பட்டவர்களாய், **त्वां**-உம்மை, **उत्तमोत्तमफलं**-ஸர்வோத்தம பலமாக, **विदुः**அறிகிறுர்கள். **अहं**-நான், **मृषा न प्रवच्मि**-பொய் பேசவில்லை, **स्तोत्रेणालम्**-ஸ்தோத்திரம் செய்வது போதும்.

*ஓ சம்பூ! உனது பணியாட்களான பிரம்மா முதலிய தேவர்கள் புகழத்தக்கவர்களைப்பற்றிப் பேசும்பொழுது உன்னையே முதல்வனுக உணர்கிறுர்கள்! பெரியோர்களில் சிறந்த மஹிமையைப்பற்றி விசாரிக்கும்பொழுதும் அவர்கள் மணியை மூடியிருக்கும் உமியைப்போன்றுகின்றுர்கள். அவர்கள் நீயே சிறந்த பயன் என்பதை அறிகின்றுர்கள். நான் பொய்பேசவில்லை. உன்னை நான் எப்படிப் புகழ்வது?*

*இங்கு இந்த நூல், சிவனே பரம்பொருள் என்னும் துணி வுடன் முடிகின்றது. தேவர்கள் குழாத்தில் சுலபமாக இவரே முதல்வராக ஏற்றுக்கொள்ளப்படுகின்றுர். அவர் பெருமையை உரைக்கப்புகழும் உதவுவதன்று. அவன் புகழைச்சொல்லவும் அவன் அருள் வேண்டும். (100)*

ஸ்ரீ சிவானந்தலஹரீ முற்றும்.

॥ श्रीः ॥

# ॥ श्लोकानुक्रमणिका ॥

## "ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா"

40 மலர்கள் கொண்டது

### இதுவரை வெளிவந்துள்ளவை

மலர் 1. ஆத்மபோதம்

2. ஸ்ரீ லலிதாத்ரிசதீ பாஷ்யம் (மூலம்)

3, 4. ஷை தமிழ் விரிவுரை

5. உபதேச பஞ்சகம், ப்ரஹ்மானுசிந்தனம், ஏக சுலோக ப்ரகரணம், அத்வைத பஞ்சரத்னம், யதிபஞ்சகம், மாயாபஞ்சகம், மநீஷாபஞ்சகம்.

6. கணேச பஞ்சரத்னம்—புஜங்கம், ஸுப்ரஹ்மண்ய புஜங்கம், சிவபுஜங்கம், சிவபஞ்சாக்ஷர ஸ்தோத்ரம், சிவநாமாவள்யஷ்டகம், சிவபஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலா ஸ்தோத்ரம், அர்த்தநாரீசுவர ஸ்தோத்ரம்.

7. ஸௌந்தர்யலஹரீ—விஸ்தாரமான முன்னுரையுடனும் ஸ்ரீசக்ர படத்துடனும் கூடியது.

8. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம், ஸ்ரீ சிவகேசாதி பாதாந்த ஸ்தோத்ரம், ஸ்ரீ ம்ருத்யுஞ்ஜய மானஸிக பூஜா ஸ்தோத்திரம், ஸ்ரீ தசச்லோகீ ஸ்துதி.

" 9. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம், அத்வைதானுபூதி தத்வோபதேசம், ஸ்ரீ குர்வஷ்டகம் தந்யாஷ்டகம்.

" 10. ப்ரபோதஸுதாகரம் (பிரகரணங்கள் 1 to 15)

" 11. ப்ரபோதஸுதாகரம் (பிரகரணங்கள் 6 to 9), பஜகோவிந்தம், ஷட்பதீ, ஸ்ரீ கிருஷ்ணாஷ்டகம்

" 12. ஸ்வாத்மப்ரகாசிகா, அநாத்ம ஸ்ரீ விகர்ஹணம், நிர்வாணஷட்கம் ஸ்வரூபாநுஸந்தானாஷ்டகம், நிர்வாணமஞ்ஜரீ, ஜீவன்முக்த ஆநந்தலஹரீ.

" 13. அபரோக்ஷானுபூதி, வாக்யவ்ருத்தி

" 14. ஸ்வாத்ம நிரூபணம்.

" 15. சிவபாதாதி கேசாந்த வர்ணனஸ்தோத்ரம், தக்ஷிணாமூர்த்தி வர்ணமாலா ஸ்தோத்திரம், வேதஸார சிவஸ்தோத்ரம், காலபைரவாஷ்டகம், ஸுவர்ணமாலா ஸ்துதி.

**40 பாகங்களும் சேர்ந்து தபால் செலவு உள்பட**

**விலை ரூ. 60/-**